# நீங்கள் நினைக்கும் எந்த வண்ணமும், எந்த நிறமும், எந்த இடத்திற்கும், எந்த நிலைக்கும், தயாராகிவிடும் எந்த நிமிடத்திலும்

ந்த வண்ணமாயினும் சரி, மல் அல்லது எமல்ஷன் னும் சரி, மேட், ஷீன் அல்லது ளாஸ் ஆயினும் சரி, எந்த பாயினும் எவ்வித ஃபினிஷ் ினும் சரி கிடைத்திடும். களுக்கு தேவையானது ிடம் உள்ளது. இன்ஸ்டா புரியும் மாயம் இதுவே. தியாவின் முதல் உடனடி பிண்ட் தயாரிப்பு இதுவே. கள் தேவைக்கு, கலர் ு கார்டுகளை கேட்கவும்,




இல்லையேல், இன்ஸ்டாகலர் மையத்தை அணுகி, 626 ஷேடுகளில் ஒன்றை தேர்ந்தெடுக்கவும். கண் முன்னே கம்ப்யூட்டர் தயாரித்திடும் தேவையான கலரை ஏழு நிமிடங்களில்.

என்றுமே, உங்கள் ஆசை நிராசையாகாது. தட்டுங்கள், தரப்படும், நொடிகளில். இது முற்றிலும் உண்மையே.


Jenson & Nicholson (India) Limited

**ங்கள் எண்ணம், எங்கள் வண்ணம், அதுவே இன்ஸ்டா கலர்.**

ன தெரு, புரசைவாக்கம் மெட்ராஸ் 600 007 தொலைபேசி : 6427024/6426173, மெஸர்ஸ் ராம்லைன்ஸ் 189 ராசப்பா செட்டி தெரு மெட்ராஸ் 600 003 தொலைபேசி : 5351655/5654013, ரயப்பேட்டை ஹை ரோடு மெட்ராஸ் 600 004 தொலைபேசி : 4991286 காஞ்சிபுரம் : மெஸர்ஸ் கதிர்வேலு முதலியார் & சன்ஸ் 464 காந்தி ரோடு காஞ்சிபுரம் 631 501 ம்பத்தூர் : ஆனந்தா கார்ப்பொரேஷன் 29, மில் ரோடு கோயம்புத்தூர் 641001 தொலைபேசி : 395218/304950/392906, ஸ்ரீ பெரியநாயகி கார்ப்பொரேஷன் 21, வைசியாள் தெரு டு : வீரப்பன் & பிரதர்ஸ் 1305 மேட்டூர் ரோடு ஈரோடு 638 001 தொலைபேசி : 216193 திருப்பூர் : கார்த்தி ஏஜென்சீஸ் 105–A தாராபுரம் ரோடு திருப்பூர் 641 604 ர் ஃபேர்ம் 309 மேற்கு மாசி தெரு மதுரை 625001 தொலைபேசி : 741353/742446 கோவில்பட்டி: மெஸர்ஸ் சீதா ஹார்டுவேர்ஸ் 580, பஸ் ஸ்டாண்ட் லைபேசி : 24611



CONTRACT. J&N.225.96R TAM

# மங்கையர் மலர்

## ஆண்டு மலர்
## பிப்ரவரி '97

மலர் : 17

இதழ் : 1

### இவர்கள் சொல்கிறார்கள்....







### கதைகள்....





## மருத்துவம்....



## மாதந்தோறும் நம்மைக் கவரும்....





# ஒருநாளுக்கு ஒரே ரூபாய் செலவு!




## புத்தாண்டுப்பரிசு ஒரு டைரி இலவசம்

**கோர்ஸின் 25 புத்தகங்களுடன் வழக்கமாகப்பரிசளிக்கும் 6 பரிசுப்புத்தகங்களும் இலவசம்!**




### கே.வி.ஆர். ஆங்கிலக்கோர்ஸ் விவரங்கள்

ஒரு காபி குடிக்கக்கூட இதைவிட அதிகம் செலவாகும். ஐந்தே மாதங்களில் தபால் வழியாக ஆங்கிலம் கற்றுக்கொள்ளலாம். கே.வி.ஆர். தபால் வழி ஆங்கிலக்கோர்ஸின் 25 புத்தகங்கள் + கோர்ஸிற்குப்பயன் படும் 6 புத்தகங்கள் இவை யாவும் ரூ. 150/- க்கு வி.பி.பி. யில் அனுப்புகிறோம். தினமும் ஒரே ரூபாய்தான் செலவு. புத்தாண்டுப் பரிசாக ஒரு டைரியும் இலவசமாகப் பெறுங்கள்

### பரிசுப்புத்தகங்களின் விவரங்கள்

1. கே.வி.ஆர். இங்கிலீஷ் டிக்ஷ்னரி
   (ஆங்கிலம்-தமிழில் உச்சரிப்பு-தமிழில் அர்த்தம்)
2. வேர்ட் பவர் (ஆங்கிலச்சொற்களின் அற்புத சக்தி)
3. லெட்டர் ரைட்டிங் ப்ராக்டிஸ்
   (ஆங்கிலத்தில் கடிதங்கள் எழுதும் முறை)
4. அப்ரிவியேஷன்ஸ் டிக்ஷ்னரி
5. வெர்ப்ஸ் டிக்ஷ்னரி
   (வினைச்சொற்களும் அவற்றின் வடிவங்களும் )
6. சினோநம்ஸ் & ஆன்டனம்ஸ் டிக்ஷ்னரி
   ஆங்கிலச்சொற்களும் அவற்றின் நேர் எதிர்ச்சொற்களும்)



**இந்த நல்ல வாய்ப்பை உடனே பயன்படுத்திக்கொள்ளுங்கள்! இந்தக்கூப்பனைப்பூர்த்தி செய்து இன்றே அனுப்புங்கள்!**

**K.V.R. INSTITUTE** (Tamil Division)
P.B. NO. 1020, 77, Habibullah Road, T. Nagar, CHENNAI - 600 017.

எனக்கு முழுக்கோர்ஸின் 25 புத்தகங்கள் இலவச 6 பரிசுப்புத்தகங்கள் (கே.வி.ஆர். இங்கிலீஷ் டிக்ஷனரி, வேர்ட் பவர், லெட்டர் ரைட்டிங் ப்ராக்டிஸ், அப்ரிவியேஷன்ஸ் டிக்ஷனரி, வெர்ப்ஸ் டிக்ஷனரி சினோநம்ஸ் & ஆன்டனம்ஸ் டிக்ஷனரி மற்றும் புத்தாண்டுப்பரிசான இலவச டைரி) ஆகியவற்றை சேர்த்து வி.பி.பி. ரூ 150/-க்கு அனுப்புங்கள். நான் உடனேயே தபால்காரரிடம் பணத்தைச்செலுத்திப் புத்தகங்களைப் பெற்றுக்கொள்கிறேன்.

**முக்கிய செய்தி ☞ கம்ப்யூட்டரில் பத்திரப்படுத்திக்கொள்வதற்காக உங்கள் முழு விலாசத்தை ஆங்கிலத்தில் எழுதவும்.**

என் பெயர் : ..............................

என் முகவரி : ..............................

.............................. பின் கோடு : [ ][ ][ ][ ][ ][ ]




எல்லா பிரபல ஜவுளிக் கடைகளிலும் கிடைக்கும்.

## .....சில வார்த்தைகள்

இந்த மாதம் கொஞ்சம் சுயநலமாகவே சிந்திக்கத் தோன்றுகிறது. சுயநலம் என்றால் அவரவருடைய, ஒவ்வொருவருடைய வாழ்க்கை, உணர்வுகள், மனதினுள் இழையோடும் உணர்வுகள், இப்படி. இது 'சுயநலம்' தான் என்றாலும் பெண்களுடைய வாழ்க்கையைப் பொறுத்தவரை அவர்களின் உணர்வுகள் மொத்த குடும்பத்தையும் பாதிக்கிறது.



ஒரு ஆண் கல்வி கற்றால் அவன் அறிவாளியாகிறான்

ஒரு பெண் கல்வி கற்றால் அவள் குடும்பமே அறிவாளியாகிறது.

என்பதை நீங்கள் கேள்விப்பட்டு இருப்பீர்கள். கல்வி என்பதற்கு மட்டுமேயல்ல, அவளுடைய அனைத்து உணர்வுகளுமே குடும்பத்தில் எதிரொலிக்கத்தான் செய்கிறது.

சரி, விஷயத்திற்கு வருவோம். நம்முடைய வாழ்க்கையில் நடந்த பல நல்ல சம்பவங்களை நினைத்துப் பார்ப்போம். அவரவர் வீடுகளில் நடந்த திருமணம், வளைகாப்பு, பிறந்தநாள், இன்னும் எத்தனை எத்தனை விசேஷங்கள்... மற்றவர்களினாலோ, நம்மாலேயோ கூட உணர்வுகள் பாதிக்கப்படுகிறது. மிகச் சந்தோஷமாக செலவழிக்க வேண்டிய உல்லாசப் பயணத்திலே முகத்தை ஒரே ஒரு பெண் மட்டும் 'உம்'மென்று வைத்திருப்பாள். கலகலப்பாக நடந்து கொண்டிருக்கும் கல்யாணத்திலே ஒருத்திக்கு மட்டும் மகாகோபம் இருக்கும். குழந்தைகளும், குதூகலமுமாக நடக்க வேண்டிய பிறந்த நாள் நிகழ்ச்சியிலே சுருண்டு கொண்டு ஒருத்தி மட்டும் படுத்துக் கொண்டு கிடப்பாள்.

# இனிமையை இழக்காமல் இருப்போம்

அந்த ஒரு பெண்ணின் கோபம், ஆத்திரம், மனத்தாங்கல் எல்லாம் அவள் மனதிலிருந்து புறப்பட்டு அலை அலையாக சுற்றுப்புறத்தை எரித்துக் கொண்டிருக்கும். அவளே அந்த நிகழ்ச்சிகளின் முக்கிய கர்த்தாவாக இருந்து விட்டால் இன்னும் கேட்கவே வேண்டாம். சிரிப்பும் குதூகலமும் ஒளிந்து ஒளிந்து பதுங்கிக் கொள்ளும். எல்லோரும் ஒருவித பயத்துடனேயே நடமாடிக் கொண்டிருப்பார்கள்.

இந்த சுற்றுப்புறச் சூழலை விடுங்கள். அந்தப் பெண்ணுக்கே அது எத்தனை நஷ்டம் என்பதை அப்போது அவள் உணராமல் போகலாம்.

ஒன்று மட்டும் நிச்சயம். நம் வாழ்க்கையில் எந்த ஒரு நிகழ்ச்சியும் மீண்டும் நடக்கப் போவது இல்லை. அதனால்தான் தினம் தினம் புதிய தினமாக மலருகிறது. புதிய நாள், புதிய வாழ்க்கை, புதிய சமையல் எல்லாமே....

இந்த வகையில் ஒவ்வொருத்தரும் நினைத்துப் பார்த்தால் அவரவர் வாழ்க்கையில் இழந்த சந்தோஷங்கள் நிறைய இருக்கும். ஆத்திரம் கண்ணை மறைத்ததால் கோபமும் குரோதமுமாக, மறக்க முடியாத நாளின் மகிழ்ச்சியை இழந்திருப்போம். மீண்டும் அந்த நாள் வரப்போவதில்லை, அந்த நிகழ்ச்சி நடக்கப் போவதில்லை.

கணவனோடு கொண்ட கோபத்தால் உல்லாசப்பயணம் முழுக்க குழந்தைகளோடும் கலகலப்பாகப் பழகாமல் வெறுப்பு மட்டுமே சிந்திக் கொண்டு...

- மஞ்சுளா ரமேஷ்

புதிய இடத்தைப் பார்த்து புதிய காற்றை சுவாசித்து.... இவை எதுவுமே இல்லாமல் நம் மனத்தில் மீண்டும் மீண்டும் நடந்து போன நிகழ்ச்சி மட்டுமே தோன்றிக் கொண்டே இருக்கும். எனவே கண் பார்க்க வேண்டியதை, ரசிக்க வேண்டியதை ரசிக்காது. காது இனிய ஒலிகளைக் கேட்காமல் போய்விடுகிறது. மனம் முழுக்க வெறுப்பு மட்டுமே மண்டிக் கிடக்கிறது. பத்து வருஷம் கழித்து நினைத்துப் பாருங்கள். இப்படி எத்தனையோ விஷயங்களை உங்கள் நினைவேட்டில் புரட்டிப் பாருங்கள்....

இழந்து போன சந்தோஷங்கள் நிறைய இருக்கும். காரணங்கள் ஆயிரமாகத்தான் இருக்கட்டுமே. ஆனால் நல்ல நாட்களில் நம் மனம் மூடிக்கிடக்குமானால் நம்மால் புதுக் காற்றை சுவாசிக்க முடியாமல் போய்விடுகிறது. அறிவு மழுங்கியே போய் எத்தனை உன்னதங்கள் வெளியே இருக்குமானாலும் அவை உள்ளே புகாமல் இருந்து விடுகிறது.

நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம். நம் கோபத்திற்கு முழு அர்த்தமும் இருக்கிறது. தக்க சமயத்தில், சரியான தருணத்தில் பழிக்குப் பழி வாங்கிவிட்டோம் என்று. நம்மை அவமானப்படுத்திய சம்பந்தியை மிகச் சரியாக அவர் பெண்ணின் கல்யாணத்தில் அவமானப்படுத்தி விட்டோம். 'என்னை அந்த ஃபங்க்ஷனிலே அந்த வார்த்தை கேட்டா இல்ல, இப்ப சரியா எங்கிட்டே மாட்டிண்டா நல்லா நாக்கை பிடுங்கிக்கிறா மாதிரி கேட்டுட்டேன். கந்தலும் அவங்க மனுஷங்களா?' ஒன்றும் பேச முடியலை' எனக் கெக்கலிக் கொட்டிச் சிரிக்கிறோம். வெற்றிக் கொடி நாட்டுகிறோம். ஆனால் என்ன பிரயோஜனம்? அதற்கப்புறம் அவள் முகம் இருண்டு போனது. அவமானத்தால் தலை கவிழ்ந்து போனதெல்லாம் இருக்கட்டும். நமக்கு அப்புறமா அங்கே ரசிக்க முடியலையே, மனம் விட்டுச் சிரிக்க முடியலையே, ஆத்மார்த்தமாக பேசமுடியலையே....

மனசாட்சியைத் தொட்டுப் பாருங்கள். இப்படி நடக்கும் போது வெளியே பழிக்குப்பழி வாங்கிவிட்டோம் எனச் சந்தோஷப்பட்டாலும் கூட உள்ளுக்குள் ஏதோ ஒன்று 'குறு குறு' வென்கிறதா? அதற்குப் பெயர்தான் குற்ற உணர்வு என்பது. ஏதோ தவறு செய்துவிட்டது போல உணர்வு.

அதை விட போனால் போகிறது அவளுக்குத் தெரிந்தது அவ்வளவுதான் என தள்ளி விட்டு அந்தக் குறிப்பிட்ட நிகழ்ச்சியில் ஆத்மார்த்தமாக சந்தோஷமாக இருந்து பாருங்கள். மனத்தில் பொங்கும் பெருமிதம் இருக்கிறதே அதற்கு ஈடு இணை வேறேது? குறிப்பிட்ட நபர்களே வெட்கிப் போவார்கள்.

வாழ்க்கை என்பது அவ்வளவுதான். வாழ, நல்லவிதமாக, உன்னதமாக வாழ நாம் பிறந்திருக்கிறோம். ஒவ்வொருவரின் வாழ்க்கையிலும் தோல்விகள், துரோகங்கள், வருத்தங்கள்... இதிலே என்ன வேடிக்கையென்றால் 'ஆண்டவனே, என்னை மாதிரி யாரும் கஷ்டப்பட வேண்டாம்மா' என்பார்கள். 'எனக்கு வந்த சோதனைகள் மாதிரி யாருக்கும் வந்திருக்காது. இன்னொருத்தர் இன்னொருத்ரா இருந்தா இந்த வேலைக்கு வுழுந்த இடம் புல்லு முளைச்சு போயிருக்கும். நானா கண்டி. இத்தனையும் தாங்கிக்கிட்டு நிக்கறேன்' என்பார்கள். இதனால் என்ன ஆகிறது? நம்முடைய கோபம், ஆத்திரம், குரோதம்தான் நியாயமானது. அதற்குப் பதில் கிடைத்தே ஆக வேண்டும் என்பதில் ரொம்ப முனைப்பாக இருந்து 'ஹனிமூனில்' கூட வெறுத்துக் கொள்ளும் நிலை வரலாம்.

அதற்குத்தான் சொல்கிறேன், மறக்க முடியாத சம்பவங்கள் என வாழ்வில் வரும்போது அதை எப்போதும் இனிமையான நினைவுகளாகவே சுமக்க வேண்டும். அதை ஒரு இழந்து போன சந்தர்ப்பமாக நினைத்து அதற்கப்புறம் வருந்த வேண்டாம் என்பதுதான்.

தம்பி கல்யாணத்திலே அத்தனை நிஷ்டூரமாக பேசியிருக்க வேண்டாமோ? என அப்புறம் வருத்தப்பட்டு என்ன பிரயோஜனம்? சண்டை போட்டு வாங்கிக் கொண்ட ஜான் அகல கெட்டிக்கரை ஜரிகைப் புடைவையா நமக்கு வாழ்நாளெல்லாம் நினைத்துச் சந்தோஷப்பட வேண்டிய தம்பி கல்யாண நினைவுகளைத் தரப்போகிறது? கண்ணோரமாக நீர் கசிய வெளியே காண்பிக்காமல் சுற்றிச் சுற்றி வந்த தாயாரின் மனக்குமுறல்கள் உள்ளத்தின் மூலையில் எங்கேயோ உறுத்தவில்லையா?

பிரச்னைகள் இருக்குமானால் அதைச் சாதாரணமாகப் பேசித் தீர்த்துக் கொள்ள முடியும் என்பதே நிறைய பேருக்கு மறந்து விட்டது. குத்தலையும், கேலியையும் பின்னிப் பின்னிப் பேசும் வல்லமையை வளர்த்துக் கொள்வதில் குறியாக இருப்பவர்கள் எத்தனை பேர்! இது சொறி சிரங்கினை சொரிந்து சொரிந்து இன்பம் காண்பது போலத்தான். அதனால் அந்த வேளைக்குக் குரூர இன்பமாக இருக்குமே தவிர ரத்தமும் சீழுமாகத்தான் ஆகும். வியாதிக்கு மருந்து போட்டால்தான் வியாதி தீரும். நெருப்பை அணைக்க தண்ணீரைத்தான் விட வேண்டும் என்பதெல்லாமே நமக்குத் தெரிந்த பழமொழிகள்தான். சமயத்தில்தான் நினைவுக்கு வர மாட்டேன் என்கிறது.

போனது போகட்டும். இனியாவது இன்பமான நாட்களில் இன்பத்தை மட்டுமே வரவேற்போம். துக்கச் சுமையைச் சுமக்க வேண்டாம். மறக்க முடியாத இனிய சம்பவங்கள் இனிமையை மட்டும் தரும் சம்பவங்களாக இருக்கட்டுமே. அடடா, நாம அன்றைக்கு 'மிஸ்' பண்ணிட்டோமே' என்று எந்த மிஸ்ஸையும் அல்லது 'மிஸ்'ஸையும் நினைத்து வருந்த வேண்டாமே!

அதிக சக்தி, பல வகை செயல் திறன் கொண்ட
முழுமையான ஒரு மிக்ஸியை அறிமுகம் செய்த
"ப்ரீதி" யிடமிருந்து மேலும் ஒரு புதுமை

**ரூ 1150/- மதிப்புள்ள**

# காபி மேக்கர் இலவசம்

## Preethi CHEFPRO
HEAVY DUTY
Mixer / Grinder



- முப்பது நிமிடம் தொடர்ந்து இயங்கும், அதிக சக்தி வாய்ந்த 550 வாட் மோட்டார்.
- மூன்று பெரிய S.S. ஜார்கள் (1.5. லிட்டர், 1 லிட்டர், 0.7 லிட்டர்)
- சிறப்பாக வடிவமைக்கப்பட்ட ஐந்து S.S. பிளேடுகள்.
- குறைந்த மற்றும் அதிகமான அளவையும் எளிதில் அரைக்கும் திறன்.
- இரண்டு வருட உத்திரவாதம். ஆயுட்கால இலவச சர்வீஸ்.

**நொடியில் பொடியாக்கும் திறன்:**



## Preethi DRIPCAFE-6
COFFEE/TEA MAKER

- சுவை மற்றும் மணம் அதிகரிக்கிறது.
- இரண்டு நிமிடங்களில் ஒரு கப் டிகாக்ஷன்.
- காபி, டீ தூளை அதிகப்படியாக மிச்சப்படுத்தும்
- ஆட்டோ கட் ஆப் வசதி.
- ஒரு வருட உத்திரவாதம். ஆயுட்கால இலவச சர்வீஸ்

இலவசம் காபி மேக்கர் ரூ1150

**அதிவிரைவில் நறுமணமுள்ள ஃபில்டர் காபி**


**டி. ஏ. டெய்லர் பிரைவேட் லிமிடெட்**

8, போட் கிளப், 1வது அவின்யு, சென்னை - 600 028.

போன் : 4347963, 4341512 ∴பேக்ஸ்: 044 - 4343524, சேலம்: 413331 (P.P.)

மதுரை - 621376, திருச்சி - 704465, கோயம்புத்தூர் - 397322, பாண்டி - 38821 (P.P.)



சில க்ஷேத்திரங்களுக்குப் போகும் போதே அதன் அழகும், சுற்றுப் புறச் சூழலும், அற்புதமான மோனமும் நம்மை ஒரு மௌன நிலைக்கு இழுத்துச் செல்லும். அது திருவயிந்திரபுரத்திற்குப் போன போது கிடைத்தது.

கடலூருக்கு மிக அருகிலுள்ள க்ஷேத்திரம் திருவயிந்திரபுரம். அல்லது திருவஹீந்திரபுரம். மைசூரிலுள்ள பரகாலமடத்து லக்ஷ்மி ஹயக்ரீவரைப் பற்றி எழுதி இதழ் வெளி வந்த நாட்கள். ஒரு பிரபலமான பிரமுகரிடமிருந்து (பெயர் கண்டிப்பாகப் போடக் கூடாது என உத்தரவு!) போன் வந்தது.

"இதோ நம்ம தமிழ்நாட்டிலே ஹயக்ரீவர் அற்புதம் குடிகொண்டிருக்கிறார். அவர விட்டுட்டு நீங்க எப்படி மைசூர் போகலாம்!" என உரிமையோடு சண்டை போட்டார். கண்டிப்பாக போகிறோம் என அவரைச் சமாதானப்படுத்தி,





# புராணங்கள் பேசும்



எப்போ நமக்கு இந்த ஹயக்ரீவரை தரிசிக்கும் பாக்கியம், சந்தர்ப்பத்தை அந்த வைகுந்த பெருமாள் கொடுப்பார் எனப் பார்த்திருந்தோம். விரைவிலேயே வந்தது.

கடலூருக்கு மிக அருகிலுள்ள திருவஹீந்திரபுரத்தில் ஔஷத கிரியில் குடிகொண்டுள்ளார் யோக ஹயக்ரீவர். அந்தச் சிறிய குன்றின் கீழே தேவநாத ஸ்வாமி குடிகொண்டுள்ள திருக்கோயில். நம் புண்ணிய பாரத பூமியில் அநேக நதிகள் கிழக்கு மேற்காகத்தான் ஓடுகின்றன.

சில நதிகள் மட்டுமே வடக்கு தெற்காக



ஓடி உத்தரவாகினி எனும் பெயரைப் பெற்றுள்ளன. அப்படி இங்கு கருடநதி வடக்குத் தெற்காக ஓடி தேவநாதனைத் தன் அலைகரத்தால் துதி பாடுகிறது. எங்கு நோக்கினும் பச்சைப்பசேலென பூமி, மரங்கள், குன்றுகள், அற்புதமான நதி தீரம். சிறிய குன்று, குன்றின் கீழ் பெருமாள் கோவில். என்ன அழகு, என்ன அழகு. அங்கேயே நாளெல்லாம் அமர்ந்து கொண்டிருக்கலாம் போலிருக்கிறது. அப்படிப்பட்ட ஒரு ஈர்க்கும் ஆன்மீக அழகு அங்கு இருந்ததால்தான் ஸ்ரீமத் நிகமாந்த மஹா தேசிகர் நாற்பது வருடங்களுக்கும் மேலாக இந்தத் திவ்ய தேசத்தில் தங்கியிருந்து பெருமானை பாடிப் பரவசமாகி இருக்கிறார்.

இக்கோயில் திருப்பணிக் கமிட்டியின் தலைவர் என்.எஸ். ரங்கநாதன் கோயிலின் சிறப்பையெல்லாம் நம்மிடம் சொல்லி கோயிலுக்குள் அழைத்துச் சென்றார். மிகப் பழங்காலக் கோயில் என்பது பார்க்கும் போதே தெரிகிறது. திருவஹீந்திரபுரத்தின், இத்தல மகிமையை மூன்று புராணங்கள் பேசுகின்றன என்பதிலிருந்தே இதன் பழமையைத் தெரிந்து கொள்ளலாம். ப்ரமாண்ட புராணம், ஸ்கந்தபுராணம், ப்ரஹன் நாரதிய புராணம் எனும் மூன்று புராணங்களில் திருவஹீந்திரபுர மகிமை வருகிறது. மார்கண்டேய மகரிஷி லக்ஷ்மி தேவியின் அவதாரமான தன் மகளுடன் இங்கு தவமியற்றியதாகவும், அவள் மணந்த தேவநாத சுவாமியுடன் அங்கேயே காட்சி தந்ததாகவும் ப்ருகந்நாரதிய புராணம் சொல்கிறது. மார்கண்டேய மகரிஷிக்கும் தன்

# ண்ணியநாதன்!

சந்நிதியிலேயே இடம் அளித்துள்ளார் பெருமான். ப்ருகு முனிவர் தன் புத்திரி பார்கவியுடன் இங்கு தவமியற்றியதாக ஸ்கந்த புராணம் சொல்கிறது. பிரம்மாண்ட புராணமும் இதனையே சொல்கிறது. தேவாசுர யுத்தத்தில் தேவர்களுக்கு அருள்புரிந்த தேவநாதன் விசுவரூபம் எடுத்ததாக புராணங்கள் பேசுகின்றன. அசுர யுத்தத்தில் அந்த சங்கரனுக்கும் உதவியதாகவும் சொல்கின்றன.

இப்படிப்பட்ட பெருமைகள் இருந்ததால்தான் நடுநாடு என நூற்றியெட்டு திவ்விய க்ஷேத்திரங்களுள் ஒன்றாக இத்திருத்தலம் விளங்குகிறது. இங்கு குடிகொண்ட தேவநாதனுக்கு நீர் கொணர ஆதிசேஷன் பூமியைப் பிளக்க, கருடன் ரிஷியின் கமண்டலத்திலிருந்து நீர் கொணர இரண்டும் இரண்டு தீர்த்தங்கள் ஆயின. சேஷ தீர்த்தமும், கருடநதியுமே அவைகள். இப்படி அளவிலா பெருமை



யுடைய இத்தலத்தையே தன் ஆன்மீக ஞானத் தேடலின் இடமாக தேர்ந்தெடுத்த தேசிகர் மலைமேலே பல காலம் தவம் புரிந்திருக்கிறார். இந்த மகானின் தவம் கண்டு மகிழ்ந்த கருடாழ்வார் இவருக்குக் காட்சி தந்து யோக ஹயக்ரீவரை வழங்கி, 'இதை வழிபட்டு வா, நீ விரும்பிய ஞானம் கிடைக்கும்' என அருளிச் சென்றாராம்.

மஹா பவித்ரமான ஔஷதகிரியில் யோக ஹயக்ரீவரை ஆராதித்து வந்த தேசிகர் அளவு கடந்த ஞானத்தையும், தெளிவையும் பெற்றார். 'கவிதார்க்கிக சிம்மம்' என அனைவரும் போற்றும் அளவிற்கு மஹாஞானியாக ஆனார். இவர் வாழ்ந்த அந்த இடம் இன்றும் 'ஸ்ரீ தேசிகன் திருமாளிகை' என்றே வழங்கப் பெற்று வருகிறது. இவ்வளவு திவ்விய சரிதங்களைக் கொண்ட ஆழ்வார்கள் பாடிப்பாடி பரவசமான அந்தத் தேவநாத சுவாமியைக் காண கண்கோடி வேண்டும்.

அங்கு அந்த எம்பெருமானை ஆராதித்து, அழகுபடுத்தி, உருகி மகிழும் நீலமேக பட்டாச்



சார்யாரும், நரசிம்ம பட்டாச்சார்யாரும் 'அவன் அருளை' அப்படிச் சொல்கிறார்கள்......

"இந்த பெருமாளின் அழகு காணக் கிடைக்காதது. எப்போதும் மலர்ந்த முகத்தோடு, பக்தர்கள் வரும்போது 'என்ன சௌக்கியமா' எனக் கேட்பது போல 'சௌலப்யமாக' இருப்பார். எப்போதும் கனிவு, எப்போதும் சிரிப்பு. அழகு படுத்தி அலங்காரம் பண்ணி நாளெல்லாம் சேவிச்சுண்டே இருக்கலாம். எத்தனை ஜென்மாக்கள் பண்ணின புண்யமோ, இத்தனை சௌலப்யமான பெருமாளை ஆராதிக்கும் பெருமை எங்களுக்குக் கிடைச்சது" என்று உருகி உருகி மகிழ்ந்து போகிறார்கள்.

தேவநாதஸ்வாமி எத்தனை அழகோ அத்தனை சௌந்தர்யம் தாயாரும். முனிவர் மகனாகத் தோன்றி உலகளந்த நாயகனை மணந்த ஆனந்தவல்லி அல்லவா இவள். இந்தத் தாயாருக்கு எத்தனை சுந்தரமான பெயர்கள் தெரியுமா? ஹேமாம்புஜவல்லி, பார்கவி, தரங்கமுக நந்தினி, அம்புருகாவாஸினி. தேவநாதன் மட்டும் என்ன. அவனுக்குண்டான பெயர்களை மார்கண்டேய முனிவரே கூறுகிறார் பாருங்கள்,

"சந்திர சூரியனுடைய தேஜஸ்ஸை அவைகளின் மண்டலங்களில் இருந்து பிரகாசிக்கிற படியால் 'ஸ்திர ஜ்ஜோதிஸ்' என்கிற திருநாமம் பெறுகிறீர்! யோகிகளுடைய மனதிலே நின்று அவர்களின் பாவத்தைப் போக்குவதாலே 'அனகஜ் ஜோதிஸ்'! பிரஹலாதன் வாக்கை மெய்ப்பிக்க பூமியிலே அவதரித்தவன் என்பதாலே 'தாஸ ஸத்தியன்'!"

என அவர் துதித்தது மட்டுமல்லாமல் விபூதநாதன், மூவர்க்கீய ஒருவன்... என இன்னும் பல நாமங்கள் இந்தத் திவ்யதேச மங்கள நாயகனுக்கு.

இன்னும் சொல்லப் போனால் ஆதிசேஷன் எல்லா நகரங்களுக்கும் மேலாக அணிகலன் போல இந்நகரத்தைப் படைத்ததால் 'அஹிந்திர



புரம்' எனப் பெயர் பெற்றதாம். சாதாரணமாக தானம் கொடுப்பவர்கள் புண்ணியம் பெறுவார்கள், தானம் வாங்குபவர்கள் தோஷம் கொள்வார்கள். ஆனால் எம்பெருமான் கடாட்சத்தால் இவ்வூரிலே இவ்விருவரும் சம புண்ணியத்தை அடைவதாகக் கூறுகிறார்கள். மற்ற நதிகளிலே ஸ்நானம் பண்ணும் போது இங்கே ஓடும் 'கருட நதியை' நினைத்தாலே புண்ணியமாம் இப்படி ஏராளமாக திருத்தலத்தின் மகிமைகளைச் சொல்லிக் கொண்டே போகலாம்.

சௌலப்யமாக நமக்கு அருளும் தேவநாதனை மனம் உருகி வணங்கி வெளியே வந்தால் அழகுக்கே அழகு செய்யும் ரூபன் ஸ்ரீராமச்சந்திர சுவாமியின் சந்நிதி. சீதாதேவி லக்ஷ்மண, அனுமத் சமேதராக கோதண்டராமன் காட்சி தருகிறார்.

"இராமலிங்க ஸ்வாமிகள் வடலூருக்குச் செல்லும் முன் கடைசியாக இந்த இராமர் சந்




அனைவரையும் மகிழ வைக்கும் டிசைன்களில் வியத்தகு விலைகளில்
உங்கள் பட்டுக் கனவுகளை நிஜமாக்கிட ஹயக்ரீவாவிற்கு வருகை தாருங்கள்.

---

# Hayagriva Silk House

*(Silk Cloth Merchants)*

70, G. N. Chetty Road, T. Nagar, Chennai - 600 017. Ph: 8234989 / 8230939.

**அழகிய இல்லம், அறுசுவை உணவு + ஹயக்ரீவா பட்டுகள் !**

நிதியில் நின்று மனம் கசிந்துருகிச் சென்றார்" என்று பட்டாச்சார்யார் சொன்னபோது, அப்போதுதான் வடலூரிலிருந்து இங்கே வந்த நமக்கு இறைவனின் திருவிளையாடலை நினைத்து வியக்காமல் இருக்க முடியவில்லை.

பரமானந்தமான கோயிலும், பரமானந்தமாக பெருமாளுக்கு சேவை சார்த்தி வரும் பட்டாச்சார்யார்களுமாக உள்ள அத்திருத்தலத்தில் நிற்கிறோம். கோயிலுக்கு வெளியே ஔஷதகிரி. முழுக்க முழுக்க மூலிகைகள் நிறைந்த மலை. ஹயக்ரீவர் மந்திரத்தை ஸ்ரீமத் அப்புள்ளாரிடம் பெற்று அயிந்தை அணுகித் தவம் புரிந்து ஹயக்ரீவனை பிரத்யக்ஷமாகக் கண்ட ஸ்ரீதேசிகன் தவம் கொண்ட மலை. மேலே ஏறுகிறோம். சிலுசிலுக்கும் காற்றும், கண்ணுக்குத் தெரிந்த தூரம் வரை நதிதீரமும், ஊரும், மலையும், அழகும் எங்கும் கொட்டிக் கிடக்கின்றன. அம்மலையிலே இன்று ஸ்பிக், ஜே.கே.



பார்மா, ஈஐடி பாரி போன்றவர்களெல்லாம் போட்டி போட்டுக் கொண்டு திருப்பணிகள் செய்து வருவதாக ரங்கநாதன் சொன்னார்.

கோயிலுக்குள் போகிறோம். யோகஹயக்ரீவரைக் கண்டு மனம் கசிந்து நிற்கிறோம்.

"ஜ்ஞாநா நந்தமயம் தேவம் நிர்மலஸ்படிகாக்ருதிம்!

ஆதாரம் ஸர்வ வித்யாநாம் ஹயக்ரீவ முபாஸ்மஹே"

எனத் தொடங்கும் ஹயக்ரீவ ஸ்தோத்திரம் அத்தனை உன்னதமானது. படிக்கும் குழந்தைகள் ஒவ்வொருவரும் இந்த இரண்டு வரிகளைத் தினமும் சொல்லி ஹயக்ரீவரை பிரார்த்தனை செய்தாலே போதும் கல்வியும் ஞானமும் நமக்குக் கிடைப்பதை பிரத்யட்சமாகக் காணலாம்.

"என்னுடைய தொழிலில் தெளிவு மிகவும் முக்கியம். எந்தவித குழப்பமும் இல்லாத மிகத் தெளிவாக இருந்தால்தான் நான் எனக்கு முன் இருக்கும் பிரச்னைகளுக்குத் தீர்வு சொல்ல

இல்லங்களுக்கும்
அலுவலகங்களுக்கும்
அத்தியாவசியம்

# Hertel plus மட்டுமே

# எல்லாவித எண்ணெய்ப் பிசுக்குகளையும் முரட்டுக் கறைகளையும் உடனடியாக நீக்குகிறது !

ஸ்ப்ரே செய்து துடைக்கவும்.
தேய்க்கவோ, கழுவவோ வேண்டாம்.

கனடாவிலிருந்து உலகத் தரமானதோர் தயாரிப்பு.

**எங்கு பயன் படுத்துவது :** சமையலறை மேடை, சமைக்கும் பகுதியிலுள்ள எண்ணெய்ப் பசை, பர்னரின் மீதான எண்ணெய், மஞ்சள் பொடி கறைகள், சமையலறை சிங்கின் கறைகள், ப்ரிட்ஜ் மீதுள்ள கறைகள், A.C. கிரில்கள், சமையல் கருவியின் மீதான துரு மற்றும் கறைகள், சுவற்றின் மீதுள்ள கிரையான் பென்சில் கிறுக்கல்கள், *போர்மைகா/லேமினேட்டுகள் மீதான பால் பேனா திட்டுகள், மொஸைக்/பளிங்குக் கற்களிலுள்ள கறைகள், ப்ளாஸ்டிக் நாற்காலிகள்... மற்றும் பல கறைகள் மீது பயன்படுத்தலாம்.



- வேகமாக பீச்ச அல்லது மெலிதாக ஸ்ப்ரே செய்ய உதவும் வகையில் இதன் பிரத்யேக பம்ப் மாற்றியமைக்கும் வசதி கொண்டது. அமெரிக்காவிலிருந்து இறக்குமதி செய்யப்படுகிறது. பல வருடங்கள் நீடிக்கும். தொல்லை தராது. சிதறாது. வீணாக்காது. ஆனால் அதிக சிக்கனம் தந்திடும்.
- ஸ்ப்ரே செய்யும்போது வலுவான பிடிப்பு தருவதற்கென வளைந்து குழிந்த வடிவமைப்பு தரப்பட்டுள்ளது.
- உபயோகத்திற்குப் பிறகு மண்ணோடு மண்ணாக மக்கிவிடும் தன்மை கொண்ட இதன் புட்டி, சுற்றுப்புறச் சூழலுக்கு சாதகமானது. உயிருக்கு தீங்கு விளைவிக்காதது.

**இது நவீனமானது... இது உலகத்தரமானது... மிகச் சிக்கனமானதும் கூட.**

இன்றே **ஹெர்டெல் ப்ளஸ்** வாங்கிடுங்கள். உங்கள் வீட்டை பளிச்சென்று சுத்தமாக்கிடுங்கள்.

இலவச விவர நூலுக்கு எழுதுங்கள் :

*பீச்சர் ஹோம் ப்ராடக்ட்ஸ் பிரைவேட் லிட் (அட்லான்டிக் ப்ரோமோஷன்ஸ் இன்கார்ப்பொரேட், கனடாவுடனான கூட்டுத்தயாரிப்பு)

முதல் மாடி, 13 வது அவென்யூ தெரு, நுங்கம்பாக்கம், சென்னை - 600 034. போன் : 826 3306/825 4897



தொடர்
சிறப்பு சேமிப்
சிறந்த சிக்கனத்திற்கு 500 மி.லி. 1 லிட்டர்
4 லிட்டர் *பில் பாக்குகளில் கிடை

முடியும். டென்ஷனோ, கோபமோ படவே கூடாது. அந்தத் தெளிவினைத் தருவது இந்த ஹயக்ரீவர்தான். நானும் ஹயக்ரீவரைத் தொழுத பின்னரே நான் என் வேலைகளைத் தொடங்குகிறேன்.

நான் உங்கள் பத்திரிகை மூலமாகச் சொல்லிக் கொள்ள விரும்புவதெல்லாம் ஒவ்வொரு தாயும் தன் குழந்தைக்கு இந்த ஹயக்ரீவ மந்திரத்தைச் சொல்லித்தர வேண்டும். கல்விக்குக் கண்கண்ட தெய்வம் ஹயக்ரீவன். அவர்கள் இந்த மந்திரம் சொல்லச் சொல்ல அவர்களிடம் ஏற்படும் மாற்றங்களை நீங்களே உணரலாம்" என்றார் நான் ஆரம்பத்தில் குறிப்பிட்ட 'அந்தப் பிரமுகர்'....

நாங்கள் ஹயக்ரீவரைத் தரிசித்துக் கொண்டிருந்த போது மெய்சிலிர்த்துப் போய் ஒரு தம்பதி சொன்னார்கள் –

"கும்பகோணத்திலே ஒரு நாடி ஜோதிடர் என் பெண்ணுக்காக இங்கு ஹயக்ரீவரைத் தரிசிக்கச் சொன்னார்கள். நாங்கள் வர்றதுக்கு நேரமாயிட்டது. அதனால் இந்த நேரத்திற்குக் கண்டிப்பாக மலைக் கோயிலை மூடியிருப்பார்கள் என்றார்கள். ஆனால் அந்த ஹயக்ரீவன் அருளால் தரிசனம் கிடைத்தது" என்றார்கள்.



இப்படி இங்கு கிரகதோஷ பரிகாரத்திற்காகவும் நிறைய பேர் வருவதாக நீலமேக பட்டாச்சார்யார் கூறினார். ஞானசம்பத்தினைத் தரும் ஹயக்ரீவரை வணங்கிக் கிளம்பினோம்.

இந்த பாரத பூமி எத்தனை ஞானபூமி. இதிலேதான் எத்தனை க்ஷேத்திரங்கள், எத்தனை மகிமைகள், எவ்வளவு மகான்கள். நினைக்க நினைக்க பெருமிதத்தில் மனம் பொங்கியது. நாம் இங்கு பிறந்து இவற்றையெல்லாம் தெரிந்து கொள்ள எத்தனை புண்ணியம் செய்திருக்க வேண்டும்....!

— மஞ்சுளா ரமேஷ்

படங்கள் : ஜி. சுரேஷ்

## அடேடே அரிசி உப்புமா!

சாதாரணமாக நாம் வறட்டு அரிசியை உடைத்துதானே உப்புமா செய்கிறோம். அதுவே தேவையான அரிசியை ஒருமுறை களைந்து ½ மணி நிழலாட உலர்த்தி மிக்ஸியில் உடைத்து உப்புமா செய்ய உப்புமா வெள்ளை வெளேர் என்றும் வழக்கத்தை விட மெத்தென்றும் இருக்கும்.

¼ படி அரிசி நொய்க்கு 1 பிடி பயத்தம் பருப்பு, ½ மணி ஊற வைத்து கொதிக்கும் நீரில் போட்டு வடித்து எடுத்து அரிசி நொய்யுடன் சேர்த்து உப்புமா தயாரிக்க உப்புமா அமர்க்களம்தான்.

அரிசி உப்புமாவிற்கு உடைக்கும் முன் அரிசியை ஒருமுறை வாணலியில் (எண்ணெய் இன்றி) சிறிது சூடுபடுத்தி ஆறிய பின் நொய் உடைக்க அதிவிரைவில் அரைபடும். இந்த நொய்யில் செய்த உப்புமா பொரிமா வாசனையுடன் சுவையாக இருக்கும்.

கோஸ், காரட், பட்டாணி இவற்றின் கலவை (தாளித்ததில் தாளிக்கவும்) அரிசி உப்புமாவின் சுவையை அதிகரிக்கும்.

தாளித நீர் கொதித்த பின் நொய் சேர்த்தால் உப்புமா கட்டி தட்டிட வாய்ப்பு உண்டு. இதைத் தவிர்க்க உப்புமாவிற்கு தாளித்த பின் அரிசி நொய்யைக் கொட்டி தாளிதத்தில் நன்கு பிரட்டி பின் நீர் சேர்க்க உப்புமா கட்டியே தட்டாது.

தேங்காய் இல்லாவிட்டால் ஒரு வெங்காயத்தைப் பொடியாக நறுக்கி வதக்கி செய்யலாம்.

இதில் சேர்க்கும் ப. மிளகாய், இஞ்சியை பெரியோர், குழந்தைகள் கூட (ஏன் வாஷிங்டனில் திருமணம் ராக்பெல்லர் மாமி கூட hot hot என்று கதறி அவரின் சிவந்த முகம், இன்னும் சிவந்தது ஞாபகத்திற்கு வந்தது) எறிவர். அதையே ப. மிளகாய், இஞ்சியை நன்கு அரைத்துத் தாளித்து பின் நீர் சேர்க்க No காரம்.

உப்புமா குறிப்பு பத்துமா....?

— லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்

# சொல்ல விரும்புகிறோம்!

◆ வெ. ஜானகியின் ''பிம்பங்கள்'' சிறுகதை குள்ளநரித்தனமாய் அப்பாவி வேடமிட்டுக் கொண்ட கணவனால், ஏதுமறியா வெகுளி அம்மா மகளால் வெறுக்கப்படுவதை வாசிப்பவரின் கண்களில் நீர் கசியும் வண்ணம் எழுதப்பட்டிருந்தது.

பரமக்குடி, பா. உஷாராணி

◆ 'மனைவி' கதையில் வருவது போல கணவன் தன் கடமையிலிருந்து தவறி, நண்பனுடன் அரட்டை அடித்துவிட்டு, நிம்மதியாக சாப்பிட்டு முடித்து, படுக்கை அறையில் மனைவியிடம் 'ஸாரி' சொல்வதும், மனைவி ஈரக்கையால் (அவசர அவசரமாக பாக்கி வேலை முடித்து) கணவன் வாயைப் பொத்துவதும் இப்படி இன்னும் எத்தனை காலத்திற்கு எழுத்தில் உலா வரும்?

சென்னை - 78, சி. பூங்கோதை

◆ 'என்ன கோர்ஸ், எங்கு படிக்கலாம்' என்ற கட்டுரையில் வாசகர் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்பதற்காக நீங்கள் எச்சரிக்கத் தேவையில்லை. 'என்ன சொல்லப்படுகிறது என்பதை விட எந்த நோக்கத்தோடு சொல்லப்படுகிறது என்பதை அறிவதே அறிவு' என்ற பொன்மொழியை மட்டும் பிரசுரித்தால் போதுமானதாக இருக்கும்.

மதுரை - 1, எல். முருகன்

◆ உபயோகம் செய்த கொசு மேட்களை சாம்பிராணிப் பொடியுடன் போடுவதைப் பற்றி ஜனவரி மாத மங்கையர் மலரில் ஒரு வாசகி எழுதி இருந்தார். இது மிகவும் தவறு. கொசு மேட்டை அதற்குண்டான மிஷினில் தான் வைக்க வேண்டும். தனியாக கொளுத்தக் கூடாது என்று மேட் உள்ள பெட்டியில் எழுதியிருப்பதை வாசகி கவனிக்க வில்லையா? கல்லூரியில் படிக்கும் என் பெண், பிள்ளை இருவரும் மிஷினில் மேட்டைப் போட்ட உடன் மூக்கு அரிக்கிறது, மூச்சு விட கஷ்ட மாக இருக்கு என்று சொல்லி நிறுத்தி விடுவார்கள். வாசகி எழுதியதைப் போல் மேட்டை துனி துனியாய் கட்பண்ணி கொளுத்துவது மிகவும் தவறு.

கடலூர் - 1, இராமசாமி



## இன்னும் எத்தனை காலத்திற்கு இப்படி?

◆ 'இந்தியன்' படம் பாடல் தலைப்பில் 'இண்டர்நெட்' அபூர்வத்தைப் பற்றி இண்ட்ரெஸ்டிங்காக விளக்கிய இரண்டு பக்கக் கட்டுரை இனிமை, புதுமை!

சென்னை - 23, த. சத்தியநாராயணன்

◆ 'வீட்டு வேலை செய்யும் குழந்தை நன்றாகப் படிக்கும்' என்ற கட்டுரை என்னை வெகுவாகக் கவர்ந்தது. என் 15 வயது பெண்ணை அந்தக் கட்டுரையைப் படிக்கச் சொன்னேன். பொதுவாகவே மங்கையர் மலர் படிக்கும் அவள் இந்தக் கட்டுரையைப் படித்த பிறகு அவளிடம் சில நல்ல மாற்றங்கள். எனக்குச் சிறிய சிறிய உதவிகள் செய்கிறாள்.

வேலூர், சியாமளா ராமஸ்வாமி

◆ '97-ம் ஆண்டின் தொழிலதிபர் நீங்களாகலாம் என்ற கட்டுரை சிறப்பாக இருந்தது. என் போன்று இல்லத்தரசிகளுக்கு மிகவும் உபயோகமாக இருந்தது. இதைப் படித்து முடித்தவுடன் '97 தொழிலதிபராக நான் ஏன் ஆகக் கூடாது என்ற ஆசை என் உள்ளத்தில் எழுந்தது உண்மை.

மும்பை - 76, ஆர். ஜெயஸ்ரீ

◆ எமது குலகுருவான வள்ளல் பெருமானின் வாழ்க்கைச் சுருக்கத்தையும் சோதி வடிவ வள்ளலின் சோதி தரிசனம் கண்ட அனுபத்தையும் மஞ்சுளா ரமேஷ் எழுதியது சிறப்பாகவும் செம்மையாகவும் அமைந்துள்ளது.

என் கணவர் திரு ம. இளங்கோவன், வள்ளலார் அருளிய திருவருட்பாவையும் திருக்குறளையும் ஒப்பிட்டு ஆராய்ந்து முனைவர் பட்டம் பெற்றுள்ளார். திருவருட்பாவின் சிறப்பையும் வள்ளல் பெருமானின் பெருங்கருணையையும் எடுத்துச் சொல்லி என்னையும் ஆன்மநேயத்துக்கு ஈடு படுத்தியுள்ளார். வள்ளல் வழிகாட்டிய பாதையில் நடப்பது பாதுகாப்பானது.

சென்னை - 72, விஜயா இளங்கோவன்

அட்டை வண்ணப்படம் : டி.சி. நாகேஷ்



# அன்னையின் கவனிப்பு பெண்ணுக்கு பாதுகாப்பு
# ஆன்லைனில் சேமிப்பு பணத்துக்கு பாதுகாப்பு

குழந்தையின் பாதுகாப்புக்காக எப்படி நீங்கள் அதன் பக்கம் நிற்கிறீர்களோ அதே போல் தான் உங்கள் பணத்தின் பாதுகாப்புக்கு ஆன்லைன் உங்கள் பக்கம் நிற்கிறது.

**20% p.a.**
**வரை வட்டி**

ஏனெனில் ஆன்லைன் :

- RBI Certification பெற்றுள்ளது.
- CARE 'A' (FD) Rating கொண்டுள்ளது.
- Capital Adequacy மிக அதிகம் - 50% க்கும் மேல்.
- NRIக்களின் ஆழ்ந்த நம்பிக்கையும் கொண்டுள்ளது.



**ஆன்லைன் ஃபைனான்சியல் சர்வீசஸ் லிமிடெட்**

248, இராயப்பேட்டை நெடுஞ்சாலை,
சென்னை-600 014.
தொ.பே.: 8276768/8265301/8234072
ஃபேக்ஸ்: 8267008.

6

இந்த விளம்பரம் இந்து நாளிதழில் 29.1.96 அன்று வெளிவந்த சட்டபூர்வமான விளம்பரத்தின் தொடர்ச்சியே. இந்த விளம்பர வாசகம் டெபாசிட் விண்ணப்பபடிவத்திலும் அச்சிடப்பட்டுள்ளது. டெபாசிட் செய்வதற்கு முன் இதை கவனத்தில் கொள்வீர்.

# விட்டில் மேரி



மனித சமுதாயத்தின் முன்னேற்றத்துக்குப் பல புதிய கண்டு பிடிப்புக்கள் கண்டு பிடிக்கப் பட்ட போது, பழைமையில் ஊறிப் போன மனிதன் அவற்றை இலகுவில் ஏற்றுக் கொள்ளவில்லை. புறக்கணித்தான் - புரட்சி செய்தான். சைக்கிள், தையல் மெஷின் போன்ற மனித உழைப்பைக் குறைக்கும் சாதனங்கள் உருவான போது, கோச்சு வண்டி ஓட்டுபவர்களும், கையினால் உடைகளைத் தைக்கும் தொழிலாளிகளும் தங்கள் பிழைப்பில் மண்ணைப் போட வந்திருப்பவை என்று ஆத்திரப்பட்டு புதிய யந்திர சாதனங்களை அடித்து நொறுக்கினான்.

இதே போல மருத்துவத்துறையிலும் புதிய கண்டு பிடிப்புகளை மனிதன் ஆரம்பத்தில் ஏற்கவில்லை. கொள்ளை நோயான அம்மைக்கு, 'அம்மைப் பால்' (வாக்ஸின்) கண்ட எட்வர்டு ஜென்னருக்கு (கி.பி. 1796) ஒத்துழைப்புக் கிடைக்கவில்லை. "நோய்க் கிருமிகளை வலிய நாமே உடலில் புகுத்திக் கொள்ளுவதாவது? முட்டாள் தனம்!" என்று அம்மை நோய் வராமல் தடுப்பதற்கான அம்மை குத்திக் கொள்ள யாருமே முன் வர வில்லை. உயிரைக் குடிக்கும் -- இல்லாவிடில் தழும்புகளோடு தோற்றத்தை விகாரப்படுத்தும் அம்மை நோயை விரட்டி வெற்றி கொள்ளுவதில் தீரமிக்க ஒரு பெண்மணி தன் மகனுக்கு அம்மை குத்தும்படி வலிய முன் வந்தாள். அந்தக் காலத்தில் அது துணிச்சலான செயல்.

இங்கிலாந்தில் கிங்ஸ்டன் பிரபுவின் மகள் மேரி. ரோஜா இதழின் நிறமும் மென்மையும் வனப்பும் கொண்டவள். திருமண வயதடைந்திருந்தாள். பிரஞ்சு லத்தீன் ஆகிய பிற மொழிகளிலும் வல்லவளாக விளங்கினாள் மேரி. அவளுடைய அறிவாற்றலுக்கு உதவியது வேறு யாருமல்ல, தந்தையின் லைப்ரரியிலிருந்த புத்தகங்கள்தான். தனது பதினாலாவது வயதில், தனது முதல் புத்தகத்தை எழுதிவிட்டாள். பதினாறாவது வயதில், தனது தோழி அன்னி வொர்ட்லி மாண்டேகுவை சந்திக்க சென்ற போது தோழியின் சகோதரன் எட்வர்டை சந்திக்க நேர்ந்தது. மேரியை விட பதினோரு வயது பெரியவன் எட்வர்டு. தன் சகோதரியின் அழகிய தோழி என்று தான் முதல் சந்திப்பின் போது எண்ணினான் எட்வர்டு. ஆனால் அவளுடன் பேச நேர்ந்த போது அவளுடைய விவாதத்திறமையையும், சமீபத்தில் வெளியான இலக்கிய நூல்கள், நாடகங்களில் அவள் காட்டிய ஆர்வத்தையும் பார்த்து பிரமித்துப் போனான். மேரியிடம் அவன் மனம் ஈடுபாடு கொண்டது. துணிந்து மேரிக்கு ஒரு காதல் கடிதமும் எழுதினான் எட்வர்டு.



மேரியும் அவன் காதல் கடிதத்துக்கு துணிவோடு பதிலும் போட்டாள். ஒரு எச்சரிக்கையுடன், "ஒரு ஆண் மகனுக்கு நான் எழுதும் முதல் கடிதம் இதுதான். என்னிடமிருந்து மற்றொரு கடிதத்தை நீ எதிர் பார்க்காதே!" ஆனால் இளங்காதலர்களின் வைராக்கியம் எத்தனை உறுதியானது என்பது உலக மறிந்ததுதானே!

அப்பாவுக்குத் தெரியாமல் மேரி கடிதங்கள் மூலம் எட்வர்டுடன் தன் காதலை வளர்த்துக் கொண்டாள். ஆமை வேகத்தில்தான் அவர்கள் காதல் நகர்ந்து கொண்டிருந்தது. "என் மனைவியாகிறாயா?" என்று மேரியைக் கேட்க எட்வர்டின் பெருந்தன்மையும் வறுமையும் இடந் தரவில்லை. சீமாட்டியான மேரியோ, 'என்னை மணந்து கொள்ளுகிறாயா?' என்று முதலில் கேட்க வெட்கமும் கௌரவமும் குறுக்கிட்டன.



[redacted]

இந்த நிலையில் இவர்களின் காதலுக்கும் மேரியின் தந்தையே ஒரு சமயம் முடிவு கட்ட வேண்டியதாயிற்று. துரதிர்ஷ்டவசமாக எட்வர்டின் கடிதம் ஒன்று அவர் கைக்குப் போயிற்று.

"உன் சந்தோஷ வாழ்க்கையை உருவாக்கித் தரும் என் முடிவில் நீ நம்பிக்கை கொள்ளாதது எனக்கு வியப்பளிக்கிறது" என்றார் கோபத்துடன். "சட்டைப் பையில் தன்னுடையதென்று கூறிக் கொள்ள ஆறு பென்னி கூட இல்லாத ஒரு வாலிபனிடம் நீ எப்படி மகிழ்ச்சியாக வாழ முடியும்? முடியாது. ஸ்கெஃபிங்டன் பிரபுவையே நீ மணக்க வேண்டும். வருடத்துக்கு 1200 பவுன்கள் உன் செலவுக்கு அவன் தரத் தயாராக இருக்கிறான்" கர்ஜித்தார் மேரியின் அப்பா.

"ஆனால், என்னால் அவரைக் காதலிக்க முடியாதே!" அழுகையினூடே கரகரத்தாள் மேரி.

"காதலா? பேத்தல்...." இண்டலடித்த தந்தை எச்சரிக்கையும் செய்தார் மகளுக்கு. "நான் தேர்ந்தெடுத்துள்ளவனை நீ மணக்காவிடில் உனக்கு சல்லிக் காசு கூட என்னிடமிருந்து கிடைக்காது."

மேரிக்குத் தன்மானமும் கோபமும் தலைக்கேறியது. "ஸ்கெஃபிங்டன் பிரபுவை நான் மணக்க முடியாது. என்னைக் கட்டாயப் படுத்தவும் உங்களால் முடியாது" என்று கத்தினாள்.

"தவறு..." நிதானமாகப் பதில் கூறினார் மேரியின் அப்பா. "ஸ்கெஃபிங்டன் பிரபுவை நீ மணக்குமாறு என்னால் உன்னைக் கட்டாயப்படுத்த முடியாமலிருக்கலாம். ஆனால் யாரையும் நீ மணக்க முடியாமல் என்னால் தடுக்க முடியும்!"

இதற்கு மேரியினால் பதிலேதும் கூற முடியவில்லை.

அன்று ஞாயிற்றுக் கிழமை. அவன் தன் சகோதரியின் - மேரியின் அத்தை -- வீட்டுக்குப் போக வேண்டும் என்றும் அங்கு அவர் தேர்ந்தெடுத்த மணமகன் ஸ்கெஃபிங்டன் பிரபு

சாந்தா மூர்த்தி

# நீங்க நெனச்சா முடியாதா?

''ஹாய் லதா! என்ன ரொம்ப டல்லா இருக்கியே, ஆபீஸ்ல ஏதாவது ப்ராப்ளமா?''

''ஆமாம். இன்னிக்கு எங்க ஆபீஸ் ரிஸப்ஷனிஸ்ட் ரீட்டா லீவு, அதனால நான்தான் டெலிபோன் அட்டண்ட் பண்ண வேண்டியிருந்தது''.

''அதுல என்ன ப்ராப்ளம்?''

''ப்ராப்ளமே அதுதான். விஷால் என்டர்ப்ரைஸ்லேருந்து சதீஷ் கபூர் என்பவர் போன் பண்ணினார். மனுஷன் தமிழ்ல பேசாம, டஸ் — புஸ்னு இங்கிலீஷ்ல பேசி கழுத்தை அறுத்துட்டார். அவர் கிட்ட இங்கிலீஷ்ல பேச முடியாம ரொம்ப திண்டாடிப் போயிட்டேன்.''

''மானேஜர் இன்னொரு லைன்ல பேசிக்கிட்டிருக்கார். கொஞ்சம் வெய்ட் பண்ணுங்கன்னு சொல்லணும் அதை எப்படிச் சொல்றதுன்னு தெரியாம ஏதோ உளறி வைத்தேன்.''

''ப்பூ. இதுதான்னா உன்னோட ப்ராப்ளம். **"Sir, the manager is speaking over the other line, will you please hold on?"**னு சொன்னால் போதும்.

''உனக்கென்ன ஈஸியா சொல்லிட்டே. ஏதாவது தப்பா பேசிடுவோமோங்கற பயத்துல வாயிலிருந்து வார்த்தையே வெளில வரமாட்டேங்குது. இப்படித்தான் காலைல ஒருத்தர் போன் பண்ணினார்.

''ஸார், நீங்க பேசறது சரியாக காதுல விழலை, கொஞ்சம் சத்தமா பேசுங்கன்னு சொல்றதுக்கு **'Speak loudly'**ன்னு சொன்னேன். அவருக்கு கோபம் வந்துட்டுது''.

''லதா, இதுபோல போன்ல பேசறபோது, பேசறவங்க குரல் சரியா கேக்கலைன்னா, **"Sorry sir, I can't hear you. Be louder please''**ன்னு சொல்லணும்.



கொஞ்சம் வெய்ட் பண்ணுங்க ஸார்'னு சொல்லணும்னா **'Please wait'**னு சொல்றதுக்கு பதிலா **just hold on please, just a minute please, one second sir...** இதுபோல ஏதாவது ஒண்ணை யூஸ் பண்ணணும்''.

''ஆச்சரியமா இருக்கே, இவ்வளவு நல்லா இங்கிலீஷ்ல வெளுத்துக் கட்டறியே, நீ ஏதாவது கான்வென்ட்ல படிச்சியா''.

''அட... நீ ஒண்ணு, சாதாரண ஸ்கூல்ல அதுவும் தமிழ் மீடியத்துல தான் படிச்சேன். ஆரம்பத்துல எனக்கும் இதே **problem** இருந்தது. ஆனால் நான் **''விவேகானந்தா**ல சேர்ந்து இங்கிலீஷ் பேசக் கத்துக்கிட்டப்புறம் ரொம்ப சரளமா இங்கிலீஷ் பேச முடியறது''.

''அப்படியா! **விவேகானந்தா**ல சேர்ந்தா, இவ்வளவு நல்லா இங்கிலீஷ்ல பேச கத்துக்க முடியுமா?''

''நிச்சயம் முடியும் லதா!''

''அப்படீன்னா நான் உடனே **join** பண்றேன்பா''.

*''All the best''*

வருவானென்றும் கண்டிப்பாகக் கூறினார் மேரியின் தந்தை இங்ஸ்டன் பிரபு. மேரி குமுறிக் குமுறி அழுதாள். தன் அறைக்குள் போய் தாளிட்டுக் கொண்டு தன் காதலனுக்குக் கடிதமெழுதினாள். "நான் உன்னோடு சாவதற்கும் தயார். காதலைத் தவிர இவ்வுலகில் எனக்கு வேறு எந்த சுகமும் தேவையில்லை."

உண்மைக் காதலனாகிய எட்வர்டு பதில் எழுதினான். "என் உயிர்க் காதலியாகிய நீ துன்பத்தில் இருக்கும் போது நான் சும்மா இருப்பேனா? சனிக்கிழமை இரவு கோச்சு வண்டியுடன் உன்னை மீட்டுப் போக வருகிறேன், கவலைப் படாதே!"

ஆனந்தக் குதூகலத்துடன் மேரி பதில் எழுதினாள். "உன் வரவை எதிர் பார்த்துத் தவிப்போடு காத்திருப்பேன். என் தந்தையின் செல்வம் மரியாதை, பதவி, ஆதிக்கம் அனைத்தையும் விட உன்னோடு இணைவதிலேயே மகிழ்ச்சியடைவேன்!"

ஆனால், காதலர்களின் திட்டம் நிறைவேற வில்லை. சனிக்கிழமை காலையிலேயே மேரியை, அவள் சகோதரனின் கண்காணிப்பில் தன் சகோதரியின் வீட்டுக்கு கோச்சு வண்டி ஏற்றி அனுப்பிவிட்டார் அவள் தந்தை. கோச்சு வண்டி ஆக்பான் சாலையில் போய்க் கொண்டிருந்தது. மேரி ஜன்னல் வழியே அடிக்கடி பின்னால் பார்த்துக் கொண்டு வருவதின் காரணம் அவள் சகோதரனுக்குப் புரிய வில்லை. தன் காதலன் எட்வர்டுக்கு, தன் பயணத்தில் திடீர் மாற்றம் ஏற்பட்டதைத் தெரிவித்து ஒரு குறிப்பை அவனுக்கு விட்டு வந்திருப்பது அவள் சகோதரனுக்கு எப்படித் தெரியும்?

அன்று இரவு மேரியும் அவள் சகோதரனும் அத்தை வீட்டுக்குப் போகும் வழியில் ஒரு சத்திரத்தில் (இன்) தங்கினார்கள். சத்திரத்து அறையின் ஜன்னல் வழியாக, தன்னைச் சிறை மீட்கக் காதலன் வருகிறானா கோச்சு வண்டி வரும் புழுதி தெரிகிறதா என்று இரவெல்லாம் தூங்காமல் கண் விழித்தபடி பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் தங்கி இருந்த அடுத்த அறையிலேயே அவள் காதலன் எட்வர்டு காதலியின் கோச்சு வண்டியை எதிர் பார்த்துக் காத்திருந்தவன் அசந்து போய்த் தூங்கிக் கொண்டிருப்பது அவளுக்குத் தெரியாது. அதே போல் எட்வர்டுக்கும் தன் காதலி அடுத்த அறையிலேயே சிறைப்பட்டிருப்பது தெரியாது. இந்தக் கண்ணாமூச்சியாட்டம் எப்போது எப்படி முடிவுக்கு வந்ததோ தெரியவில்லை. மேரி தன் அத்தை வீட்டை அடையுமுன் ஒரு வழியாகத் தன் காதலியை எட்வர்டு சிறைமீட்டு விட்டான். உடுத்தி இருந்த உடையோடு அதே நாளில் ஒரு மாதா கோயிலில் மேரி, வொர்ட்லே மாண்டேகு சீமாட்டியானாள். எட்வர்டின் மனைவியானாள்.

ஏழையின் மனைவியானதைப் பற்றி மேரி கவலைப்படவில்லை. உள்ளங் கவர்ந்த காதலனைக் கணவனாகப் பெற்ற உவகையோடு பொறுப்பான குடும்பத் தலைவியானாள். அடுத்த வருஷமே ஒரு மகனுக்குத் தாயுமானாள். அதே ஆண்டில் அவள் குடும்பத்தைத் துயரங்கள் சூழ்ந்து கொண்டன. அவளது சகோதரன் பெரியம்மை நோய்க்குப் பலியானான். கண்ணாடியின் முன் நிற்கும் போதெல்லாம் தனது களங்கமற்ற அழகிய முகத்தைப் பார்க்கையில், "இந்த வேளையில் இந்நோயால் எத்தனை பேர், பாதிக்கப்பட்டு, தங்கள் அழகை இழந்து அவதிப்பட்டுக் கொண்டிருப்பார்கள்" என்று மறுகிப் போனாள். பெரியம்மை என்னும் வைசூரி அப்போது மக்களிடையே பெரும் பீதியை உண்டாக்கி இருந்தது. சிகிச்சையளிக்க மருந்து கிடையாது, தெரியாது. நோய் வாய்ப்பட்டவரை வீட்டிற்குள் விட்டு மற்றவர்கள் தொலை தூரத்துக்கு ஓடிப் போவார்கள், தங்களுக்கும் வைசூரி வந்து விடுமோ என்ற பயத்தினால்.

அதே சமயத்தில் அரசியலிலும் மாற்றங்கள் ஏற்பட்டன. அந்த ஆண்டு ஜூலையில், ஸ்டூவர்ட் வம்சத்தின் கடைசி வாரிசான ராணி அன்னி இறந்தாள். அடுத்து ஹனோவர் வம்சத்து ஜார்ஜ் இங்கிலாந்தின் மன்னனானார். அரச வம்சங்களின் ஆட்சி மாற்றம், அரசியல்

---

**இரு மாதங்களுக்கு முன் என் நல்ல உயர்ந்த புடைவையில் சைக்கிள் கிரீஸ் பட்டுவிட்டது. என்ன செய்தும் கால்வாசிதான் போனது. என் தோழி ஒருத்தி சொன்னதன் பேரில் கொஞ்சம் கடலைமாவு போட்டு தேய்த்து. பிறகு ஷாம்பு போட்டு கசக்கினேன். ஆச்சரியப்படும் வகையில் 'பளிச்' ஆனது.**

**— கி. மஞ்சுளா**

அதிகாரங்களிலும் மாற்றத்தைக் கொண்டு வந்தது. முதலாம் ஜார்ஜின் ஆட்சியில் மேரியின் கணவர் எட்வர்டுக்கு அரசாங்க உத்தியோகம் கிடைத்தது. இந்த மகிழ்ச்சியுடனேயே அதே ஆண்டில், மேரி எதற்காகப் பயந்து நடுங்கிக் கொண்டிருந்தாளோ அது வந்தே விட்டது. டிசம்பரில் அவளுக்கும் பெரியம்மை நோய் கண்டது. பீதியும் கலவரமும் ஆட்டிப் படைக்க மேரி படுக்கையில் அனத்திக் கொண்டிருந்தாள். இரண்டு புகழ் பெற்ற மருத்துவர்கள் "எதுவும் விபரீதமாக நடந்து விடாது. நீ புதிய பொலிவோடு குணமாகி விடுவாய்" என்று உறுதியளித்தார்கள்.

மேரிக்குத் தெரியும், பெரியம்மை என்ற கொள்ளை நோய்க்கு முன் மருத்துவர்கள் தரும் நம்பிக்கைக்கெல்லாம் அர்த்தமே இல்லை என்று. மிகப் பெரிய அறிவாளிகளினால் கூட தங்கள் கூறும் வாக்குறுதிகளில் பாதியைத்தான் காப்பாற்ற முடியும். மேரி உயிர் பிழைத்தாள். ஆனால் அவள் அழகு, சந்தன மேரியின் மென்மை வனப்பை வைசூரி பறித்துக் கொண்டு விட்டது.

ஆண்டவன் ஒரு துன்பத்தைத் தரும்போது, அதைத் தாங்கிக் கொள்ளும் பலத்துக்காக ஒரு இன்பத்தையும் கொடுப்பான். அடுத்த ஆண்டு மேரியின் கணவர் எட்வர்டை மன்னர் ஜார்ஜ், துருக்கி நாட்டின் ராஜப் பிரதிநிதி (அம்பாசிடர்) ஆக்கினார். மேரியின் சோர்வுற்ற விழிகளில் பழைய பளபளப்பு உண்டாயிற்று. கான்ஸ்டாண்டி நோபிளுக்குப் போவோம் என்று அவள் கனவு கூடக் கண்டதில்லையே.

மேரியும் அவள் கணவன் எட்வர்டும் தங்கள் குட்டி மகனுடன் புயல் வீசும் ஒரு நாளில் ஆங்கிலக் கால்வாயைக் கடந்து ஐரோப்பாவுக்குள் காலடி வைத்தார்கள். ராஜப் பிரதிநிதியாகப் பதவி ஏற்க துருக்கிக்குச் செல்ல கொலோன், நியூஹாம்பர்க், வியன்னா, பெல்கிரேட் என்றெல்லாம் ஒருமாதம் பயணப்பட்டு முடிவில் கான்ஸ்டாண்டி நோபினை அடைந்தார்கள்.

பெரா என்னுமிடத்தில் எட்வர்டு ஒரு மாளிகையை வாடகைக்கு எடுத்தான். அந்த மாளிகையின் ஜன்னல் வழியே அந்த அழகிய நகரின் கூட கோபுரங்களையும் மாடமாளிகைகளையும், ஆசியாவின் மலைத் தொடரையும் அதற்கப்பால் படர்ந்து கிடக்கும் நீலவானத்தையும் கண்டு தன் சோகத்தை மறந்து மகிழ்ந்து போனாள் மேரி. தினமும் நகர வீதிகளில் வேடிக்கை பார்க்கப் போவாள். அப்படியும் அவள் ஆர்வம் தணியவில்லை. துருக்கியரில் யாரையும் அவள் அம்மைத் தழும்பு முகத்துடன் பார்க்காதது வியப்பாக இருந்தது. ஆங்கில தூதரக (எம்பஸி) சர்ஜனிடம் தன் சந்தேகத்தைக் கேட்டே விட்டாள். "இங்கு யாருமே பெரியம்மையால் பாதிக்கப்பட்டதாகத் தெரியவில்லை இது எப்படி சாத்தியம்?"

அதற்கு அந்த சர்ஜன் புன் முறுவலோடு பதில் கூறினார்: "இங்குள்ள மக்கள் பெரியம்மை நோயைத் தங்கள் உடலுக்கு மாற்று முறையில் செலுத்திக் கொண்டு அதை வெற்றி கொள்ளுகிறார்கள்.!" மேரிக்கு இன்னாகுலேஷன் (தடுப்பூசி) முறையைப் பற்றி விளக்கியவர், "இதன் செயல் முறையைப் பற்றி நான் மூன்று ஆண்டுகளுக்கு முன்பே நம் ராயல் சொஸைட்டிக்கு விரிவாக எழுதினேன். ஆனால் அவர்கள் அதைக் கண்டு கொள்ளவே இல்லை" என்றார்.

தூதரக சர்ஜன் கூறியதைக் கேட்டு அதிர்ந்து போனாள் மேரி. "இந்த அம்மை நோய்க்கு ஆளாகி எத்தனை பேர் அவலட்சணமாகி இருக்கிறார்கள். நான் உண்மையான தேசபக்தையானால் இந்த மருந்தை இங்கிலாந்து மக்கள் பயன்படும்படி செய்வேன். அக்கொடிய வைசூரி எப்போது, யாரைத் தாக்கும் என்று கூற முடியாது. ஆகவே என் அருமை மகனுக்கு அந்த அம்மைப் பாலை செலுத்துவதற்கு ஏற்பாடு செய்யுங்கள்" என்று கேட்டுக் கொண்டாள் மேரி ஆங்கில சர்ஜனிடம்.

அவரும் அம்மை குத்தும் வயதான ஒரு பெண்மணிக்குத் தகவல் கொடுத்தார். அம் மூதாட்டி ஒரு சிறிய குடுவையில் அம்மைப் பாலும் (வாக்ஸின்) ஒரு வெள்ளி ஊசியும் கொண்டு வந்தாள். அம்மைத் தடுப்பு ஊசி (இன்னாகுலேஷன்) போடுவதற்காக, மேரி தன் அருமை மகனைத் தன் மடியில் இருத்திக் கொண்டு, அந்தச் சிறிய, எளிய ஆபரேஷனை உன்னிப்பாக ஆவலோடு கவனித்தாள். குழந்தையின் தோள்பட்டைக்குக் கீழே வெள்ளி



வீட்டில் கலசம் வைத்து நோன்பு பூஜை செய்பவர்கள் கலசத்திற்கு மாவிலை கிடைக்கவில்லையா. கவலையை விடுங்கள். 5 அல்லது 7 என வெற்றிலையை மாவிலைக்குப் பதிலாக பயன்படுத்தலாமே!

— கே. விஜயகுமாரி

ஊசியினால் கீறி குடுவையிலுள்ள அம்மைப் பாலை ஒரு துளி எடுத்து அந்தக் காயத்தில் வைத்துத் தேய்த்து விட்டுச் சென்றாள் அந்தத் துருக்கிய மூதாட்டி.

மேரி அதன் பிறகும் இரண்டு நாட்கள் தவிப்போடு ஆர்வத்தோடு தன் மகனைக் கண் காணித்து வந்தாள். குழந்தையின் முகத்திலும் உடலிலும் சிவப்புப் புள்ளிகளும் பொட்டுக்களும் தோன்றின. உடல் அனலாகக் கொதித்தது. ஆனால் விரைவிலேயே சிவப்புப் பொட்டுக்கள் மறைந்தன. ஜுரமும் தணிந்தது. பழைய வெல்வெட் உடலோடு மேரியுடன் சாதாரணமாக எப்போதும் போல ஓடி விளையாடலானான். அந்த அதிசயத்தை கொள்ளை நோய் அம்மையைக் குணமாக்கும் மருந்தைப் பற்றித் தன் கணவனிடம் சொல்லிச் சொல்லி மாய்ந்து போனாள்.

அதே ஆண்டில் மேரிக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அவள் கணவன் எட்வர்டு இங்கிலாந்துக்குத் திருப்பி அழைக்கப்பட்டார். மேரிக்கு அதில் கொஞ்சம் வருத்தம்தான். தாய் நாட்டை அடையத் தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டவள், "பழைய இங்கிலாந்து புதுமைகளை நிச்சயம் வரவேற்கும். அம்மைப் பாலை அது அங்கீகரித்திருக்கும்" என்று தன் மனதுக்கு நம்பிக்கையூட்டிக் கொண்டாள். ஆனால் இங்கிலாந்து திரும்பிய மேரிக்கு ஏமாற்றம். அவள் நாடு அம்மைப்பாலை அங்கீகரிக்காததோடு மட்டுமல்ல தன் மகனுக்கு நோய் கிருமியை உடலில் செலுத்திக் கொண்டு வந்திருக்கும் அவள் மீது ஆத்திரம் கொண்டு வசைபாடினார்கள். "ராட்சசி! ஒரு தாய் தன் மகனுக்கு இப்படியா ஒரு கொடுமை செய்வாள்?" என்று தூற்றினார்கள். பொது மக்கள் அவளைக் கண்டு முகம் திருப்பி ஓடி ஒளிந்தார்கள்.

**மழை, குளிர் காலங்களில் துவைத்து காய வைத்த துணிகள் காய்ந்திருந்தாலும் ஜில்லென்றுதான் இருக்கும். அவைகளை மடித்து கம்பளியினுள் சுருட்டி வைத்துவிட்டு 3 மணி நேரம் கழித்து உடுத்திக் கொண்டால் வெயிலில் காய வைத்த துணிகள் போல் மொறுப்பாக இருக்கும்!**

**— மீரா**



ஆனால் மேரி இதையெல்லாம் பொருட்படுத்தவே இல்லை. சிறிது காலத்தில் பெரியம்மை நோய் மக்களைத் தாக்கியது! அம்மைப்பாலின் மீது சந்தேகம் கொண்டுள்ளவர்களுக்கு உண்மை நிலையை விளக்க தன் மகளுக்கு, மூன்று சிறந்த மருத்துவர்களின் முன்னால் அம்மைத் தடுப்பு ஊசி போடும்படி செய்தாள். ஆனாலும், நேரில் பார்த்தும் கூட, ஒரு பெண்ணினால் நிரூபிக்கப்பட்ட அந்த மருத்துவ அதிசயத்தை ஏற்பதற்கு டாக்டர்கள் தயங்கினார்கள்.

ஆனால், வேல்ஸ் இளவரசியான சார்லட்டி மேரியின் முயற்சிக்கு ஆதரவளித்தாள். நியூகேட் சிறையிலுள்ள ஆயுள் தண்டனை பெற்ற ஆறு கைதிகளுக்கு அம்மைப்பால் செலுத்தும்படி உத்திரவிட்டாள். அவர்கள் நோயின்றிப் பிழைத்தால் அவர்களுக்கு விடுதலை அளிப்பதாகவும் வாக்களித்தாள். கைதிகள் உவப்போடு அம்மை குத்திக் கொள்ள சம்மதித்தார்கள். ஆறு கைதிகளில் யாரும் இறக்கவில்லை. ஆறு பேரும் தண்டனையிலிருந்து விடுபட்டு விடுதலை பெற்றார்கள்.

ஒரு வருஷம் கழித்து வேல்ஸ் இளவரசி தன் சொந்தப் பெண் குழந்தைகளுக்கே அம்மை குத்தச் செய்து வெற்றி கண்டாள். இதை அடுத்து அரச குடும்பத்தினர் ஒவ்வொருவராக இளவரசியின் வழியைப் பின்பற்ற, சமூகம் தங்கள் குழந்தைகளுக்கு அம்மை குத்துவதை ஒரு ஃபாஷனாகக் கருதிச் செயல்படலாயிற்று.

ஆனாலும் வருமானம் பாதிக்கப்பட்ட மருத்துவர்களில் சிலர் 'ஒரு பெண்ணினால் அறிமுகப்பட்ட இந்த சோதனையை ஏற்பது அறியாமை!' என்று முணுமுணுத்தார்கள். மேரி இவர்களின் கடுப்பை லட்சியப்படுத்தவில்லை. "இதனால் நான் எவ்விதப் பலனும் அடையவில்லை. மனித குலத்துக்கு நன்மை செய்தோம் என்ற மன நிறைவைத் தவிர!"

எட்வர்டின் மறைவிற்குப் பிறகும் பலகாலம் மேரி வாழ்ந்திருந்தாள். அம்மைக் குத்திக் கொள்ளுவது வெகு சகஜமாகி விட்டதைக் கண்டாள் 'லிட்டில் மேரி'. ஒரு மகாராணியின் பெயரைப் போல அவள் பெயரும் புகழ் பெற்றது. ஆலிவர் கோல்ட் ஸ்மித்தின் நாடகம் ஒன்றில் மேரியின் புகழ் பரப்பும் வசனத்தைக் கேட்க அவள் இல்லை. ஜ்வலிக்கும் கண்களும், அம்மை வடுக்களால் அழகு மங்கிப் போன கிராமிக்க பெண்மணியான மேரிக்கு இதைவிட மகத்தான பாராட்டு வேறு என்ன இருக்க முடியும்? துருக்கியிலிருந்து இங்கிலாந்துக்கும், ஏன், மேற்கத்திய உலகம் பூராவுக்கும் ஆயிரக்கணக்கான பெண்கள் குழந்தைகளின் உயிரையும் அழகையும் காக்கக் கூடிய ஒரு அரிய பரிசை கொண்டு வந்த பெண்மணியான மேரியை எவ்வளவு பாராட்டினாலும் தகும் இல்லையா?

மாறிவரும் வயதானவர்கள்

# மாமியார் கொடுமை 10 வருஷம்..! மருமகள் கொடுமை..?




ன்று ஆணிவேராக இருந்தார்கள். ஆனால் இன்று....? அவர்கள் புரிந் அரவணைத்து, தாய்மை ஸ்தானத்துடன் இருந்த அந்தத் தன்மை முதியவர்களிட குறைந்து விட்டதே என்ற வருத்தம்; தன் பேரன் பேத்தி என்றில்லாமல் மருமகனி குழந்தை என்று எண்ணுகிறார்களே! என்னும் அதிர்ச்சி, அவர்கள் எப்படி இ தால் சமூகத்திற்கு நலமாக இருக்கும் என்னும் ஆதங்கம் --

திருமதி மஞ்சுளா ரமேஷ் அவர்கள் எழுப்பிய இந்த மிக முக்கியமான சமு தாயப் பிரச்னைக்கு உணர்வு பூர்வமாகவும், ஆக்க பூர்வமாகவும் திருமதி சாவித் திரி வைத்தி, (விஷ்ராந்தி) சுட்டிக் காட்டியுள்ள பிரச்னைகளை, இரு முதியோர் இல்லங் களின் பொதுநலத் தொடர்பு அதிகாரி என்னும் முறையில் சுட்டிக் காட்ட விழைகிறேன்.

முதுமை வியாதி அல்ல. ஒரு நிலை. மனித வாழ்வின் கடைசி நிலை. ஷேக்ஸ்பியர் சொன்னது போல், இரண்டாவது குழந்தைப் பருவம்.

ஆனால் முதல் குழந்தைப் பருவத்திற்கும், இந்த இரண்டாவது குழந்தைப் பருவத்திற் கும் உணர்வு பூர்வமான, இடைவெளி உள்ளது. ஒரு பிறந்த குழந்தை, எத்தகைய உணர்வுகளுமே இல்லாமல் முழுக்க, தன் பெற்றோரின் அன்பையும் பராமரிப்பை யும் மட்டுமே உறுதுணையாகக் கொண்டு வளர்கிறது. படித்து, வேலை பார்த்து, திருமணம் புரிந்து கொள்ளும் வரை சீராகச் செல்லும் இந்த வாழ்க்கை திருமணத் திற்குப் பின் தடம் மாறுகிறது.

பெற்றோர், மெய் தளர்ந்து, மனம் தளர்ந்து தங்கள் குழந்தைகளால் பரா மரிக்கப்பட வேண்டும் என்னும் நிலை வரும் போது, பச்சைக் குழந்தை போல், எதையும் தெரியாத புரியாத நிலையில் இல்லை. முதுமை, இய லாமை, தன்னம்பிக்கையோடு நடத்தப்பட்ட வாழ்க்கை, சட்டென மாறி, சார்ந்து வாழும் நிலை ஏற்படும் போது, ஏற்படும் மன அழுற்சி, முதுமை பிணி அனைத்தும் சேர்ந்து, முதியோருக்கு அவர்களே பிரச்னையாக, அதனால் அவர்கள் பிள்ளைகளுக்குப் பிரச்னையாகக் கருதப்படு கிறார்கள்.





இல்லங்களில் உள்ள முதியோர்களையே எடுத்துக் கொள்ளுங் களேன். அவர்கள் இழந்த குடும்ப வாழ்க்கை, அவர்களின் இல் வாழ்க்கையில் சலிப்பைத் தருகிறது. பலருக்கு நாவைக் கட்டுப்படுத்த இயலுவதில்லை. வீட்டுச் சூழ்நிலையில் --

"அப்பா உங்களுக்குச் சர்க்கரை இருக்கிறது. இனிப்புச் சாப்பிடாதீர்கள். அம்மா உங்களுக்கு பிரஷர் இருக்கிறது. சற்று மருந்து சாப்பிட்டு, அமைதியாக இருக்கிறீர்களா?" என்று உரிமையோடு மட்டுமல்ல. சற்று கண்டிப்பாகக் கூட சொல்ல முடியும். ஏனெனில் அவர்களின் உடல் நலத்தில் உள்ள அக்கறைதான்.

ஆனால், காப்பகங்களில், முதியோர் உடல் நலத்தில் மிக்க அக்கறையுடன் நடத்தினாலும், இல்லத்து தாத்தா பாட்டிகளில் அநேகர், தங்கள் உடலுக்கு ஒத்துக் கொள்ளாதவற்றை ஒதுக்குவ தில்லை.

சுருக்கமாகச் சொன்னால், முதியவர்கள், மாறி வரும் வாழ்க்கை அமைப்பில், தங்கள் பிள்ளைகளின் குடும்ப சுமைகளை உணர்ந்து, அவர் களுக்கு அவர்களால் முடிந்த அளவு உதவி செய்ய வும், முடிந்தால் பாரமாக இல்லாமல் இருந்தாலும், சூழ்

நிலைக்கேற்ப தங்களின் வாழ்க்கை முறைகளை அனுசரித்துச் செல்லும் மனதைத் தயார் செய்து கொண்டால்,

அதே போல், இந்த முதியவர்களால் நாம், நாம் பிறந்து, வளர்ந்து, ஆளாக்கப்பட்டோம், என்ற நன்றியுணர்வு, இவர்களை அன்பாகப் பராமரித்து, ஒரு அன்பான, பாதுகாப்பான, அமைதியான முதுமை வாழ்க்கை வழங்க வேண்டியதும், தங்களின் தலையாய கடமை என்று உணர்ந்து,

அனைத்திற்கும் மேலாக அன்பால், மனத் தால் அனுசரித்து, அமைதியான வாழ்க்கையை கொடுப்பது, ஒரு சமுதாய பிரக்ஞையுடன் செய்ய வேண்டிய குடும்பக் கடமை என்று இளைய தலைமுறையும் உணர்ந்தால் வழிபிறக் கும்.

— டாக்டர் மிருணாளினி
PRO/Councellor
காக்கும் கரங்கள்.

ஒரு பழமொழி உண்டு. மாமியார் படுத் தல் 10 வருஷம். மருமகள் படுத்தல் கடைசி வரை என்று. ஒரு விதத்தில் சரியே. பெண்ணா னவள் கல்யாணமாகி ஆசையுடன் வரும்போது அவர்கள் வெளியே செல்வதை ஆசையுடன் அனுமதியுங்கள். அந்த வாழ்க்கை, குழந்தை பிறக்கும் வரைதான் அவ்வாறு அனுபவிக்க முடியும். குழந்தை பிறந்த பிறகு வெளியில் சுற்று வது என்றால் அதற்கு வேண்டிய சாமான்களை சுமந்து கொண்டும் அதன் ஆகார சமயத்திற்குத் தகுந்தாற் போல போகவும், குளிர், மழை, வெயில் என்று பார்த்துக் கொண்டு போகவும் அனுசரித்துப் போவதில் முன்பிருந்த உற்சாகம் இதில் இராது. இரண்டாவதாக சிறு பெண் ணான அவள் ஓரளவிற்குச் சமையல் தெரிந்து வந்தாலும் தன் வீட்டுப் பழக்கத்தையும் ருசி களையும் அவளுக்கு ஆதரவாய் சொல்லி தர லாம்.

எனக்குத் தெரிந்த ஒருவர் வீட்டில் ஒரே பெண்ணாய் செல்லமாய் வளர்ந்த பெண் மாட்டுப் பெண்ணாய் வந்தாள். அவளிடம் மாமியார் கடையில் வாங்கிய வெண்ணெயை அலம்பி அடுப்பில் வை என்றார். மாமியார் கொஞ்சம் நேரம் கழித்து வெண்ணெய் காய்ந் திருக்குமே என்று பார்க்க வந்தால் தண்ணீ ருடன் சேர்ந்து வெண்ணெய் காய்கிறது காய் கிறது அப்படிக் காய்கிறது. மருமகள் வெண் ணெயை தாராளமாக தண்ணீர் விட்டு அலம்பி யிருக்கிறாள்! உடனே அந்த மாமியார் பிள்ளை யும் தன் கணவரும் கோபிப்பார்களே என்று மாட்டுப் பெண்ணை விட்டுக் கொடுக்காமல் தன்னிடமிருந்து பணத்தைப் போட்டு, மறுபடி வெண்ணெய் வாங்கிக் காய்ச்சி எடுத்து வைத்து விட்டாள். இது அந்தப் பெண்ணின் மனதில் மாமியாரைப் பற்றி உயர்வான எண்ணத்தை ஏற்படுத்தியது. இது மாதிரி செய்கைகள்தான் ஆரம்பத்தில் இருவர் உறவையும் பிணைக்கிறது. அதை விடுத்து 'என்ன உன் வீட்டு லட்சணம்...' என ஆரம்பிக்கும் போது பிற்கால மொத்த வாழ்க்கையும் சிதைந்து போகிறது.

எனக்குக் கிட்டின உறவில் ஒருவர் வீட்டில் பெண்களைப் போல மாட்டுப் பெண்களும் தன் மாமியார், மாமனாரிடம் மிகப் பிரியமாக இருக்கிறார்கள். அந்த மாமனாரும் மாட்டுப் பெண்களுடன் சேர்ந்து உட்கார்ந்து கொண்டு சாப்பிடுகிறார். டீ.வி. பார்க்கிறார். அதற்காக மாட்டுப் பெண்கள் மரியாதை இல்லாதில்லை. மிக மரியாதையுடனும் பிரியத்துடனும் பழகு கிறார்கள்.

மாமியார்களுக்கு ஒரு சின்ன வேண்டு கோள் - மாட்டுப் பெண் என்ன தவறு செய்தா லும் அவளின் பிறந்த வீட்டையோ அல்லது மனிதர்களையோ சீர்வரிசைகளைப் பற்றியோ குறை கூறாதீர்கள். பிறகு பாருங்கள் உங்கள் முதுமை காலத்தில் மாட்டுப்பெண் எவ்வளவு அன்பாய் நடந்து கொள்கிறாள் என்று. நம் உடல், மனம் பலம் குறையும்போது அன்பும் ஆதரவும்தானே வேண்டும்.

— லக்ஷ்மி சிவராமகிருஷ்ணன்.

சாதாரணமாக 12 வயது ஆன ஆண் குழந்தையை தாய் தன்னிடமிருந்து சற்று விலக்குகிறாள். காலப் போக்கில் அது விலகிப் போகிறது. புது மனைவியிடம் ஆண்கள் எப் போதும் பேசிக் கொண்டிருப்பது கூட நீண்ட நாட்களுக்குப் பிறகு ஏற்படும் பெண் சிநேகம் தாய் தோழியாக இல்லாததும் ஒரு காரணம். 'ம்ஹும், அப்போ எல்லாம் என் மகன் என்

**தோசைப் பொடி அரைக்கும் போது, ஒரு டேபிள் ஸ்பூன் சீரகத்தை வறுத்து, பருப்புடன் சேர்த்தரைத்தால் வாசனையாக இருப்பதுடன் எளிதில் செரிக்கும்.**

**— விஜயராணி**



அன்னையின் அன்பைப் போல
எப்போதும் அக்வாகார்டை
நீங்கள் நிச்சயம் நம்பலாம்.

TRITON/96/EFL/135 TAM



வாழ்க்கையில் சிலவற்றை நீங்கள் எப்போதும் நிச்சயமாக நம்பலாம். அன்னையின் அன்பைப் போல, அக்வாகார்ட்டைப் போல. ஏனெனில் அக்வாகார்ட் வாட்டர் ப்யூரிஃபையர் ஒரு நூதனமான **எலக்ட்ரானிக் மானிட்டரிங் சிஸ்டம்** கொண்டது. முன் நிர்ணயிக்கப்பட்டுள் தர அளவிற்கு, பரிசுத்த நிலைமட்டம் குறையும்போது, இது தண்ணீரின் வரவைத் தடுத்து விடுகிறது. மேலும் இதன் மூன்று கட்ட சுத்திகரிப்பு செயல்முறை, அறியப்பட்டுள்ள, நீர்வழித் தொற்றும் நோய்களுக்குக் காரணமான அனைத்து பாக்டீரியாக்களையும் கிருமிகளையும் அறவே அகற்றுகிறது. தவிரவும் வீடு தேடிவரும் பணிச்சேவைக்கான யுரேகா ஃபோர்ப்ஸ் உத்தரவாதமும் கிடைக்கிறது. எனவே 8 இலட்சத்துக்கும் மேற்பட்ட இல்லங்களின் நம்பிக்கைக்கும் முதல் தேர்வுக்கும் உரியதாக அக்வாகார்ட் விளங்குவதில் ஆச்சரியமில்லை.

**Aquaguard**
WATER PURIFIER
*Every drop is pure.*




*Friends for life*

*A subsidiary of Forbes Gokak Ltd.*

***To ensure your family's good health, call or write to us at*** : **MUMBAI** : BHUPESH GUPTA BHAVAN, 85 SAYANI ROAD, PRABHADEVI, MUMBAI 400 025. TEL : 4301725. **COCHIN** : TEL: 317555/56. MADRAS : TEL: [illegible] **BANGALORE** : TEL: 5536362/83. **HYDERABAD** : TEL: 844128, 840183.

உங்கள் செல்வ மகளின்
நல்வாழ்வில்
எங்களுக்கும் பங்குண்டு.

மங்கல நாதம் ஒலித்திட,
மாலை சூடி மணக்கோலத்தில்
செல்வ மகளை நினைத்துப்
பார்க்கும் உங்கள் கனவு நனவாகிட

**KVB** யின்

# திருமகள் திருமணத் திட்டம்




## கரூர் வைஸ்யா பாங்க் லிட்.

கரூர் – 639 002

A.D. நவநீதன்
சேர்மன்

நாளும் நம்பிக்கை வளர்க்கும் வங்கி

Anugrah 2231/96 R

நம்மில் பல சகோதரிகள், கோலத்திற்கு கலர்ப்பொடி போடும் போது சலித்த மணல் (அ) கோலப்பொடியில் கலந்து போடுவார்கள். அவ்வாறு போடும்போது கலர்ப்பொடி லைட் கலராகி விடுகிறது. பிரைட்டாகயிருப்பதில்லை. கோதுமை மாவை சலித்த உமியில் கலர்ப்பொடியை பிசிறி வைத்துக் கொள்ளுங்கள். நாம் வாங்கிய கலராகவேயிருக்கும். நிறம் மங்குவதில்லை.

— விஜயராணி



னிடம் பேசவே மாட்டான் இப்போ என்ன தான் பேசுவானோ' என்று புலம்பக் கூடாது.

தன் வாரிசை சுமக்கிறாள் தாயாகப் போகிறாள் எனும் போது அவளுடைய வேலைகளில் சிறிது உதவுவது மனிதாபிமானம். ஐயோ என் மகன் பொண்டாட்டி தாசன் ஆகிவிட்டான் என்று ஊரெல்லாம் புலம்புவது. தன் மகன் மற்றவர்களுடன் பேசிக் கொண்டிருந்தால் மாப்பிள்ளையிடம் போய் பேசிக் கொண்டிரு என்று விரட்டுகிற தாய்க்கு ஏனோ மகனும் மருமகளும் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தால் பொறுப்பதே இல்லை. இவற்றைக் கண்டு தாய்மீது மகனுக்கு வெறுப்பு வளர விதை போடும்.

அன்று நான் அனுபவித்ததை தான் இன்று என் மருமகள் அனுபவிக்கிறாள் என்ற நினைவு வந்தால் பெரும்பாலான பிரச்னைகள் குறையும். மருமகள் வந்த உடனேயே சமையல் பொறுப்போடு கடன், கடமை (நாத்திக்குச் செய்வது, மைத்துனர்க்குச் செய்வது மாமனார், மாமியார் அனைவரின் பிரச்னைகளையும் சமாளிக்க வேண்டும்) யையும் அவளிடம் ஒப்படைக்கும் மாமியார்க்கு அவள் ஏதேனும் சொல்லி விட்டால் மட்டும் 'நேற்று வந்தவளுக்கு என்ன தெரியும்' என்று கேட்பது எந்த விதத்தில் நியாயம்?

எல்லாம் சரி தன் மகனுக்கு ஒன்றுமே தெரியாது என்றும் வந்த பெண்தான் எல்லாம் சொல்லிக் கொடுத்து விட்டதாக ஒரு செய்தி தலைமுறை தலைமுறையாக உலவுகிறதே. இந்த வார்த்தையை சிறைபடுத்தும் வீட்டில் பிரச்னை எனும் செடி வளராது என்பது உண்மைதான்.

— மாலதி அருள்மணி.

கிராமச் சூழ்நிலையில் முழுக்க முழுக்க ஒரு ஆசாரமான குடும்பத்தில் பிறந்து வளர்ந்து, அதே போன்ற ஒரு ஆசாரமான குடும்பத்தில் புகுந்து ஏகப்பட்ட கட்டுதிட்டங்களுடன் 60 ஆண்டு கால மண வாழ்க்கையை முடித்து மிகச் சிறப்பாக சதாபிஷேகமும் செய்து கொண்டவர் எனது மாமியார் திருமதி ருக்மணி அம்மாள் (வயது 76). தனது 9 குழந்தைகளை பெற்று ஆளாக்கி அனைவரும் இன்று சீரும் சிறப்புடனும், உள்ளனர். மகன், மகள், மருமகள்கள் அனைவரும் செட்டிலாகி விட்ட ஒரு பெரு நகரத்தில் தானிருந்த கிராமத்தை விட்டு குடி பெயர்ந்து விடக் கூடிய சூழ்நிலை அவருக்கு ஏற்பட்ட போது, திடீரென்று ஏற்பட்ட அந்த மாற்றத்தை அவர் கொஞ்சமும் முகம் சுளிக்காமல் ஏற்றுக் கொண்டார். அந்த சந்தடி நிறைந்த நகர வாழ்க்கையை அவர் ஒரு போதும் சலித்துக் கொண்டதில்லை.

சாப்பிட்ட இடத்தை சாணி போட்டு மெழுக வேண்டும், வீட்டுக்கு விலக்கானால் பக்கத்தில் வரக் கூடாது, பற்றுபசை பார்க்க வேண்டும் என்றெல்லாம் காலம் காலமாக பழகிய அவர் அவற்றையெல்லாம் துறந்து பல புதிய பழக்கங்களை குறை கூறாமல் ஏற்றுக் கொண்டவர். சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் தன் பேரன் பேத்திகளுக்கு ஆசாரம், சுத்தம், நீதிக் கதைகள், நியான ஸ்லோகங்கள் போன்றவற்றை அவர் கற்றுக் கொடுக்கத் தவறியது இல்லை. இத்தனைக்கும் இடையில் மணமானது முதல் தன் இறுதி மூச்சு வரை தான் செய்து வந்த வெள்ளிக்கிழமை விளக்கு பூஜையை அவர் தவற விட்டதும் கிடையாது.

இது போன்ற பூஜைகளைச் சிறப்பாக செய்யும் போது தயார் செய்து வைத்திருக்கும் நிவேதனப் பொருட்களை குழந்தைகள் கேட்கும் போது பூஜை முடியுமுன்பே, எடுத்து வழங்கி விடுவார்.

ஆசாரங்களுக்கும், இது போன்ற கட்டுதிட்டங்களுக்கும் அவர் கொடுத்த மதிப்பை விட மனித உறவுகள் பலப்படுவதிலும், இவற்றைக் காரணமாக வைத்து சிறு விரிசல்கள் கூட குடும்பத்தில் வந்து விடக் கூடாது என்பதில் மிகவும் கவனமாக இருப்பார். மகன் மருமகள் என்று வேறுபாடின்றி அவர் அன்பைப் பொழியும் பாங்கு, பக்கத்தில் உள்ளவர்கள் மற்றும் உறவினர்கள் அனைவரையும் வியப்பிலாழ்த்தும். அதுவே அவருக்கு மரியாதை கொடுக்கவும் வைத்தது.

அடுத்த தலைமுறையினருக்கு அவர் ஒரு வழிகாட்டியாக, நல்ல ஆசானாக, பிரச்னை வந்த போது பக்குவமாக தீர்த்து வைக்கும் ஒரு மனித நேயமிக்கவராக இருந்து தன் வாழ்வை முடித்துக் கொண்டார்.

— விஜயா சுப்பிரமணியம்.

நிறைய வெளியில் சென்று அடிக்கடி பிறர் கண்ணில் படும் மனிதர்கள் சுத்தமாகவும், பளிச்சென்றும் விளங்க வேண்டும். இனிமையாகப் பழகுவதும், இளமை அழகு குறையாமல் இருப்பதும் அவசியம். சிலருக்கு அழகு சாதனங்களை விட இயற்கை முறைகளில்தான் அதிக நம்பிக்கை உண்டு. உழைப்பும், தேகப் பயிற்சியும் அழகைக் காப்பாற்றிக் கொள்ள முக்கியமானவை என்று கருதுகிறார்கள். அழகு முகத்தில் உடலில் உண்டு. அதே போல பேச்சில் உடுத்தும் உடையில், நடக்கும் நடையில் பிறரிடம் காட்டும் அன்பான யுங்கள்.

முழு உடம்பின் ஆரம்பமே வாய்தான். ஜீரணம் முதலில் வாயில் இருந்து தான் ஆரம்பிக்கிறது. உணவை நன்றாக மென்று விழுங்கினால்தான் அதன் முழுப் பலனும் கிடைக்கும். சரியாக அரைபடாத உணவுடன் காற்றும் சேர்ந்து உள்ளே போவதால், அதிகம் அமிலம் உற்பத்தியாகி அல்சர், மற்றும் வயிற்றுப் புண் போன்ற வியாதிகள் வரும்.

கருவுற்று இருக்கும் பெண்களுக்கு சுண்ணாம்புச் சத்து, இரும்புச் சத்து, வைட்டமின் கலந்த உணவு கொடுக்க வேண்டும். குழந்தை பிறந்த

# அழகுக்கு அழகு செய்ய...



நல்ல மழை நேரத்தில் என் தோழியின் வீட்டிற்குக்குச் செல்ல வேண்டி வந்தது. அவள் சூடான இட்லியும் தொட்டுக் கொள்ள எண்ணெய் குழைத்த பொடியும் வைத்தாள். கொள்ளை ருசியாக இருந்தது. என்ன பொடி என்று கேட்டதற்கு 'நீயே கண்டு பிடி' என்று சவால் விட்டாள். ஒரு வழியாக அவளை கெஞ்சி கேட்ட பிறகு கூறினாள். மோர் மிளகாயை சிவக்க வறுத்து, எண்ணெய் வடிந்ததும் மிக்சியில் போட்டுத் தூளாக்கி நல்லெண்ணெய் விட்டுக் கலந்தால் தொட்டுக் கொள்ள சூப்பர் பொடிக்கலவை ரெடி.

— ராகினி தியாகராஜன்



நாட்டுப் பொன்னாங்காணி, சீமைப் பொன்னாங்காணி என்று இரு வகைகள் இருக்கின்றன. இதில் நாட்டுப் பொன்னாங்காணி பச்சை நிறமுடையதாயும், இலைகள் சிறியதாயுமிருக்கும். சீமைப் பொன்னாங்காணி சிவப்பு நிறமுடையதாய் இலைகள் தடித்தும் நீண்டதாகவும் இருக்கும். நாட்டுப் பொன்னாங்காணியே சிறந்தது. இக்கீரையில் பொன் சத்து உண்டு. பொன் + ஆம் + காண் + நீ = பொன்னாங்காணி. இதை உண்டால் உடல் பொன்னாகக் காண்பாய் என்பது குறிப்பிடத்தக்கது. பித்த சம்பந்தமான நோய், பல் ஈறுகளில் உண்டாகும் நோய்களும் உண்டாகாது. பொன்னாங்காணியைக் கொண்டு தைலம் காய்ச்சி தலைக்குத் தடவினால் தேகக் குளிர்ச்சி ஏற்படும். உடல் சூடு தணியும். பொன்னாங்காணி கீரையில் சுண்ணாம்பு, இரும்புச் சத்து உள்ளது. புரதச் சத்து மிகுதியாக உள்ளது.

சாதாரணமாக 40 வயது மேற்பட்டவர்களுக்கு நரை தோன்றும். ஆனால் இப்போது இளம் வயதுள்ள நங்கையர்களுக்கு நரை தோன்ற ஆரம்பித்து விடுகிறது. உடலில் ஏற்படும் தளர்ச்சி முதுமை வயதுதான் நரைக்குக் காரணம். இளம் நரைக்குப் பித்தம்தான் காரணம். கவலை, மனச்சோர்வும் தலையைப் பலவீனப்படுத்தி, நரையை ஏற்படுத்தும். அதிகம் காப்பி, தேநீர் பருகினால் பித்தம் ஏற்படும். இளம் வயதில் வரும் பித்த நரையை தடுக்கலாம். இளநரையை தடுக்க பச்சைக் காய்கறிகள், பழவகைகள், நிறைய சேர்த்துக் கொள்ளுங்கள். அசைவ உணவுக்காரர்கள் மீன், மாமிசமும், சைவ உணவுக்காரர்கள் பால் உணவுகளை நிறைய சாப்பிடலாம். சாக்லேட், இனிப்பு, கேக் வகைகளைத் தவிருங்கள். தினமும் 8 டம்ளர் தண்ணீர் அவசியம் குடியுங்கள்.

சடை போட வாரிக் கொள்ளும் போது நன்றாகப் பிரித்து படரவிட்டு பத்து விரல்களின் நுனிகளால் தலையை (Scalp) நன்கு அழுத்தமாக பரவலாகவும் ஒரே சீராகவும் மசாஜ் செய்ய வேண்டும். ஒவ்வொரு முறை தலைவாரும் முன் இவ்வாறு இரண்டு நிமிடங்கள் செய்ய வேண்டும். இம்முறையினால் போதிய இரத்த ஓட்டம் தலைக்குக் கிடைப்பதால் கேசம் உறுதியாகவும் ஆரோக்கியமாகவும் வளருகிறது.

இளம் பெண்களுக்குப் பெரும் பிரச்னை பேன். வாரத்தில் இரண்டு நாட்கள், வேப்பிலையைப் போட்டு நன்கு கொதிக்க வைத்த தண்ணீரை நன்கு ஆறியதும் தலைக்குப் பயன்படுத்தினால் பேன் போகும்.

இயற்கை அழகுக்கு அழகு செய்வது போல மணபெண் அலங்காரத்தில், பலவித உயர் மூலிகை வகைகளைக் கொண்டு நான் செய்யும் Herbal oil மசாஜ் எனக்கு நல்ல பெயரை வாங்கிக் கொடுத்துள்ளது. மண நாள் ஒரு மாதம் முன்பே மூலிகைகளைக் கொண்டு அவரவர் சருமத்திற்கு ஏற்றபடி மூலிகை 'பேக்' தயார் செய்கிறேன். (என்னுடைய தொலைபேசி மாறுகிறது. எனவே முகவரி தேவையானவர்களுக்கு - T5, ஸ்ரீ அபார்ட்மெண்ட்ஸ், 11, 2-வது கிராஸ் தெரு, யுனைடெட் இண்டியா காலனி, கோடம்பாக்கம், சென்னை - 24) முக்கியமாக நாம் கவனிக்க வேண்டியது முதுகுப் பகுதி. குளிப்பதற்கு ஒரு மணி நேரம் முன்பே ஆலிவ் ஆயில் 2 ஸ்பூன், பாதாம் எண்ணெய் ஒரு ஸ்பூன் கலந்து குழைத்து முதுகுப் பகுதியில் நன்கு தேய்த்து விட வேண்டும். ஒரு மணி ஊறியதும் குளித்தால், நரம்புத் தண்டு உள்ள முதுகுப் பக்கத்தில் அதிக நன்மை ஏற்படும். நான் முழுவதும் உற்சாகமாகவும் இருக்கும். வெளிக்காற்றுடன் தொடர்பு கொண்டுள்ளது நம் சருமம். வெளி சீதோஷ்ண நிலைக்கேற்ப நம் சருமத்தை கவனமாக பாதுகாக்க வேண்டும்.

— ஹேமா லக்ஷ்மண்

"நம் நாடு மக்கள் தொகை மிகுந்த நாடு என்பதால் குடும்பக் கட்டுப்பாடு பற்றி ஏகமாகப் பேசுகிறோம். அரசாங்கம் மிகத் தீவிரமான பிரசாரத்தில் இறங்கி சாதாரண மக்களுக்கும் குடும்பக் கட்டுப்பாடு பற்றி அறியும் நிலைக்கு வந்திருக்கிறோம். ஆனால் இதன் மறுபக்கமாக குழந்தையில்லையென்றால் அந்தத் தம்பதிகள் படும்பாடு இருக்கிறதே, அது எங்களைப் போன்ற மருத்துவர்களுக்குத்தான் தெரியும்" என்கிறார் டாக்டர் சாவித்ரி ராகவன். 'சாய் இன்ஃபெர்டிலிடி சென்டர்' எனும் பெயரில் (சிபி - 50, ரசாக் கார்டன் மெயின் ரோடு, அரும்பாக்கம், சென்னை - 10 தொ. - 4834490, 421990) மோகன் நர்சிங் ஹோமை நடத்தி வரும் இவர் தன் கணவர் டாக்டர் ராவனுடன் இத்துறையில் மிகுந்த கவனம் செலுத்தி வருகிறார்.

"என் கணவர் இராணுவத்தில் மருத்துவராக பணிபுரிந்த போதும், ஆந்திராவில் இருந்த போதும் என் மருத்துவத் தொழிலையும் தொடர்ந்து கொண்டிருந்தேன். இப்படிப் பல இடங்கள், பல மனிதர்களுடன் பேசிப் பழகி மருத்துவம் பார்க்கும் வாய்ப்பு கிட்டும் போதுதான் குழந்தையில்லாத பெண்களின் துயரம் என்னை மிகவும் தாக்கியது.

ஒரு தம்பதிக்குக் குழந்தை பிறக்கவில்லை என்றவுடன் அங்கு பாதிக்கப்படுபவர் பெண்ணாகத்தான் இருக்கிறாள். மலடி என்றெல்லாம் அவளுக்குப் பட்டம் சூட்டுவதும், இன்னும் பலரும் கூடும் விசேஷங்களில் அவளை வார்த்தைகளால் வறுத்தெடுப்பதும்.... இன்றும் இவை தொடர்ந்து கொண்டுதான் வருகிறது. குழந்தை பிறக்காமல் போவதற்கு பெண் காரணமாவது போல ஆணும் காரணம்தான் என்பதை எத்தனை பேர் ஏற்றுக் கொள்கிறார்கள்?

# ஆண்களும் பல சமயங்களில் காரணமாகிறார்கள்!



ஆண்கள் இதைத் தங்களுடைய மிகப் பெரிய ஈகோ, தன்மான பிரச்னையாக எடுத்துக் கொள்கிறார்கள். அல்லது அவனுடைய தாயாலோ, குடும்பத்தவராலோ எடுத்துக் கொள்ள வைக்கப்படுகிறார்கள். மிகச் சிலரே இதையும் ஒரு மருத்துவரீதியாக ஈஸியாக எடுத்துக் கொண்டு தங்களைப்

பரிசோதனைக்கு உட்படுத்திக் கொள்ள சம்மதிக்கிறார்கள்.

நாங்கள் சென்னைக்கு வந்து செட்டிலாகி கிட்டத்தட்ட இருபதாண்டுகள் ஆகி விட்டன. குழந்தைப் பேறின்மையைத் தவிர்க்கும் மருத்துவத்தில்தான் அதிக ஈடுபாடும், ஆராய்ச்சியும் செய்து வரு கிறோம். நான் சொல்லும்போது 'குழந்தைப் பேறின்மையைத் தவிர்க்கும்' எனச் சொன்னேன் இல்லையா, இந்த வார்த்தைகள் முக்கியத்துவம் வாய்ந்தவை.

விளக்குகிறேன். குழந்தை பிறக்கவில்லை,



மருத்துவப் பரிசோதனைக்குச் செல்ல வேண்டும் என தம்பதிகள் நினைக்கும் போதே இதன் அதிகபட்ச முயற்சிகளான செயற்கைக் கருத்தரிப்பு, டெஸ்ட் டியூப் பேபி என்றெல்லாம் யோசனை போய் விடுகிறது. எங்களுடைய ஆராய்ச்சி அனுபவத்தில் கூறுகிறேன், "தங்களுக்குக் குழந்தை உண்டாவில்லையே' என யோசிக்க ஆரம்பித்தவுடனேயே பெரிதாகக் கவலைப் பட வேண்டியதில்லை, யோசனையிலேயே நாட்களையும் கடத்த வேண்டாம். பெரும் பாலான தம்பதிகளுக்கு சிறுசிறு பிரச்னை களால் குழந்தை உண்டாகாமல் போய்விடு கிறது. அவற்றை என்னவென்று அவர் களுக்குப் புரியவைத் தால் போதும். இப்படி நான் பல தம்பதி யருக்கு சிறு சிகிச்சைகள் செய்தே வெற்றி பெற்று இருக்கிறேன்.

உதாரணமாக பெண்களுக்கு டி.பி. எனப்படும் நோய் வரும் போது அது கர்ப்பப்பையையும் பாதிப்பதுண்டு. மிகப் பலருக்கும் இது தெரிவதில்லை. ஆன்ட்டி-டியூபர்கொலோஸிஸ் மருந்து எடுத்து நோயை மட்டுப்படுத்தும் போது கருதரிக் கிறார்கள். பலருக்கும் கருப்பையில், டியூப் களில், அடைப்புகள் இருப்பதுண்டு. அதே போல பலருக்கு 'செக்ஸ்' என்பதே என்னவென்றும் தெரிவதில்லை. இவை, கவுன்சிலிங்கில் சரி செய்யலாம். பொதுவாக இப்போதெல்லாம் ஓரளவு வயது வந்த பிறகே திருமணம் செய்கிறார்கள். பதினேழு வயது திருமண மான பெண் கருத்தரிக்க வில்லையென்றால் ஓரிரண்டாண்டுகள் காத்திருக்கலாம். பத்தொன்பது வயதுக்கு மேல் என்றால் ஆறுமாதத்திற்குள் கருத்தரிக்கவில்லை என்றால் உடனடியாக டாக்டரிடம் கலந்தாலோசிப்பது நல்லது.

இந்த இடத்தில் நான் இன்னொன்றும் சொல்கிறேன். இன்றைய உலகில் நடைமுறை வாழ்க்கையின் காரணமாக ஆண்களுக்குத் தான் குழந்தை உண்டாகாமல் போவதற் குரிய தன்மைகள் அதிகமாக உள்ளன. புகைபிடித்தல் போன்ற பழக்கங்கள், பல கற்பனையான அச்சங்கள், டூவீலர் போன்ற பல காரணங்கள்.

ஆண்கள் டூவீலரில் மிக அதிகப் பயணம் செய்யும் போது உஷ்ணம் காரணமாக பாதிப்பு ஏற்படுகிறது. 'பொல்யூஷன்', காய் கறிகளில் போடப்படும் செயற்கை உரம் இவையும் ஆண்களிடம் மலட்டுத்தனம் ஏற்பட காரணமாகிறது. மற்றொன்று, 'ஸ்பெர்ம்'மில் நிறைய உயிரணுக்கள் இருந் தாலும் அவை 'ஆக்டிவ்'வாக மேல்நோக்கி நீந்துகிறதா என்பதையும் மருத்துவப்




பரிசோதனையைத் தொடர்ந்து கொள்ள வேண்டும்.

நாங்கள் இதற்காகவே குழந்தையில்லை எனும் பிரச்னையோடு வருகின்ற கணவன், மனைவி இருவரையும் நுணுக்கமாகப் பரி சோதிக்கிறோம். பிறகு தனித் தனியாக அவர் களுடன் முழுமையாகப் பேசுகிறோம். எங்களுடைய மருத்துவ பரிசோதனை முடிவையும், அவர்களுடன் பேசின விஷயங் களையும் வைத்துக் கொண்டு பெரும்பாலும்

**SB**
**SmithKline Beecham**

**கு**ழந்தைங்க சாப்பிடாம அடம்பிடிப்பாங்கதான்!

எம் பொண்ணு ப்ரியா, வயிறு நிறைய சாப்பிட்டாளா அதுவும் சரியானத சாப்பிட்டாளான்னு எனக்கு எப்பவுமே கவலையா இருந்தது.

நான், டாக்டரை பார்த்து இதுக்கு என்ன செய்யலாம்னு கேட்டது ரொம்பவே நல்லதா போயிடுச்சு.

அப்போதான் தெரிஞ்சது, 1-லிருந்து 3 வயசு குழந்தைங்களுக்கு ஸ்பெஷல் ஊட்டச்சத்து ரொம்ப அவசியம்ன்னு. இந்த வயசுல அவங்க எவ்ளோ வேகமா வளர்றாங்க!

அப்புறம்தான் Junior Horlicks பத்தி எனக்கு தெரிய வந்தது.

பால், கோதுமை, மால்டட் பார்லி இதெல்லாம் சேர்த்து சின்ன குழந்தைகளுக்குன்னு ஸ்பெஷலா தயாரிச்சிருக்காங்க. நேச்சுரல் பொருட்களால் தயாரிச்சிருக்கிறதால ஈஸியா ஜீரணமாகுது.

அதோட, இதுல எக்ஸ்ட்ரா கால்ஷியம், எக்ஸ்ட்ரா அயர்ன், முக்கிய விட்டமின், புரோட்டீன் எல்லாம் இருக்கு.

தயார் பண்றதா? ரொம்ப ஈஸிங்க! பால்ல கலந்து அப்படியே குடுக்கலாம்.
தெனமும் ரெண்டு தடவை.

ஸ்பெஷல் 1·2·3 ஊட்டச்சத்து

உண்மையா சொன்னா, மனசு சந்தோஷப்படறப்போ, எனக்கு இதத்தான் சொல்லத் தோணுது...

க்யூ,



# இந்தியா செக்யூரிடீஸ் லிமிடெட்

அளிக்கும்

# Positive Deposit Schemes

## அதிக பாதுகாப்பு

- CARE AA - மதிப்பீடு
  "High Investment Grade"
- குரூப் நிறுவன சொத்துக்கள் ரூ. 15,000 கோடி

## அதிக வருமானம்

- ஆண்டிற்கு 17.50% முதல் 29.77% வரை வருமானம் அளிக்கும் திட்டங்கள்

## அதிக நம்பிக்கை

- 15 லட்சத்திற்கும் மேற்பட்ட பங்குதாரர்கள்
- பல்வேறு அத்யாவசியமான தொழில்களில் ஈடுபாடு

## நிறைவான சேவை

- வட்டிக்கு முன் தேதியிட்ட காசோலைகள்

| காலம் மாதங்கள் + நாள் | வட்டி மாதம் ஒரு முறை | வட்டி காலாண்டிற்கு ஒரு முறை | வட்டி ஆண்டிற்கு ஒரு முறை | குமுலேடிவ் மூலம் பெறக்கூடிய வருமானம் |
|---|---|---|---|---|
| 12 + 1 | 17.50 % | 17.75 % | 19.00 % | 19.00 % |
| 15 | 17.75 % | 18.00 % | 19.25 % | 20.00 % |
| 24 + 1 | 18.00 % | 18.25 % | 19.50 % | 21.40 % |
| 36 | 18.50 % | 18.75 % | 20.00 % | 24.27 % |
| 48 | 18.50 % | 18.75 % | 20.00 % | 26.84 % |
| 60 | 18.50 % | 18.75 % | 20.00 % | 29.77 % |

% - ஆண்டு வட்டிவிகிதம்

[illegible]

மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ளுங்கள்.

**India Securities Limited**

INDSEC 14, ஹாடோஸ் ரோடு, சென்னை - 600 006. தொலைபேசி : 8279517.

விண்ணப்பப் படிவங்களுக்கு தொடர்பு கொள்ள : மும்பை : 4950606, 2044006, Extn. 1520/21, 2041003, சென்னை : 8279517, 8272377, பெங்களூர் : 5591650, 5591708, ஹைதராபாத் : 313585, கல்கத்தா : 2406177, புது டெல்லி : 6842458 / 9546, அகமதாபாத் : 6560277, 6561844, சூரத் : 683461.

ESSAR

ISL/1168



## கௌரவிக்கப்பட்ட மாதர் சங்கம்!

நேரு நகர் மாதர் சங்கம் 35 ஆண்டுகளாக குரோம்பேட்டையில் பெண்கள், குழந்தைகளுக்கென பல திட்டங்களை மேற்கொண்டு சிறப்புற பணியாற்றி வருகிறது. தையல், பாட்டு, வீணை வகுப்புகளிலும் பல பெண்கள் பயின்று பயனடைந்து வருகிறார்கள். வேலைக்குச் செல்லும் பெண்களுக்காக விடுதி ஒன்று ஆரம்பிக்கப்பட்டு 35 பெண்கள் அதில் தங்கி இருக்கிறார்கள். ஆதரவற்ற முதியோர்க்கென ஓர் இல்லம் அமைக்கப்பட்டு, அதில் 8 முதியோர்கள் சகல வசதியுடன் இருந்து வருகிறார்கள். வேலைக்குச் செல்லும் ஏழை தாய் மார்களுக்காக, அவர்கள் குழந்தைகளை பாதுகாக்க காப்பகம் நடைபெற்று வருகிறது. இதில் 125 சின்னஞ்சிறு குழந்தைகள் (0 - 5) இருந்து வருகிறார்கள். அவர்களுக்கு சத்துள்ள மதிய உணவும், மாலை சத்துள்ள கஞ்சியும், தின்பண்டங்களும் கொடுக்கப்பட்டு வருகிறது. இதில் குடும்ப பிரச்னைகளை ஏற்று வருபவர்களுக்கு இலவசமாக ஆலோசனையும், உதவியும் அளிக்கப்பட்டு வருகிறது. சுற்றுப்புறங்களில் உள்ள பல ஏழைக் குடும்பங்களுக்கு புகை இல்லா (Smokeless Chullahs) அடுப்புகள் வினி யோகிக்கப்பட்டது. எரி பொருள் சிக்கனத்தைப் பற்றியும், எயிட்ஸ் தடுப்பு விழிப்புணர்ச்சி பற்றியும் எடுத்துரைக்கப்பட்டது. இவ்வாறான பல்வேறு நிகழ்ச்சிகளை சிறப்புற நடத்திவரும் இந்த மாதர் சங்கத்திற்கு 1996 -ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 12ம் தேதியன்று இந்திய மாதர் சங்கத்தின் சார்பாக First Best Award அளிக்கப்பட்டது. இதன் தலைவி திருமதி குந்திபால் அவர்களால் இந்த கேடயம் கொடுக்கப்பட்டது. இதை நேரு நகர் மாதர் சங்கத்தின் தலைவி திருமதி சாரதா வெங்கட்ராமன் பெற்றுக் கொண்டார்.

---

என்ன காரணம் எனக் கண்டு பிடித்து விடுகிறோம். பல சமயங்களில் சிறிய குறைபாடுகளே குழந்தை உண்டாகாமல் போவதற்குக் காரணம் என அறியும் போது பாதிக்கப்பட்ட தம்பதிகளுக்கே வியப்பாகத்தான் இருக்கும். அவற்றைச் சரி செய்து விடும் போது சிகிச்சை முழுமையடைகிறது. அடுத்த வருடமே அவர்கள் குழந்தையுடன் எங்களைப் பார்க்க வரும்போது மகிழ்ச்சியாக இருக்கும்...."

என்கிறார்கள் இத்துறையில் தங்களை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டு இருக்கும் இத்தம்பதிகள்.

"நீங்கள் ஆரம்பத்திலேயே குழந்தையில்லாப் பெண்ணின் துன்பங்கள் பற்றிச் சொன்னீர்கள். இதைப் பற்றி பொதுவாக என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?"

"இதை நீங்கள் முக்கியமாக மற்றவர்களுக்குச் சொல்ல வேண்டும். குறிப்பாகப் பெண்களுக்குத் திருமணமாகி ஒரு ஆறுமாதம் வரைதான் அந்தத் தம்பதியரைச் சும்மா விடுகிறார்கள். அதற்கப்புறம், 'என்ன ஒண்ணும் விசேஷம் இல்லையா?' என்பதும், 'என்ன லாங்டெர்ம் பிளானா' என்பதும், சடங்கு சம்பிரதாயம் எனும் பெயரில் யாருக்கேனும் வளைகாப்பு சமயத்தில் இந்தப் பெண்ணை அவமானப்படுத்துவதும்...

நாம் எவ்வளவோ விஞ்ஞானத்தில், கல்வியில், பல துறைகளில் முன்னேறியிருக்கிறோம். ஆனால் இது போன்ற விஷயங்களில் நாம் முன்னேறாமலேயே இருக்கிறோம். குறிப்பாக பெண்களைத்தான் இந்த விஷயத்தில் சொல்ல வேண்டும். எந்தப் பெண்ணாவது தானே விரும்பி குழந்தை பெற்றுக் கொள்ளாமல் இருப்பாளா? அவளுடைய தவறு என்று இதில் ஒன்றும் இல்லாதபோது பலவிதமாக சக பெண்களே அவளை அவமானப்படுத்துவது மிகக் கொடுமையான விஷயம். அதைக் கண்டிப்பாக நம் பெண்கள் தவிர்க்க வேண்டும்.

அதே போல மணமான தம்பதிகளும் குழந்தை உண்டாகவில்லையென்றால் விரைவிலேயே சிகிச்சை பெற்றுக் கொண்டார்கள் என்றால், பெரிய அளவிற்கு சிகிச்சை என்பது வளராமல் இருக்கும்... அதே சமயம் செயற்கைக் கருத்தரிப்பு போன்றவை தேவை என்கின்ற பட்சத்தில் தயங்காமல் செய்து கொள்வதும் நல்லதுதான்."

என்கிறார் டாக்டர் சாவித்திரி ராகவன்.

பேட்டி : **புவன்**

# உங்கள் அன்பிற்குரியவர்களுக்கு எதை அன்பளிப்பாகக் கொடுக்க வேண்டும்.

| | |
|---|---|
| ஆரோக்கியம் | நவீனம் |
| சுவையான உணவு | சேமிப்பு |
| நீடித்த உழைப்பு | வீட்டுபயோகம் |
| வசதி | சுகம் |

நினைவிலிருக்கும்படியான ஒன்றை

## மேலுள்ளவைகளுடன் அவர்களுக்கு மற்றொன்றையும் கொடுங்கள்



# Premier

*Non-Stick Kitchen Collection*

தவ்வா, ஃப்ரை பேன், ஸாஸ் பேன் கடாய், அப்பம் பேன், அலுமினியம் மூடி, ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் மூடி. அனைத்தும் ஒரு கவர்ச்சிகரமான கட்டுக்கோப்பான, அன்பளிப்பிற்குத் தயாரான பெட்டியில்.

**Premier Marketing**, "Ankur Manor", 182, Poonamallee High Road, Kilpauk, Chennai 600 010., India.
Phone: 8231200, 8231300, 8231400, Fax: 91-44-8231500

பொன்னான தருணங்கள் என்ற தலைப்பிற்கு ஏற்ற வகையில் இந்த மாதம் நகை பரிசு பெறும் கட்டுரை அமைந்துள்ளது. அவருடைய வாழ்க்கையில் 'பொன்னான தருணங்களாக இருந்தவை இன்று இல்லையே, என வருந்தியுள்ளார்.

இப்பகுதியில் வெளிவரும் கட்டுரைகள் நெகிழ்ச்சியூட்டுவனவாக அமைகின்றன என வாசகர்கள் நிறைய பாராட்டுக் கடிதங்கள் எழுதுகிறார்கள்

அடுத்து மாதப் போட்டிக்கான தலைப்பு

## கொலுசு

வழக்கம் போல வாசகிகள் வெளுத்து வாங்கலாம்.

- கொலுசு சம்பந்தமாக உங்கள் வாழ்வில் நடந்த சுவையான சம்பவத்தை எழுதி அனுப்புங்கள்.

மங்கையர் மலர்
& ஏ.ஆர்.சி.
ஜுவல்லர்ஸ்
இணைந்து வழங்கும்

# பொன்னான தருணங்கள்

- கட்டுரை ஒரு பக்கத்திற்கு மிகாமல் இருக்க வேண்டும்.
- போட்டிக் கட்டுரையினை ஏ.ஆர்.சி. ஜுவெல்லர்ஸிற்கோ (114, கோடம்பாக்கம் ஹைரோடு, சென்னை - 34), மங்கையர் மலருக்கோ அனுப்பலாம். இரண்டு இடத்திற்கும் ஒரே கட்டுரையை அனுப்ப வேண்டாம்.
- சிறந்த கட்டுரைக்கு ஏ.ஆர்.சி. ஜுவெல்லர்ஸ் ரூ.3000/- மதிப்புள்ள தங்க நகையினை பரிசாக அளிக்கிறது.
- போட்டிக் கட்டுரைகள் அனுப்ப கடைசி தேதி : 20.02.97.
- போட்டியின் முடிவுகளில் ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

ரூ. 3000/- பெறுமானமுள்ள ஏ.ஆர்.சி. ஜுவெல்லர்ஸ் தங்கநகை பரிசு பெறும் கட்டுரை :

## பிரிந்த குடும்பம் சேருமா?

அப்போது எங்களுடைய குடும்பம் அழகான கூட்டுக்குடும்பமாக இருந்தது. எனது மாமனார், மாமியார் இரண்டு மைத்துனர்கள், அவர்களது மனைவிகள் குழந்தைகள் ஒன்றாக இருந்தோம். எனது மாமியார் மிகவும் அழகானவர். அவர் பலவிதமான மூக்குத்திகளை வைத்திருப்பார். அதில் ஒன்று அவர்



பலகாலமாக வைத்திருந்த ஏழுகற்கள் வைத்த அழகான மிகச் சிறிய வைர மூக்குத்தி . எனக்கு மிகவும் பிடித்தது அது. நான் முக்கியமான விசேஷங்களுக்கு செல்லும் போது கண்டிப்பாக வாங்கிப் போட்டுக் கொண்டு செல்வேன். அதைப் போட்டுக் கொண்டாலே என் முகத்தில் அதிக அழகாவது போன்று எனக்கு பிரமை.

எனக்கு அடுத்தபடியாக எனது இரண்டு மைத்துனர்களின் மனைவிகளுக்கும் அதன் மேல் எப்போதும் ஒரு கண்தான். இதைக் கண்ட என் மாமியார் (என் மீது தனிப் பிரியம் உடையவர்) எனது முதல் திருமண நாளன்று காலையில் என்னிடம் வாழ்த்து கூறிவிட்டு சர்ப்ரைஸாக அந்த அழகான மூக்குத்தியை என்னிடம் கொடுத்து "பத்திரமாக வைத்துக் கொள்" என்று பரிசாகக் கொடுத்தார். நாங்கள் பேசிக் கொண்டிருக்கும் போதே அடுத்த வேலை வந்து விட அருகிலிருந்த தூக்கில் மூக்குத்தியைப் போட்டு வைத்தேன். பிறகு சகஜமாக பேசிக் கொண்டே ஹாலுக்கு வந்த நான் அதைப் பற்றி வேலை மும்முரத்தில் மறந்தே போனேன். மாலையில் எங்களது நண்பர்களை விருந்துக்கு அழைத்திருந்தோம். டிரஸ் பண்ணிக் கொள்ளும் போது மூக்குத்தியைப் பற்றி எனக்கு நினைவு வந்தது. சரி இப்போது எடுத்துப் போட்டுக் கொள்ளலாம் என்று எண்ணியபடி அவசரமாக சென்று தூக்கில் பார்த்தால் தூக்கு காலியாக இருந்தது. எனக்குப் பகீர் என்றிருந்தது. என்னது நாம இதுக்குள்ள தானே போட்டோம் என்று சந்தேகத்திற்காக அத்தனை டப்பாக்களையும் அலசியாகி விட்டது. எதிலுமே கிடைக்கவில்லை.

எங்கள் நண்பர்கள், ஒவ்வொருவராக வர ஆரம்பித்தனர். 'கடவுளே கல்யாண நாளதுமா இதென்ன சோதனை' என்று மனம் கலங்கியபடி மறுபடி டப்பாக்களை குடைந்து கொண்டிருந்தேன். அப்போது அருகே வந்த என் ஓர்படிகள் என்ன தேடறீங்க! என்று கேட்க 'இல்லை இந்தத் தூக்கில்' என்று ஆரம்பித்ததுமே, ஆமாம், 'இதுல இருந்த ரவையை கொஞ்ச முன்னாடிதான் ரவாகிச்சடி பண்ண மாமியிடம் கொடுத்தேன்' என்றாளே பார்க்கலாம். ஐயையோ, எல்லாம் போச்சு என்று நினைத்து என் கணவரிடம் சென்று மெதுவாக விஷயத்தைச் சொன்னதும் அவருக்கு வந்த கோபத்தில்,

"எதை எப்படி வைக்கணும்னு தெரியாத ஜென்மத்துக்கு காஸ்ட்லி பொருளைக் கொடுத்த எங்கம்மாவை சொல்லணும்" என்று திட்டிக் கொண்டே 'சரி வா பார்க்கலாம்' என்று கிச்சனுக்கு போய் கிச்சடியைக் கிளறி கிளறிப் பார்த்தால் கிச்சடி இன்னும் குழைந்தது தான் மிச்சம் மூக்குத்தி காணவில்லை. அதற்குள் எங்கள் வீட்டில் ஒவ்வொருவராக வந்து என்னாச்சு, என்னாச்சு என்று கேட்க ஆரம்பித்தனர். நான் அழ ஆரம்பித்தேன். என் மைத்துனர்கள், கணவர் அனைவரும் 'சரி, சரி வாங்க. நீங்களெல்லாம் இப்படி புலம்பினால் வந்திருப்பவர்கள் என்னவோ ஏதோ என்று பயந்து விடுவார்கள். டின்னரைக் கவனிக்கலாம்'' என்றார்கள். நான் மீண்டும் முகம் அலம்பி டிரஸ் பண்ணிக் கொண்டு வந்தவர்களை கவனித்தேன். மனம் மட்டும் யார் சாப்பிடும் போது மூக்குத்தி அகப்படுகிறதோ என்று பயமாக மனம் அலை பாய்ந்தது. யாராவது சிறிது நிறுத்தி நிதானமாக சாப்பிட்டால் உடனே மூக்குத்தியா என்று பார்க்குமளவுக்கு துடித்தது. என் கணவரோ எங்கே நான் யாரிடமாவது கேட்டு விடுவேனோ என்று என்னை முறைத்துக் கொண்டே இருந்தார். எப்படியோ எல்லாரும் போன பிறகு மூக்குத்தி இல்லை என்று தெரிந்தாகிவிட்டது. உள்ளுக்குள் யாருக்கு என்ன ஆகுமா என திகில் வேறு. அப்போது என் கடைசி மைத்துனர் "சமையல்காரமாமிக்காக டப்பாவில் கிச்சடி கொடுத்தீர்களே அதில் பார்த்தீர்களா" என்று சந்தேகத்தைக் கிளப்ப, அடுத்த தெருவிலிருக்கும் மாமியின் வீட்டிற்கு அந்த ராத்திரியில் படையெடுத்தோம்.

அவர்கள் வீட்டில் விஷயத்தைக் கூற எங்களை ஒரு மாதிரியாகப் பார்த்தார்கள். மாமியோ, "இந்தாடிம்மா இப்பத்தான் வேற பாத்திரத்தில் மாற்றினேன் இன்னும் யாருமே சாப்பிடலை'' என்று என் கையில் டிபன் பாக்ஸை கொடுத்துவிட்டார். சாரி சொல்லி விட்டு வீட்டிற்கு வந்து பொறுமையாகக் கிளறிப் பார்த்தோம். கிடைத்தால்தானே. இனி இப்படி அஜாக்கிரதை அலட்சியம் கூடாது என்றெல்லாம் ஆளாளுக்கு அட்வைஸ் பண்ண ஆரம்பித்தனர். நான் என்ன பண்ணுவது என்று புரியாமல் அழ அப்போது என் மாமனார் வெளியே போய்விட்டு முக்கிய வேலை ஒன்றை முடித்துவிட்டு உள்ளே நுழைந்தார்.

"என்னாச்சு, ஏன் எல்லாரும் என்ன பேசிக்கிட்டிருக்கிங்க, யாரெல்லாம் வந்தார்கள், ஏம்மா அழுறே" என்று கேட்க அவ்வளவுதான் அவரிடம் எனது சமர்த்தான மூக்குத்தி சமாச்சாரம் ஒப்பிக்கப்பட்டது. அதற்கு அவர் சிரித்துக் கொண்டே, "இன்னிக்கு எனக்கு 5 மணிக்கு அதிர்ஷ்டமடிக்கும்னு போட்டிருந்ததால் மூக்குத்தி கிடைச்சது என்று சந்தோஷமாயிருந்தேனே அடடா, அது உன்னோடதாம்மா" என்று எடுத்துக் கொடுக்க (அப்போதுதான் தெரிந்தது கிச்சடி பண்ணின உடனே அவர் வெளியில் கிளம்புவதால் கொஞ்சம் எடுத்துச் சாப்பிட கல் என்று நினைத்துப் பார்த்தால் மூக்குத்தி கிடைத்திருக்கிறது). ஹோ ஹேய் என்ற இரைச்சலுடன் வீடே அதிர்ந்தது. அப்பாடா எனக்குப் போன உயிர் திரும்பி வந்தது போலிருந்தது.

அன்றிலிருந்து எப்போது ரவை உப்புமா, கிச்சடி, கேசரி என்று எது செய்தாலும் என்ன இன்னிக்கு மூக்குத்தி உப்புமாவா? அதுவும் வைர மூக்குத்தி உப்புமாவா? எல்லாரும் தேடுங்கள் என்று கூறி கலாட்டா கேலி பண்ணுவார்கள் வீடு முழுவதும். இதை நினைத்தால் சிரிப்புத்தான் வரும்.

ஆனால் இந்த மாதிரி மிகவும் ஜாலியாக இருந்த நாங்கள் எங்கள் கூட்டுக் குடும்பத்தை விட்டு (பல காரணங்களினால்) பிரிந்து தனியாகக் குடித்தனம் நடத்துகிறோம். இப்போதும் இந்த நிகழ்ச்சியை நினைத்தால் எனக்கு அழுகை வரத் தவறுவதில்லை. மேலும் இதனை எழுதுவதன் மூலம் பிரிந்த எங்கள் குடும்பம் ஒன்று சேராதா என்ற ஆதங்கமும் ஏக்கமும் தான். என் ஒவ்வொரு திருமண நாளிலும் மறக்க முடியாத நிகழ்ச்சி இது. பிரிந்த எங்களது குடும்பம் மீண்டும் ஒன்று சேர பிரார்த்திக்கிறேன்.

— *சந்திராசேகர், விஜயவாடா.*

## பிரசுரத்திற்கு....

## விபரீதம் அது பலவிதம்

எனது சகோதரன் போபாலில் வசித்து வருகிறான். அவனுக்கு ஒரே மகன். ஒரு மாதமாக உடம்பு முடியாத நிலையில் தன் மகனை சென்னைக்கு அழைத்து வந்தான். பலவித சிகிச்சை செய்தும் அந்தக் குழந்தைக்கு உடல் தேறவே இல்லை. எதைச் சாப்பிட்டாலும் உடனே வாந்தி எடுத்துவிடுவான். திரவ உணவாக ஏதேனும் ஜூஸ் வகைகளை நிர்பந்தப்



படுத்தி கொடுப்போம். அப்படியே சாப்பிட்டா லும் உடனே வயிற்றுப் போக்காகும். காய்ச்சல் இல்லை. வேறெந்த பிரச்னையும் இருப்பதாக வும் மருத்துவர்களாலும் கணிக்க முடிய வில்லை. உடல் மிகமிக இளைத்துத் துரும்பாகி விட்டான். வேண்டாத தெய்வமில்லை. பார்க் காத வைத்தியமில்லை.

இதுபோன்று ஒரு நா

களையும் அணிவித்து நாமே ஆபத்தை ஏற்படுத்தாமல் இருக்கலாமே.

— டி. கௌரி தேவி, சென்னை - 119.

# தோடுக்கு எடுப்பாக மூக்குத்தி!

என் பெரிய பெண்ணிற்கு நாலைந்து வருடங்களாக ஏதோ ஒரு காரணத்தால் வரும் வரன்கள் எல்லாம் தட்டிக் கொண்டே வந்தது. ஆனால் திடீரென்று என் மாமா மூலம் தெரிந்த குடும்பத்தில் ஒரு பையன் ஜாதகம் சேர்ந்து, பெண் பார்த்து, அன்றைக்கே பிடித்து விட்டது என்று சொல்லி நிச்சயதார்த்தமும் செய்து விட்டோம்.

மாமாவிற்குத் தெரிந்த குடும்பமாதலால், சீர் சௌத்தி பற்றியெல்லாம் ரொம்பப் பெரிது படுத்தாமல், நீங்கள் போடுவதை போடுங்கள் என்று கூறிவிட்டார்கள். என் பெண் மிக அதிர்ஷ்டசாலி என்று மகிழ்ந்து, மளமளவென காரியங்களை செய்து கொண்டிருந்தோம். திருமணத்திற்கு 20 நாட்கள் இருக்கும் போது, புடைவை, நகை வெள்ளிப் பாத்திரம் எல்லாம் செய்து ரெடியாகி விட்டதால் அதையெல்லாம் பார்க்க சம்பந்தி வீட்டிலிருந்து பையனின் அக்கா, அண்ணா, மன்னி அம்மா எல்லோரும் வந்திருந்தார்கள். பையனின் அம்மா எல்லாவற்றையும் பார்த்து,

"ரொம்ப சந்தோஷம். நன்றாக இருக்கிறது. வைரத்தோடு ரொம்ப பூரிப்பாக இருக்கிறது. அதற்கு இணையாக ஒரு மூக்குத்தியும் போட்டு விடுங்கள். மூக்கு குத்திக் கொண்டால்தான் பெண்களுக்கே லக்ஷணம்" என்று கூறிவிட்டு போய்விட்டார்.

அந்தத் தோடு என் மாமியாரின் பூஜை ஜாகர். அதற்கு இணையாக மூக்குத்தி வாங்க குறைந்தது 7, 8 ஆயிரமாவது ஆகும். எங்களுக்கு



என்ன செய்வதென்றே புரியவில்லை. எதுவுமே சீரென்று கேட்காதவர்கள் கேட்பதை மாட்டேன் என்று எப்படிச் சொல்வது? ஏற்கெனவே எங்கள் சக்திக்கு மீறி செலவழித்து விட்டு கையைப் பிசைந்து கொண்டிருக்கையில் இது வேறு எப்படி சமாளிப்பது என்ற பிரமிப்பு! எல்லாவற்றிற்கும் மேலாக,

"அவர்கள் சொன்னால் நீங்கள் எப்படி ஒப்புக் கொள்ளலாம். நான் மூக்கெல்லாம் குத்திக் கொள்ள மாட்டேன். எனக்குப் பிடிக்கவில்லை" என்று அடம்பிடிக்கும் என் மகளை சமாளிப்பது பெரும்பாடாக இருந்தது. ஒரு மாதிரி அவளை சமாதானப்படுத்தி, பணத்திற்கும் ஏற்பாடு பண்ணிக் கொண்டு இருக்கையில், பக்கத்து வீட்டில் அவர்கள் குழந்தைக்குக் காது குத்துக் கல்யாணம் என்று அழைத்தார்கள். அந்த ஆசாரியையே மூக்கு குத்தும்படி சொன்னவுடன் அவர் தன்னிடமே ஒரு தங்க கம்பி உள்ளது அதையே குத்தி முறுக்கி விடுகிறேன். இரண்டு, மூன்று நாட்கள் கழித்து புண் ஆறியவுடன் எடுத்துவிட்டு வேறு மூக்குத்தி போட்டு விடுங்கள் என்று கூறி விட்டு போய் விட்டார்.

ஒரு நாள் என் பெண் முகம் அலம்பிக் கொண்டு டர்க்கி டவலால் துடைத்துக் கொள்ளும் போது மூக்குத்தி மேலே இருந்த கம்பி டவலுடன் மாட்டி உடைந்து விட்டது. அதன் ஒரு சிறு துணுக்கு மூக்கு உள்ளே சதையில் மாட்டிக் கொண்டு விட்டது. அதை அழுத்தி எடுக்க முடியவில்லை. டாக்டரிடம் காண்பித்தால் அவரோ எக்ஸ்ரே எடுத்துப் பார்த்துவிட்டு சதையின் உள்ளே இருக்கிறது. அது மட்டமான தங்கம் சதையைக் கீறி எடுக்க வேண்டும். உள்ளே இருந்தால் செப்டிக் ஆகி விடும் என்று கூறிவிட்டார். கல்யாணத்திற்கு நான்கு நாட்கள்தான் இருக்கிறது. இப்போது மூக்கை கிழித்து பிளாஸ்திரி போட்டுக் கொள்வதா. பேசாமல் விட்டு விட்டு பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்றால் செப்டிக் ஆகிவிடுமோ மூஞ்சி அழகையே கெடுத்து விடுமோ என்றெல்லாம் ஒரே கவலை. மூக்குத்தி வாங்க மனமில்லாமல் இந்த மாதிரி சொல்கிறோம் என்று சம்பந்தி வீட்டில் நினைத்து விடுவார்களோ என்று அது வேறு டென்ஷன்.

அப்போது கல்யாணத்திற்கென்று என் சித்தி வந்திருந்தார். அவர் கிராமத்திலேயே இருந்தவர். இதைச் சொன்னவுடன், "நல்லா இருக்குடி. இந்த சின்ன விஷயத்துக்குப் போய் எக்ஸ்ரே ஆபரேஷன் தையல் என்றெல்லாம் அமர்க்களப்படுத்துவாளா. இரண்டு வேளை எருக்கம் பாலை மூக்குத்தி இருக்கும் இடத்தில் தடவு" என்றார். மறுநாள் அந்த இடத்தில் சதை மிருதுவாக ஆகி கையால் அழுத்தின உடனே அந்தக் கம்பி அப்படியே வெளியே வந்து

விட்டது. பிறகுதான் எங்களுக்கெல்லாம் மூச்சே வந்தது.

மறுநாள் என் சித்தியை ஒரு ஆசாரியிடம் அழைத்துப் போய் மூக்கு குத்தி "பிள்ளை குட்டி இல்லாத எனக்கு எதற்கு இவை மூக்குத்தி" என்று கூறி தன் மூக்குத்தியையே அவளுக்குப் போட்டு விட்டார். அதன் பிறகு தான் அவளுக்கு ஒரு தலை சுளையே வந்து விட்டது.

அப்பொழுதிலிருந்து யாருக்கும் எங்கள் வீட்டில் காலில் முள் குத்தினாலும் எருக்கம் பாலை தடவினால் மறுநாளே வெளியில் வந்து விடும்.

— டி. வேதவல்லி, சென்னை - 302.

# பெண்ணோடு தாயும் மூக்கு குத்திக் கொண்டார்!

என் சித்தி கீப்ளைட் லெப்டினெட் கர்னலின் மனைவி. நாகரீகத்தில் மேல்மட்ட குடும்பம். எப்பவும் கிளப் பார்ட்டி என்றபடி தான் இருப்பார்கள். சித்திக்கு மூன்று பெண்கள். முதல் இரண்டு பெண்களும் கல்யாணமாகி செட்டிலாகி விட்டனர். மூன்றாவது பெண்ணிற்கு பெண் பார்க்கும் பொழுது பிள்ளை வீட்டார்கள் தங்கள் சம்பிரதாயத்தில் குறிப்பாகவும், அதே சமயம் சித்திக்கு ஏற்றார் போல் நாகரீகமாகவும் இருந்தார்கள். மாப்பிள்ளை பையன் ஐ.ஏ.எஸ் கலெக்டர். நல்ல உயரம், எடுப்பான தோற்றம். சரளமான ஆங்கிலம் எல்லாம் பார்த்த மாத்திரத்தில் பெண்ணுக்குப் பிடித்து விடவே இரண்டு வீட்டார்களும் ஓகே சொல்லி அந்த இடத்திலேயே வெற்றிலை பாக்கு மாற்றிக் கொண்டனர்.

பிறகு மெதுவாக மாப்பிள்ளையின் அம்மா, பெண்ணுக்கு கல்யாணத்தன்று மணையில் உட்காரும் போது மூக்கு குத்தி அதில் ஒரு ஒத்தக்கல் மூக்குத்தியாவும் இருக்கணும். அதனால் அவசியம் மூக்கு குத்த வேண்டும் என்று சொல்லியுடன் நிற்காமல் என் சித்தியையும் பார்த்து "நீங்களும் மூக்கு குத்திக் கொண்டு தான் பெண்ணை தாரை வார்த்துக் கொடுக்க வேண்டும்" என்று ஸ்ட்ரிக்ட்டாக சொல்லி விட்டுப் போனார்.

மூக்குத்தியினால் கல்யாணம் நின்று விடக் கூடாதே என்று என் சித்தி 52 வயதில் பேரன், பேத்தி எடுத்தப்புறம் தன் பெண்ணுடன் தட்டானிடம் சென்று மூக்குக் குத்திக் கொண்டதையும், யார் சொல்லியும் கேட்காத என் சித்தி தனது மூணாவது சம்பந்தியம்மாவின் பேச்சுக்குக் கட்டுப்பட்டதும் எங்கள் எல்லோருக்கும் ஆச்சர்யத்தைத் தந்தது. என்னதான் நாகரீகம் என்றாலும் பெண்ணைப் பெற்ற தாய் தானே அவளும்!

— ராதா ரகுநாதன், சென்னை - 83.



# பெற்ற தாயினும் நகை பெரிதான வேதனை!



என் மாமி இறக்கும் போது அவருக்கு வயது 81. மூக்கில் இரண்டு பக்கத்திலும் வைர மூக்குத்திகள் அணிந்திருப்பார். மிகவும் உயர்ந்த ஜாதி வைரக் கற்கள். மாமி இறக்கும் போது மிகவும் வறிய நிலையில் இருந்தார். இருப்பினும், தன் தாய்வீட்டு சீதனமான மூக்குத்தியை மட்டும் விற்காமல் இருந்தார். மாமியின் உயிர் தூக்கத்திலேயே மிகவும் அமைதியான முறையில் பிரிந்து விட்டது. மாமியின் பெண்ணும், பிள்ளையும், அம்மா இறந்தது பற்றிக்கூட வருத்தப்படாமல் வைர மூக்குத்திக்காக சண்டை போட்டுக் கொண்டு இருக்கின்றனர். இறந்த செய்தியை யாரிடமும் சொல்லாமல் சண்டை போட்டுக் கொண்டு இருந்ததைப் பார்த்த அக்கம் பக்கத்தவர்கள், முதலில் ஆக

வேண்டியதைப் பாருங்கள். பிறகு, மூக்குத்தியைப் பற்றி பேசி முடிவெடுக்கலாம் என்று கூறி, பிறகு தாயார் இறந்த செய்தியை உற்றார், உறவினர்களுக்குச் சொல்லி அனுப்பியிருக்கிறார்கள். பத்துமாதம் சுமந்து பெற்று, ஆளாக்கி, கல்யாணம் செய்து கொடுத்து, மொத்தத்தில் பெற்ற பிள்ளைகளுக்காக தன்னையே அர்ப்பணம் செய்த தாயாரின் மறைவு குறித்து வருத்தப்படாமல், அவர் பிணம் கிடத்தப்பட்ட இடத்திலேயே, பெற்ற பெண்ணும் பிள்ளையும், கேவலம் வைர மூக்குத்திக்காக சண்டை போட்டுக் கொண்டதை நினைக்கும் பொழுது, இந்தக் கேவலமான பிள்ளைகளைப் பெற்று ஆளாக்கிய என் மாமியை நினைத்து என் மனம் அழுகிறது.

— எம்.வி. மஹாலக்ஷ்மி, சென்னை - 73.



## மூக்குத்தியால் வந்த வேதனை

என்னுடன் பள்ளியில் படித்த எனது தோழிக்கு அப்பொழுதே அவளது மாமாவை திருமணம் செய்து வைத்தனர். அவர்களுக்கு முதல் இரண்டு குழந்தைகள் பிறந்து பிறந்தவுடன் இறந்து விட்டன. அதனால் மூன்றாவது குழந்தை பிறந்தவுடன் அதற்கு மூக்குகுத்தி விட்டார்கள். அப்பொழுதுதான் இக்குழந்தை உயிருடன் இருக்கும் என்ற நம்பிக்கை. (இது எங்கள் ஊர் வழக்கம்) ஒருநாள் தோழி குழந்தையை மடியில் வைத்து பால் கொடுத்துக் கொண்டிருக்கும் பொழுது, அவளது ஜாக்கெட்டில் உள்ள கொக்கி எப்படியோ குழந்தையின் மூக்குத்தியில் மாட்டி விட்டது. இதனை அறியாத தோழி குழந்தையை மடியில் இருந்து வேகமாக தூக்க அந்த பிஞ்சு மூக்கு பாதி அறுந்து விட்டது. குழந்தை வலியால் துடித்ததால் மூக்குத்தியை கழட்ட இயலாமல் மருத்துவரிடம் சென்று குழந்தையைக் காட்டி மூக்குத்தியை கழட்டி வந்தார்கள். குழந்தைக்கு தொடர்ந்து அழுததாலும், வலியாலும் ஜுரம் வந்து ஒரே வாரத்தில் ஜன்னி கண்டு இந்தக் குழந்தையும் இறந்து விட்டது. வீட்டில் அனைவரும் குழந்தை இறந்ததற்கு இவள்தான் காரணம் என இவளை வெறுப்புடன் பார்க்க, தனது குழந்தையை தானே கொன்று விட்டோமோ என்ற குற்றமனதுடனும் இன்றும் துடிக்கிறாள்.

நெருங்கிய உறவில் திருமணம் செய்ததாலும், குறைந்த வயதிலேயே திருமணம் செய்ததாலும், முதல் இரண்டு குழந்தை இறந்து, மூன்றாவது குழந்தையை மூடப்பழக்கத்தாலும், தன் கவனக்குறைவாலும் இழந்து, இன்று வாழ வேண்டிய வயதில் அவள் கண்ணில் நீர் நிறைகிறது.

— க. தேன்மொழி, தஞ்சாவூர்.

**காலண்டர்களில் பண்டிகைகள், மாநில அரசு விடுமுறை நாட்கள் குறிக்கப்பட்டிருக்கும். ஆனால் அகில இந்திய அளவில் மத்திய அரசு பௌத்தர்கள், ஜைனர்களுக்காக அறிவிக்கும் சில விடுமுறை நாட்கள் தென்னிந்திய காலண்டர்களில் குறிக்கப்படுவதில்லை. அன்று சிலர் அஞ்சலகங்களுக்கோ பிற மத்திய அரசு அலுவலகங்களுக்கோ சென்று ஏமாறுவது வழக்கம். இவ்வாண்டு அவ்விடுமுறை நாட்களைக் கீழே குறிப்பிட்டுள்ளேன். உங்கள் மாதக் காலண்டர்களில் அவற்றைக் குறித்துக் கொள்ளவும்.**

**ஏப்ரல் - 20 -- மஹாவீர்ஜயந்தி**
**மே - 22 -- புத்தபூர்ணிமா**
**நவம்பர் - 14 -- குருநானக் பிறந்தநாள்**

**— அ. ஷண்முகசுந்தரம்.**



## இலாபம் தரும் மளிகை வியாபாரம் நடத்துவது எப்படி? ரூ. 11.00



பயனுள்ள பல தொழில் நூல்களை மணிமேகலைப் பிரசுரம் வெளியிட்டு வருகிறது என்பதற்கு இந்த புதிய நூலும் ஓர் உதாரணம். லைசென்ஸ் எடுக்கும் முறை; அரிசி வகைகள்; மங்கலப் பொருள்கள்; தயாரிப்புப் பொருள்கள்; கால் நடைத் தீவனங்கள்; பேக் செய்யும் முறை; பாதுகாப்பு முறைகள்; தராசு மற்றும் நிறுத்தற்கருவிகள்; வங்கியில் கடன் பெறும் வழிகள்... எனப் பல்வேறு தலைப்புகளில் இந்நூலாசிரியர் திரு.எஸ்.கே. செல்வம் அருமையாக எழுதியிருக்கிறார். **இதர நூல்கள் :** சுயமாகத் தொழில் தொடங்க வழிகள் 20.00; சுய வேலைவாய்ப்பும், சுலபத் தொழில்களும் 20.00; சுலபத் தவணைத் தொழில்களும், சுய சம்பாத்தியமும் 14.00; பல்வேறு தொழில்களுக்கான இயந்திரங்களும், மூலப் பொருள்களும் கிடைக்கும் முகவரிகள் 38.00; பல்வேறு கமிஷன் தொழில்கள் மூலம் சம்பாதிப்பது எப்படி? 16.50; பல்வேறு பிளாஸ்டிக் பொருள்களைத் தயாரிப்பது எப்படி? 16.50; சிறு தொழில் செய்யுங்கள் (82 குடிசைத் தொழில்கள்) 45.00; காலத்திற்கு ஏற்ற தொழிலும் கைநிறைய வருமானமும் 34.00.

## சிவப்பாக ஆக வேண்டுமா? ரூ. 12.00

நடைமுறையில் இது சாத்தியம் என்பதை இந்நூல் தெளிவாக்குகிறது. **இதர நூல்கள் :** நீங்கள் உயரமாக வளர வேண்டுமா? 9.00; ஒல்லியாக இருக்கும் நீங்கள் குண்டாக விரும்புகிறீர்களா? 8.00; உடல் பருமனைக் குறைக்கச் சுலபமான வழிகள் 15.00; முகப்பருவைப் போக்க முப்பது வழிகள் 9.00; தலைமுடியைப் பாதுகாப்பது எப்படி? 15.00; உடம்பு உறுதியாக இருக்க வேண்டுமா? 13.00; உடல் உறுதி பெற உடற்பயிற்சி முறைகள் பாகம் - 1 ரூ. 15.00; பாகம் - 2 ரூ. 32.00; பெண்களுக்கான எளிய உடற்பயிற்சிகள் 14.00; செக்ஸ் எக்ஸஸைஸ் 21.00; செக்ஸ் பிரச்னைகள் 17.00; ஆண்மைக் குறைவும், பெண்மைக் குறைவும் 15.00; தாது பலம் பெறத் தங்கமான யோசனைகள் 15.00; மார்பகப் பிரச்னைகள் 14.00; உடலுறவில் மனைவியை மகிழ்விப்பது எப்படி? 29.00; செக்ஸ் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்துவது எப்படி? 16.50; யோகாசனம் கற்றுக்கொள்ளுங்கள் 30.00; பெண்களுக்கான யோகாசனம் 16.00; இல்லற இன்பத்திற்கு உதவும் யோகான முறைகள் 21.00; தியான நெறிகளும் நன்மைகளும் 21.00.

## ஸ்டைல் மன்னன் ரஜினிகாந்த் ரூ. 40.00




12.12.1950-ல் ஹெட்கான்ஸ்டபிள் ரானோஜிராவிற்கு மகனாகப் பிறந்ததிலிருந்து, 152 படங்களில் நடித்து தமிழகத்தின் முக்கியப் புள்ளியாக உயர்ந்தது வரை, டிசம்பர் 96 வரையிலான அனைத்து சுவையான சம்பவங்களும் இப்புத்தகத்தில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. **இதர நூல்கள் :** சகலகலா வல்லவன் கமல்ஹாசன் 25.00; தென்பாண்டிச் சிங்கம் விஜயகாந்த் 33.00; மக்கள் நாயகன் ராமராஜன் 14.00; நடிகர் திலகம் சிவாஜி கணேசன் 35.00; புரட்சி நடிகர் எம்.ஜி.ஆர். 25.50; சரித்திர நாயகர் எம்.ஜி.ஆரின் சாதனைகள் 16.00; இயக்குநர் சிகரம் கே. பாலசந்தர் 19.00; புரட்சி இயக்குநர் பாரதிராஜா 22.00; ஜனரஞ்சக டைரக்டர் பாக்யராஜ் 18.00; அஷ்டாவதானி டி. ராஜேந்தர் 13.00; காந்திஜி வாழ்வில் நடந்த சுவையான சம்பவங்கள் 16.00; ஜெய் அம்பேத்கார் 11.50 தமிழக முதல்வர்கள் 12.00; பெரியார் ஈ.வெ.ரா. 9.50; காமராஜர் யார்? 15.00 பேரறிஞர் அண்ணா 11.50; கலைஞர் மு. கருணாநிதி 31.00.

## பஞ்சாயத்து பற்றிய புதிய சட்டங்களும், நிர்வாக முறைகளும் ரூ. 27.00

1994-ல் இயற்றப்பட்ட புதிய சட்டங்களின் ஷரத்துக்களை மிக எளிமைப்படுத்தி எழுதியிருக்கிறார், இந்நூலின் ஆசிரியர் திரு. எம்.ஏ.வி. ராஜேந்திரன். ஒவ்வொரு கிராமப் பஞ்சாயத்து அலுவலகத்திலும், படித்தவர்கள் மத்தியிலும் இருக்கவேண்டிய அருமையான புத்தகம் இது. **இதர நூல்கள் :** பஞ்சாயத்து ராஜின் தோற்றமும், வளர்ச்சியும் 15.00; நகராட்சி, மாநகராட்சிச் சட்டங்கள் 44.00; தலைமைச் செயலகம் இயங்கும் விதமும், நாம் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்களும் 14.00; அரசுப் பணிகளுக்கான டெண்டர் விதிமுறைகள் 5.00; ஆட்சிச் சொல் அகராதி 19.00; நமது இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் 9.90; தமிழ்நாடு அரசுப் பணியாளர் நடத்தை விதிகளும், ஒழுங்கு நடவடிக்கை முறைகளும் 16.00; கிராம முன்னேற்றத்திற்கான வழிகள் 25.00.

---

***மேற்கண்ட புத்தகங்களுள் தேவையானவற்றை வி.பி.பி.யில் பெறக் கடிதம் எழுதுங்கள். பாதுகாப்பாக அனுப்பி வைக்கிறோம். தபால்காரர் புத்தகங்களை உங்களிடம் தரும்போது பணம் செலுத்தினால் போதும். (தபால் செலவு தனி). சென்னையில் இருப்பவர்கள் நேரில் வந்து வாங்கிக் கொள்வது சிக்கனம். ஷோரூம் விற்பனை நேரம் : காலை 9.00 முதல் மாலை 6.00 மணி வரை. ஞாயிறு விடுமுறை. கடிதம் எழுத வேண் டிய முகவரி :***



# மணிமேகலைப் பிரசுரம்



தபால் பெட்டி எண் : 1447, 4, தணிகாசலம் சாலை,
தியாகராய நகர், சென்னை - 600 017.
தொலைபேசி : 4342926 தொலைநகல் : 044-4346082




றுகாய் என்றால் அதைப்போடுவது ஒரு கடினமான வேலை; போடும் சாமான்களின் அளவு களிலோ, செயல்முறையிலோ சிறிது ஏறக்குறைந்தாலும் மொத்தமுமே வீணாகி விடும்' என்ற எண்ணம் நம்மில் பலருக்கு உண்டு. தினமும் விதவிதமாக வருகின்ற ஊறுகாய் விளம்பரங்களின் ஈர்ப்பு நம் எண்ணத்திற்கு உரம் போட ஊறுகாய்கள் வீட்டில் போடுவது என்பது குறைந்து வரும் நிலை. வயதான பெண்மணிகள் உள்ள வீடுகளில் இன்றும்

# ஊறுகாய்





# போட்ட அபூர்வ சிந்தாமணி!

சுவையான ஊறுகாய்கள் தயாரிக்கப்பட்டு விடும். இன்று பெண்களில் பலரும் பணிபுரிய வெளியே செல்ல வேண்டிய நிலை! நேரமின்மையும் இவைகளைத் தயாரிக்க முடியாமல் போவதற்கு இன்னொரு முக்கிய காரணம்.

ஊறுகாய் என்றால் நமக்கு மாங்காய், எலுமிச்சை, நெல்லிக்காய், கிச்சிலி, கடாரங்காய் - போன்ற சிலகாய்களின் நினைவுதான் வரும். ஆனால் சாதாரண கத்தரிக்காய், கேரட், பீட்ரூட் முதல் தானிய வகைகள், விதைகள், கொட்டைகள் போன்ற பலவற்றிலும் ஊறுகாய்கள் அதுவும் 1000 வகையான ஊறுகாய்கள் போடும் விதங்களை புத்தகமாக எழுதிக் கொண்டு இருக்கிறார் உஷா பிரபாகரன். இவர் சட்டம் படித்துத் தேறியவர். சட்ட நிபுணரான இவர் பல வகை ஊறுகாய் போடுவதில் நிபுணத்துவம் பெற்ற விதத்தை அவரே கூறக் கேட்கலாமா?

"என் கணவர் ஆந்திர மாநிலத்தைச் சார்ந்தவர். என் மாமியாரைப் பார்க்க நாங்கள் செல்லும் போதெல்லாம் அவர் விதவிதமான ஊறு காய்களை எங்களுக்குப் பரிமாறுவார். சுவையும், மணமும் என்றும் மனதில் நிற்கும். அதே போலத்தான் அவருடைய உறவினர்கள் வீடு களிலும் விதவிதமான ஊறுகாய்கள். நாமும் இதே போல செய்து பார்த்தால் என்ன என்ற எண்ணம் என்னுள் எழ நானும் தொடர்ந்து வீட்டில் கிடைக்கும் காய்கறிகள் எல்லாவற்றி லுமே ஊறுகாய் போட்டு பார்க்க ஆரம்பித் தேன். அதன் சுவை நன்றாகயிருந்து மற்றவர்களும் அதை விரும்பி உண்டால் அதைப் பற்றிய குறிப்பை - தேவையான சாமான்களை செயல் முறைகளை எழுதி வைத்துக் கொள்வேன். சில சமயம் திடீரென தூக்கத்திலிருந்து விழிக்கும் என் கணவர் என்னைத் தேடி வந்து சப்தமிட்ட பின்புதான் வேலையை ஓரம் கட்டி விட்டு படுக்கச் செல்வேன்.

நான் தயாரிக்கும் ஊறுகாய்களை என் தோழிகளிடம் தர அவர்கள் 'நீ பெரிய அளவில் ஊறுகாய் தயாரிப்பில் ஈடுபடலாம்' என வற்புறுத்த எனக்கு அதில் கொஞ்சமும் விருப்பமில்லை. என்னைப் பொருத்தவரை ரொம்பவும் 'ஸ்ட்ரெயின்' பண்ணி தொழில் தொடங்கி கலையாக நான் நினைக்கும் இதை விலையாக்க விரும்பவில்லை. சரி கம்பெனி ஆரம்பிக்க விருப்பமில்லாவிட்டால், அதை விட்டு 'அட்லீஸ்ட்' இந்த ஊறுகாய் தயாரிக்கும்

விதங்களைத் தனிபுத்தகமாக வெளியிடலாமே' என்று பலரும் கூற அதுவே என் மனதுக்கு சரியெனப் பட்டது. 1000 வகையான ஊறுகாய்கள் போடும் முறைகளை முதல் புத்தகமாக வெளியிட உள்ளேன். இது ஆங்கிலம், தமிழ், இந்தி, தெலுங்கு ஆகிய மொழிகளில் வெளிவரும். தொடர்ந்து 2வது புத்தகமும் (இன்னொரு 1000 ஊறுகாய் வகைகள்) எழுத திட்டமிட்டுள்ளேன். ஊறுகாய் உலகில் தனியிடம் பெற வேண்டுமென்பது என் விருப்பம்.

ஊறுகாய்கள் என்றாலே அவை நம் ஆரோக்கியத்திற்குக் கேடு செய்யக் கூடியவை என்ற எண்ணம் பெரும்பாலோருக்கு உண்டு. அதில் உள்ள அதிகப்படியான எண்ணெய், உப்பு, காரம் இவையே இதற்குக் காரணம். நீண்ட நாட்கள் தொடர்ந்து பாதுகாப்பாக வைக்க எண்ணும் ஊறுகாய்களுக்குதான் இப்படி தேவை. ஆனால் ஊறுகாய் செய்யும் பல நன்மைகள் தெரியுமா? சமையலில் உள்ள குறை நிறைகளை ஈடுகட்ட வல்லது ஊறுகாய். சுவைக்கு மட்டுமில்லாமல் பொருளாதார நிலைக்கும், ஆரோக்கியத்திற்கும் கூட ஏற்றவை. ஜீரணம் தரவல்லது இச்சலி ஊறுகாய்கள். உயர் ரத்த அழுத்தம், கொழுப்பு சத்துக்களை குறைக்க வல்லது பூண்டு ஊறுகாய். நீரிழிவு நோயைக் கட்டுப்படுத்த வல்லது வெந்தய ஊறுகாய். பூண்டிற்கு 'ஆன்டி பேக்டீரியல்' மற்றும் ஆன்டிபயாடிக் தன்மையுள்ளதையும் குறிப்பிட வேண்டும். வைட்டமின் சி சத்து கொண்ட எலுமிச்சை, ஆரஞ்சு ஊறுகாய்கள் நோய் தடுப்பு சக்தியைத் தரும் குணம் கொண்டவை. குறிப்பிட்ட சீசனில் கிடைக்கும் காய்களை வாங்கி நீண்ட நாட்களுக்குப் பாதுகாக்க வேண்டுமென்ற நிலையில்தான் அதிக காரம், எண்ணெய் போட வேண்டும்.

அதே குறிப்பிட்ட சீசன்தான் என்றில்லாமல் - எது மார்கெட்டில் எளிதாகக் கிடைக்கின்றதோ அதையே வாங்கி குறைந்த கால அளவிற்குப் போடுவதால் அதிக சாமான்கள் போடவும் தேவையில்லை. உடல் ஆரோக்கியமும் கெடாது.

ஊறுகாய்களைப் பாதுகாப்பது கடினமான வேலையே அல்ல. உலர்ந்த பாத்திரமும் உலர்ந்த கரண்டிகளையும் பயன்படுத்தினால் ஊறுகாய்கள் நீண்ட நாட்கள் கெடாமல் இருக்கும். ஊறுகாயின் சுவைகள் அவைகளின் அடிப்படைகளாக அமையும் எண்ணெய், தண்ணீர், புளிப்பு, சர்க்கரை, இவைகளினாலேயே தீர்மானிக்கப்படும். அதே போல இவைகளில் தூவும் மசாலாப் பொடிகள் 'பச்சையாகப் பொடி' செய்து போடப்பட்டால் - அது ஒருவிதமான சுவை. அதையே எண்ணெயில்லாமல் வறுத்துப் பொடி செய்து போடும் போது வேறு சுவை. மசாலாவை எண்ணெயில்

# மங்களமான ஆரம்பம்

RATING UPGRADED TO
HIGH SAFETY
BY AN ACCREDITED AGENCY



MUDRA - சூர்ய - சூரியா - சூரிய தேவன் - உதய சூரியன் மங்களமான ஆரம்பத்தைக் குறிக்கின்றது

எல்ஜி பைனான்ஸின் சேவை, 75 வருட அனுபவமும், ரூ. 700 கோடி
மதிப்பும் கொண்ட எல்ஜி குழுமத்தின் பாரம்பரியத்துடன்
இணைந்து வருகிறது.

இணைந்திடுவீர் எம்மோடு, வளர்ந்திடுவோம் வளமோடு.

**ELGI**
**FINANCE**

**எல்ஜி பைனான்ஸ் லிமிடெட்**

கார்பொரேட் அலுவலகம்
4-வது மாடி, JVL பிளாஸா, 501, அண்ணாசாலை,
தேனாம்பேட்டை, சென்னை - 600 018.
போன் : (044) 4345445, 4348896, 4348897.

தலைமை அலுவலகம்: எல்ஜி ஹவுஸ், திருச்சி ரோடு, கோயமுத்தூர் 641 045 ✆ (0422) 316132, 314571

• FIXED DEPOSITS • HIRE PURCHASE • LEASING • BILL DISCOUNTING • MERCHANT BANKING

**உங்கள் நம்பிக்கையே எங்கள் நற்பெயர்**

ADVT

வறுத்துப் பொடி செய்து போட்டால் அதன் சுவை இன்னொரு விதமாகயிருக்கும்.

நம் தென்னிந்தியாவில் காரவகை ஊறுகாய்களுக்குத்தான் அதிக வரவேற்பு. வெந்தியம், ஜீரகம், பெருங்காயம் இவைகள் ஊறுகாய் தயாரிப்பில் தனியிடம் பெறும். ஆனால் வட இந்திய ஊறுகாய்களில் லேசான இனிப்புச் சுவை இருக்கும். ஊறுகாயில் ஊற்றப்படும் எண்ணெய்களும் அதன் சுவைகளை மாற்றும் தன்மை கொண்டவை! நல்லெண்ணெய், கடலை எண்ணெய், சன்ஃபிளவர் ஆயில் போன்றவை தவிர விளக்கெண்ணெய் கூட ஊறுகாயில் சேர்க்கப்படும். என்ன முகம் சுளிக்கிறீர்கள்? இதைச் சொல்லாதவரை உண்பவருக்குத் தெரியாது. மாவடு போடும் போதும் அதனுடன் ஒரு சில துளி விளக்கெண்ணெய் சேர்ப்பதால் வருடக்கணக்கில் அவை நைந்து போகாமல் கடிப்பதற்கு ஏற்ப 'நறுக்'கென்று இருக்கும்.

புளிப்பில்லாத காய்கறிகள், பழங்கள் போன்றவைகளில் ஊறுகாய் போடும்போது அவற்றில் எலுமிச்சை சாறு, புளி கரைத்த நீர், வினிகர், தயிர், மாங்காய் பவுடர் (ஆம்சூர்), மாதுளை விதைகளிலிருந்து எடுக்கப்படும் மாதுளைப் பொடியும் புளிப்பூட்டப் பயன் படும்.

ஊறுகாய்களில் ஊற்றப்படும் எண்ணெய்களும் கூடுமானவரை நம் இருக்குமிடத்தின் சீதோஷ்ண நிலைக்கும் நம் ஆரோக்கியத்துக்கும் ஏற்றவகையில் அமையும். தென்னிந்தியாவில் பெரும்பாலும் அதிக உஷ்ணமான சீதோஷ்ண நிலை. அதனால் நம் உடலுக்குக் குளிர்ச்சி தேவை. இங்கு தயாரிக்கப்படும் ஊறுகாய்களில் நல்லெண்ணெய்தான் அதிகமாக சேர்க்கப்படும். நல்லெண்ணெய் உடலுக்குக் குளிர்ச்சி தரவல்லது. வட இந்தியாவிலே நேர் எதிர். அங்குள்ளவர்களுக்கு உஷ்ணம் அதிகம் தேவை. அதனால் அங்கு கடுகெண்ணெய்தான் ஊறுகாய்களில் ஊற்றப்படும்.

சுண்டலுக்குப் பயன்படும் தானியங்கள் அனைத்திலுமே ஊறுகாய் போடலாம். ஆனால் இவைகள் அதிகபட்சம் ஒருவாரம் வரைதான் நன்றாக இருக்கும். இதற்கு எண்ணெய் அதிகம் போடுவதில்லை. ஆந்திர மாநிலத்தில் இவை பிரசித்தமானவை. செடிகளின் தண்டு, இலை போன்ற ஒவ்வொரு பாகமும் கூட ஊறுகாய்கள் போட பயன்படும்.

தொடர்ந்து 15 ஆண்டுகளாக என் தேடலில் உருவானவைதான் இந்த 'ரெஸிபிகள்'.

ஆவக்காய் ஊறுகாய் மாங்காயில் மட்டுமல்லாமல் கத்தரி, முருங்கை, பசலைக் கீரையில் வரும் காய்கள் போன்றவைகளிலும் கூடப் போட முடியும்.' நம் நாட்டில் விளைவது போன்று காய்கறிகளும், மசாலா வகை சாமான்களும் உலகில் வேறு எங்கும் இல்லை - இவைகளை வைத்துக் கொண்டு ஆயிரமென்ன பல ஆயிரம் வகையான ஊறுகாய்கள் கூடப் போட முடியும். ஒரு வகையில் இங்கு பிறந்ததில் ரொம்பவும் மகிழ்ச்சிதான்'' என்கிறார் உஷா பிரபாகரன்.



முதல் நாள் செய்து மீந்து போன மோர்க் குழம்பில் தேவையான அளவு நீர் சேர்த்து கொதி வந்ததும் சேமியா உப்புமா செய்ய, புளிச் சுவையுடன் கூடிய உப்புமா பலே ருசி. இதிலேயே ரவை சேர்த்து செய்தால் மோர்க்களி ரெடி.

— கஸ்தூரி

— **வைதேகி தேசிகன்.**

## சில ஊறுகாய்கள் போடும் விதம் :

*(உஷா பிரபாகரன்)*

### பேரிச்சை ஊறுகாய்

*தேவையான பொருட்கள் :*

கொட்டை நீக்கிய பேரிச்சை - 500 கிராம்
சர்க்கரை - 250 கிராம்
அரைத்த இஞ்சி - 100 கிராம்
2 (உரித்த) பல் பூண்டு - அரைத்தது
மிளகாய்ப் பொடி - 75 கிராம்
உப்பு - 2 மேஜைக் கரண்டி
வினிகர் - 70 மி.லி.
உலர்ந்த திராட்சை - 100 கிராம்

*செய்முறை :*

உலர்ந்த திராட்சை, பேரிச்சை இரண்டையும் 300 மி.லி. வினிகரில் ஒரு நாள் முழுவதும் ஊற வைத்து பின்பு அதை அப்படியே நன்கு அரைத்துக் கொள்ள வேண்டும். மீதமுள்ள வினிகரைக் கொதிக்கவிட்டு அதில் சர்க்கரை, உப்பு, அரைத்த பழக்கலவை, மிளகாய்ப் பொடி, பூண்டு, இஞ்சி அரைத்தது எல்லாவற்றையும் சேர்த்து 'ஜாம்' பதம் வரும் வரையில் கிளற வேண்டும். ஆறிய பின்பு உலர்ந்த (ஈரமில்லாத) பாட்டிலில் எடுத்து வைத்து விட வேண்டும். 3 நாட்களுக்குப் பின்புதான் இவை உண்ணும் பக்குவத்தில் இருக்கும். இது ஒரு வாரம் வரை தான் கெடாமல் இருக்கும்.

### தாமரைத் தண்டு ஊறுகாய்

*தேவையான பொருட்கள் :*

தாமரைத் தண்டு - 500 கிராம் (வட்ட வடி

சோப்புப் போட்டுக் குளிக்கும் போது சில நேரம் தோலின் மென்மை நீங்கிச் சொறி ஏற்பட்டு அழகு குன்றும், சோப்பிலுள்ள காரப் பொருள்களால் மயிர்க்கால்கள் வலுவிழக்கின்றன. எண்ணெய்ப் பசை நீங்கி, தோலில் வரட்சியும் சுருக்கமும் தோன்றும். நெல்லிப் பொடி கலந்த பச்சைப் பயற்றுப் பொடியைத் தேய்த்துக் குளித்தால் தோல் பொலிவு பெற்று, சுருக்கம் நீங்கி, பளபளப்புப் பெறும். நெல்லிக்காயை கொட்டை நீக்கி, வெயிலில் நன்கு உலரவைத்து, காய்ந்த பின் பொடி செய்து கொள்ளலாம்.

— எல். கோபாலகிருஷ்ணன்



வில் சிறு துண்டுகளாக வெட்டிக் கொள்ள வேண்டும்)

கடுகுப் பொடி - 25 கிராம்
மிளகாய்ப் பொடி - 25 கிராம்
மஞ்சள் பொடி - 1 மேஜைக் கரண்டி
உப்பு - 60 கிராம்.
எண்ணெய் - 200 மி.லி.
(புகையும் அளவு கொதிக்கவிட்டு குளிர விட வேண்டும்)

*செய்முறை :*

வெட்டிய தாமரைத் தண்டுகளை பாதி அளவு வேக வைத்து நீரை வடித்து அதை பாத்திரத்தில் வைத்து அப்படியே சூரிய வெப்பத்தில் உலரவிட வேண்டும். பின்பு கடுகுப் பொடி, மஞ்சள் பொடி, மிளகாய்ப் பொடி, உப்பு இவைகளைக் கலந்து தாமரைத் தண்டுகளின் மீது தடவி ஜாடியில் அடுக்கி வைத்து அதன் மீது (காய வைத்து ஆறிய) எண்ணெய்யை ஊற்ற வேண்டும். இதை அப்படியே மூடி வைத்துவிட வேண்டும். 4 நாட்கள் கழித்து இதை உண்ணலாம். இது மூன்று வாரம் வரையில் கெடாது.

## கொய்யாப்பழ மசாலா ஊறுகாய்

*தேவையான பொருட்கள் :*

வெட்டி, விதை நீக்கிய கொய்யா - 250 கிராம்
வெட்டி விதை நீக்கிய தக்காளி - 50 கிராம்
வெட்டிய பச்சை மிளகாய் - 2
மிளகாய்ப் பொடி - 2 மேஜைக் கரண்டி
கரம் மசாலா - 1½ மேஜைக் கரண்டி
வெல்லம் - 1 மேஜைக் கரண்டி
வினிகர் - 75 மி.லி.
உப்பு - 25 கிராம்
தண்ணீர் - 350 மி.லி.
கடுகு பவுடர் - 1½ மேஜைக் கரண்டி

*செய்முறை :*

மேற் கூறிய அனைத்தையும் 300 மி.லி. தண்ணீர் விட்டு அரைத்து வடிக்கட்ட வேண்டும். பின்பு இதை 10 நிமிடங்கள் வேகவைத்த பின்பு சூடாகயிருக்கும் போதே உலர்ந்த பாட்டிலில் இட்டு குளிர்ந்த பின்பு மூடி ஃபிரிட்ஜில் வைக்க வேண்டும். உடனேயே இதை உண்ணலாம். இது 10 நாட்கள் வரை கெடாமலிருக்கும்.

## தானிய கதம்ப ஊறுகாய்

*தேவையான பொருட்கள் :*

உலர்ந்த வெள்ளை மொச்சை - 150 கிராம்
உலர்ந்த கொத்து கடலை - 150 கிராம்
உலர்ந்த நிலக்கடலை - 150 கிராம்
உலர்ந்த தட்டைப் பயிறு - 150 கிராம்
உலர்ந்த பச்சைப் பயிறு - 150 கிராம்
உலர்ந்த பச்சை பட்டாணி - 150 கிராம்
மஞ்சள் பொடி, கடுகுப் பொடி - தலா 2 மேஜைக் கரண்டி
உப்பு - 250 கிராம்.
எலுமிச்சை ரசம் - 125 மி.லி.
பெருங்காயப் பவுடர் - சிறிதளவு
புளி - 40 கிராம் (நீர் விட்டு கெட்டியாகக் கரைத்துக் கொள்ள வேண்டும்)
எண்ணெய் - 200 மி.லி.
மிளகாய்ப் பொடி - 200 கிராம்.
கறிவேப்பிலை - 4 கொத்து.

*செய்முறை :*

பச்சைப் பயிறு, தட்டைப் பயிறு இரண்டையும் ஒன்றாகவும் மற்ற தானியங்களை ஒன்றாகவும் ஊற வைக்க வேண்டும். மறுநாள் தானியங்களிலிருந்து நீரை வடித்து தனித் தனியாக (பிரித்து) வேகவைத்துக் கொள்ள வேண்டும். எண்ணெயைக் கொதிக்க வைத்து அதில் கடுகு போட்டு வெடித்ததும் கறிவேப்பிலை, பெருங்காயப் பொடி போட்டு - புளி கரைத்த நீரை அதில் ஊற்றி கிளறி விட வேண்டும். பின்பு வேகவைத்த தானியங்களை அதில் போட்டு மெதுவான தீயில் அதை வதக்க வேண்டும். பின்பு மிளகாய்ப் பொடி, மஞ்சள் பொடி, உப்பு முதலியவற்றைப் போட்டு 2 நிமிடங்கள் வதக்க வேண்டும். இது கொதிக்க ஆரம்பித்து குமிழ்கள் வர ஆரம்பித்ததும் அடுப்பை அணைத்து எலுமிச்சை சாறு சேர்த்துக்கிளற வேண்டும். இது 5 நாள்தான் கெடாமலிருக்கும். நாளைக்கு ஒன்று அல்லது இரண்டு முறை கிளறிவிட வேண்டும்.

இரண்டாவது சிலிண்டர் இருபது நாட்கள் கழித்துதான் புக் செய்ய வேண்டுமென்று குறிப்பிடும் போது "ஐந்து நபர்கள் உள்ள ஒரு குடும்பத்துக்கு மூன்று வேளை சமைத்தால் காஸ் சிலிண்டர் முப்பத்தி ஐந்து நாட்கள் வரும்" என்று மத்திய அமைச்சர் ஒருவர் கூட்டத்தில் பேசிய சமயம் விருந்தினர் வந்தால் என்ன செய்வ தென்று ஒரு பெண்மணி கேட்க, "நீங்களும் அவர்கள் வீட்டிற்கு விருந்தினராகச் செல்லுங்கள்" என்று வேடிக்கையாகக் கூறினார் என்று செய்தித் தாளில் படித்தோம். அதைப் பற்றி தம் கருத்துக்களை தெரிவிக்கின்றனர் நம் வாசகியர் —

# எரிபொருள் சிக்கனமென்றால் அதுவும் எங்கள் தலையில்தானா


• சரளா


• மாயா


• உமா


• வனிதா

சரளா வெங்கடேசுவரன் :

"காலை எழுந்தவுடன் பால் காய்ச்சும் போது காஸைப் பெரிதாக வைப்பவர்களே அதிகம். சிறியதாக வைக்கும் போது பக்க வாட்டில் பிழம்புகள் போகாமல் காஸ் வீணாகாமல் காய்ச்சலாம். காலையில் நான் டிபன், மதியம் ஒரு கறி அல்லது கூட்டு அல்லது கலந்த சாதங்கள் விஜிடபிள் ரைஸ் இப்படி செய்த பின் இரவு சப்பாத்தி கறி அல்லது கூட்டு செய்வேன். சத்தான, எளிமையான, அதிகம் செய்து வீணாக்காத சமையல் முறையைக் கையாளுகிறேன். சரி, சப்பாத்தி 'புல்கா' கட்ட சப்பாத்திக்கு தோசைக்கல்லில் சிறிது வெந்த பிறகு பக்கத்தில் மெலிதாக எரியும் அடுப்பில் சுடுவார்கள் பல பெண்கள். அது தவறு. இடுக்கியால் கல்லை இறக்கிக் கொண்டு அதே அடுப்பில் சுட வேண்டும்.

எலெக்ட்ரிக் ரைஸ்குக்கர் வாங்கியுள்ளேன். சாதம், உப்புமா, புலவு, பொங்கல், பருப்பு இவைகளையெல்லாம் அதில் சமைக்கலாம். நான்ஸ்டிக் தோசைக்கல் இல்லாவிட்டாலும், ஹிண்டோலியம் இலுப்பச்சட்டி, தோசைக்கல் வாங்கி வைத்துக் கொண்டால் இரும்பை விட விரைவில் சூடாகும். கடைசி தோசையை மாவு ஊற்றியதும் அடுப்பை அணைத்து விட்டால் கல் சூட்டில் வெந்து விடும். பட்டுப்புடைவை வாங்குவதில்லையா? எத்தனையோ பொருட்களை போல தவணை முறையில் கிடைக்கும் ரைஸ்குக்கரை வாங்கிக் கொள்ளலாம். காப்பர் பாட்டம் பாத்திரங்கள் சில வாங்கலாம்.

முட்டைக்கோஸ் கறி செய்யும் போது தாளித்த பின் கோஸை அலம்பிப் போட்டு இரண்டு திருப்பு திருப்பி ஒரு நிமிடத்தில் அணைத்துவிட்டு மூடி வைத்து விட்டு, வேறு ஏதேனும் துணி மடித்தல், கிளீனிங் இப்படி செய்து விட்டு வந்து பார்த்தால், இலுப்பச்சட்டியின் சூட்டில் பாதி வெந்த நிலையில் இருக்கும். பிறகு அடுப்பு மூட்டி ஒரு நிமிடம் வைத்து வதக்கினால் கறி ரெடி. பெரும்பாலான வெண்டை, பச்சைக் காய்கறிகள், கீரைகளை இப்படி வதக்கினால் போதும். மற்றொரு உபாயம் காய்கறிகளை நறுக்காமல் துருவி விடுவேன். இதனால் வதக்கும் நேரம் குறையும். நிமிடத்தில் தயார். காஸ் மட்டுமா மிச்சம் நேரமும்தான்.

சாம்பாருக்குத் தேவையான பருப்பை குக



**எவர்சில்வர் குழிக்கரண்டி காம்பு உடைந்துவிடும் பட்சத்தில் கரண்டி காம்பின் ஒரு பகுதியை மட்டும் சாணை பிடித்தால் உபயோகமான, பிடியுடன் கூடிய ஸ்டீல் கத்தி தயார்.**

**— கஸ்தூரி**

கரில் வைக்கும் போது மேலே சிறு பாத்திரத்தில் புளியை நீரில் போட்டு வைத்தால் குக்கரைத் திறந்தவுடன் புளி வெந்திருக்குமல்லவா! புளி கரைத்து வாசனை போக வற்றவிடும் நேரமும் மிச்சம். எப்படிக் கரைத்தாலும் புளி சக்கையும் வீணாகும். இதில் புளியின் முழு சத்தும் கிடைக்கும். மேலும் சாம்பார், ரசத்துக்குரிய சாமான்களை வறுத்து வாசனையாக பொடி செய்து வைத்துக் கொண்டால் பச்சை வாசனை போகும் வரை கொதிக்கவிடும் நேரம் மிஞ்சும். வறுத்த பொடி, வெந்த புளி, காய், உப்பு சேர்த்து பாதி நேரத்தை மிச்சப்படுத்தலாம்!

புளியை ஊற வைத்து மிக்ஸியில் அடித்து விட்டு தாளித்து வைத்துக் கொண்டதில் ஊற்றிக் கொதிக்க வைக்கும் வத்தல் குழம்பு மிக ருசியானது. புளி இஞ்சிக்கும் அப்படியே செய்யலாம். மிச்ச புளி விழுது அரைத்தது இருந்தாலும் பிரிட்ஜில் வைத்து வேக வைத்து விடலாம். பொதுவாக எரிபொருள் மிச்சப்படுத்துவது என்றால் வீணாவதைக் குறைத்தாலே போதும். இட்டத்தட்ட ஒன்றரைக் கிலோ காஸ் வீணாகவே செலவாகிறது. மூன்று பேர் உள்ள என் குடும்பத்துக்கு ஐம்பது நாட்கள் வரும் போது ஐந்து பேர் உள்ள குடும்பத்துக்கு நாற்பது நாட்களாவது வரும்.

**மாயா விஸ்வநாத் :**

"நிச்சயமாக இதை நான் ஒத்துக் கொள்ள முடியாது. நாலு பேர் உள்ள என் வீட்டில் அப்படி வருவதில்லை. சிலர் எளிமையாக அடிக்கடி சாலட் செய்வர். முளைக்கட்டிய தானியங்கள் ஊறியதுமே பாதி வெந்தால் போதும். சைவ, அசைவ உணவுகள் வேக வைப்பதிலும் வித்தியாசம் உண்டு. ஒவ்வொரு மாநில உணவு தயாரிப்பதும், செயல்முறை, நேரம் வேறுபடும். காலை டிபன், மதிய உணவு 'ஹெவி'யாக இருந்தால் இரவு தயிர்சாதமே போதும். விருந்தினர் நம் வீட்டுக்கு வந்து விட்டால் நாமும் அதுபோல எப்படிப் போக முடியும்? ஒரு திருமணத்துக்காக வெளியூரிலிருந்து வந்தால் ஓரிரு நாட்கள் தங்குவார்கள்.

அமெரிக்காவில் ஒரு விழா, நிகழ்ச்சி ஒருவர் ஏற்பாடு செய்தால் மறுமுறை இன்னொருவர் ஏற்பாடு செய்வார். அல்லது உணவு வகைகளை ஆளுக்கொன்றாகப் பகிர்ந்து தயாரிப்பார்கள். பாதி உணவுவகைகள் ரெடிமேடாகவும் கிடைக்கும். ஆனால் நடுத்தர மக்களாகிய நமக்கு அது போல சோஷியல் லைஃப் ஏது? பசி நேரம் ஒருவர் வீட்டுக்குச் சென்றால் உரிமையாக கேட்டுக் கூட சாப்பிடுவோம். மாதர் சங்க கூட்டங்கள், சிறு கெட்-டு-கெதருக்கு இப்போதெல்லாம் சமையல் காண்ட்ராக்டர்கள் மூலமோ, ஹோட்டலிலோ ஏற்பாடு செய்கிறோம். காய்கறி, பருப்பு, தானியங்களில் கெமிக்கல் சேர்ந்து விடுவதால் விலை அதிகம் தந்தாலும் தரக் குறைவாக இருப்பதால் வேகும் நேரம் அதிகமாகிறது. அதற்காக தரமான காய்களை பகல் பார்க்க, மாக்ஸ்வொர்த் கடைகளிலும், மளிகை சாமான்களை நீல்கிரீஸ் போன்ற கடைகளிலும் எத்தனை பேரால் வாங்க முடியும்?

குளிர், கோடைக்காலத்திலும் காஸ் எரிவதில் வித்தியாசம் ஏற்படும். காஸ் சிலிண்டர் எடை குறைவாக வந்தால் அந்த மாதம் விரைவில் செலவாகும். உணவு வகைகளை நிறைய செய்யாமல், சிறு குடும்பமாக போவதாக இருந்தால் வரலாம். கூட்டுக் குடும்பத்தில் இருந்தாலும் கல்யாணத்துக்குப் போவதாக இருந்தாலும் வீட்டில் சமைத்து விட்டு வருபவர்கள் அதிகம் உள்ளனர். பொங்கல் தீபாவளி என்றால் நிறைய காஸ் செலவாகும். மேலும் சமைக்கும் போது போன் வந்தால், வாசலில் கூர்க்கா, ஸேல்ஸ் பெண்கள் (முகத்திலடிக்க விரும்பாமல் பேசி அனுப்ப வேண்டுமே) வந்தால் அடுப்பை அணைத்து விட்டு வருவோம். பாதி எண்ணெய் காய்ந்திருந்தால் வேஸ்ட்தான். திரும்ப அடுப்பை மூட்டினால் வேஸ்ட்டாகிறது காஸ். விதி முறைப்படி மூடி வைத்து வதக்கவும் என்றால் நாம் வேலையாக இருக்கும் போது குழந்தைகளை கிளறிவிடச் சொன்னால் பொறுமையின்றி மூடியைத் திறந்து வைத்திவிட்டுத்தான் கிளற வேண்டியுள்ளது என்கிறார்கள். எல்லோராலும் காப்பர் பாட்டம் பொருட்களை வாங்க முடியாது. குறிப்பிட்ட நாள் வரும் எனும் வாதத்தை ஏற்றுக் கொள்ள முடியாது. காரணம் ஒவ்வொரு குடும்பமும் ஒவ்வொரு மாதிரி உணவு தயாரிப்பு, கலாச்சாரம், பழக்கம் கொண்டது. ஒரே மாதிரி உபயோகிக்கவே நிச்சயம் முடியாது.

**உமா வெங்கடரமணி :**

"ஹாட் பிளேட், எலெக்ட்ரிக் குக்கர், கிச்ச

னுக்குப் பயனுள்ள மின்சார சாமான்களை நடுத்தர மக்கள் வாங்கி உபயோகிக்க முடியாது. காரணம் வாங்கும் செலவு மட்டுமல்ல. கரண்ட் சார்ஜ் மட்டும் கொஞ்சமாகவா இருக்கிறது? எடை குறைவான, தனியார் காஸ் சிலிண்டர் களை பணக்காரர்களால்தான் வாங்க முடியும். ரேஷன் கார்டில் ஆயிரம் ரூபாய்க்குக் கீழ் வருமானம் உள்ளவர்களுக்குத்தான் மண்ணெண் ணெய் என்பதால் காஸுக்குத் துணை அடுப் பாக ஸ்டவ்வையும் உபயோகப்படுத்த முடிவதில்லை. வெளியில் மண்ணெண்ணெய் கிடைப்பதில்லை. கிடைத்தாலும் மிகுந்த சிரமப் பட்டு விலை அதிகம் தந்து வாங்கும் நிலை.

சரி! இவ்வளவு கணக்கு சொல்லும் அரசாங் கம் தீபாவளி, கிருஸ்மஸ் பொங்கல் பண்டிகை களுக்குக் காஸ் அதிகம் செலவாகுமே என்று ஸ்பெஷலாக என்ன திட்டம் வைத்திருக்கிறார் கள்? வெளியே வாங்கினால் தரமான, சுவை யான பட்சணங்கள் விற்கும் விலை வாங்கிக் கட்டுப்படியாகாது என்று வீட்டில்தான் செய்ய வேண்டியுள்ளது. நாடு முழுதும் பரவிக்கிடக் கும் பாக்டீரியா, கொசுவால் பரவும் நோய் களைத் தடுக்க 'அக்வாகார்டு' சமையலறையை அலங்கரிக்க வேண்டுமென்றால் அது எங்க ளால் எப்படி முடியும்? நீரைக் காய்ச்சிக் குடி யுங்கள் என்று உபதேசம் செய்யும் அரசு அதற்கு என்ன வழி செய்கிறது? கீஸர் இல்லாத நடுத்தர வர்க்க வீட்டில் பெரியோர்க்கும், குழந்தைகளுக்கு மாவது வெந்நீரை அடுப்பில் தானே போட வேண்டியுள்ளது. பெற்றோர், நாத்தனார், மச்சினர் என்று இன்னும் கூட்டுக் குடும்பங்கள் சிதறாத பெரிய குடும்பங்கள் ஐந்து பேர் மட்டுமா உள்ளனர்? விருந்தினர் வீட்டுக்கு திரும்ப நாம் போக வேண்டுமென் றால் அவர்கள் வெளியூரில் இருந்தால் நமக்கு டிக்கட் வாங்க வேண்டாமா? டிக்கட் கட்ட ணம் மட்டும் குறை வாகவா உள்ளது?

---

**வாரம் ஒருமுறையாவது நம் தலையணை உறைகள் மாற்றப்பட வேண்டும். சுத்தமான அறை, கார்ரோட்டம் தவிர சுத்தமான, எண்ணெய்ப் பிசுக்கற்ற தலையணை உறையும் நல்ல உறக்கத்தைக் கொடுக்கும்.**

— **லலிதா**



பிரஷர் குக்கர், பால் குக்கர் உபயோகித் தால் காஸ் சேமிக்கலாம் என்பதுடன், காஸ் சிலிண்டரைக் காலியானதும் எடுத்து வைத்து விடாமல் நான்கைந்து முறை உருட்டிக் குலுக் கினால் நிச்சயம் ஒரு நாள் காஸ் கிடைக்கும். ஆட்டைக் கடித்து, மாட்டைக் கடித்து, மனு ஷனைக் கடித்த கதையாக எத்தனையோ வழி களில் எரிபொருள் வீணாக்கப்பட்டாலும் பெண்களுக்கு மிகவும் உதவியாக, வசதியாக இருக்கும் காஸில்தான் மிச்சம் செய்ய வேண் டுமா? அடக் கடவுளே! அதுவும் பெண்கள் தலைச்சுமைதானா?

**லலிதா சுந்தரம் :**

"அவசரயுகத்தில் யாரும் மூன்று வேளை பெரிய சமையலாக செய்வதில்லை. இன்றைய குழந்தைகள் Fast Food வகைகளை விரும்புகின் றனர். பாதி நேரம் ரெடிமேட் நூடுல்ஸ், மாகி, கார்ன்பிளேக்ஸ் என்று வாங்கி சுவைக்கிறார் கள். பல குழந்தைகளுக்கு சாம்பார், ரசம், தயிர் என்று முறையாக சாப்பிடத் தெரிவதில்லை. ஏதோ ஒன்று இருந்தால் போதும் என்ற நிலை தான் பெரும்பாலான வீடுகளில் உள்ளது. காலை உணவை அவசரமாகத் தயாரித்தாலும் இரவு உணவை சிலர் நிதானமாக நன்கு செய் வார்கள். 'சூடு ஒரு சுவை' கூட இரண்டு பிடி செல்லும். காலை நன்கு சமைத்தால் இரவு பொடி, துகையல் வகைகள் செய்கிறார்கள். நம் முன்னோர் போல சமையலுக்கு அதிக முக்கி யத்துவம் தருவதில்லை எனலாம்.

அனாவசியமாக எரியும் விளக்கு, மின் விசிறிகள் மூலம் மின்சாரம் சேமித்தாலே ஒரு எலெக்ட்ரிக் குக்கரை சமாளிக்கலாம். பொது வில் பொறுப்புணர்ச்சியுடன் நாமும் செயல் பட்டு குழந்தைகளுக்கும் உணர்த்தினால் அவர் களும் பிற்காலத்தில் பயன் பெறுவார்கள். நிறைய காய்கள், சத்துக்களை சேர்த்து ஒரே உணவாக செய்யலாம். அடுப்பில் சூடு செய் யாமல், பச்சையாக உபயோகப்படுத்தும் காய், கனிகள், ஊறுகாய்கள் செய்யலாம். காலத்துக்கு ஏற்றபடி பத்திரிகைகளில் வரும் எளிய, புதிய உணவு வகைகளை செய்து பார்க்கலாம். அலு வலகம் போகும் பெண்களுக்கு முதல் காஸ் முடிந்து இரண்டாம் காஸ் வருவதற்குள் பயங் கர டென்ஷன் ஆகிவிடும். இதனால் விருந் தாளிகளைக் கூட அந்த இடைப்பட்ட நாட் களில் உபசரிக்க முடியாமல் வருத்தப்பட வேண்டியுள்ளது. மொத்தத்தில் குறிப்பிட்ட நாள் வரை காஸை வைத்துக் கொள்ள வேண் டும் என்பது ஒப்புக் கொள்ள முடியாதது. காலத்தின் கட்டாயத்தால் நாமே வேலைகளை சுருக்கிக் கொள்ளலாமே என்று தோன்றினா லும் அதைக் கட்டாயப்படுத்தும் போது எரிச் சல்தான் வரும் இல்லையா?

பேட்டி : **பானுமதி இராமசந்திரன்**

# குழந்தை இல்லையா?

## கருப்பை/மார்பக கட்டி-மாதவிடாய் கோளாறா?

### எமது சிகிச்சையால் பலன் பெற்றவர்கள்

**கருகுழாய் அடைப்பு நீங்கி குழந்தைப் பேறு:** திருமதி. மீனாகுமாரி (27) தேனாம்பேட்டை, சென்னை-18, இவருக்கு திருமணம் ஆகி ஐந்து ஆண்டுகள் ஆகியும் கருகுழாய்கள் இரண்டிலுமே அடைப்பு இருந்ததால் குழந்தை இல்லை. அடைப்பை நீக்கும் ஆபரேஷனால் Fallopian Tube பாதுகாப்பு உத்திரவாதம் இல்லாததால் எம்மிடம் மூன்று மாத சிகிச்சை மேற்கொண்டார். இப்போது கருவுற்றிருப்பது சோதனை மூலம் உறுதியாகி உள்ளது. இப்படி மாதமதோறும் எமது சிகிச்சையில் பலன் பெறுபவர்கள் அநேகர். மிகவும் சிக்கலான பிரச்சனைகளில் Fallopian Tube Block ஒன்று ஆகையால் இதை குறிப்பிட்டுள்ளோம். இதுபோல் ஒன்பது ஆண்டுகள் பலவித நவீன சிகிச்சைகளிலும் குழந்தை இன்றி எமது ஒரே மாத சிகிச்சையில் பலன் அடைந்துள்ள இன்னொரு சகோதரி திருமதி J. ஞானம் (36), பெங்களூர். பல சிகிச்சைகளிலும் கைவிடப்பட்டவர்களுக்கே இவ்வளவு நல்ல பலன் கிட்டுவதானால் ஆரம்பத்திலேயே வந்தால் அனைவருமே நிச்சயம் பலன் அடைய முடியும். ஒரு கோளாறு பல ஆகி இளம் வயது வீணாகும் முன் வாருங்கள்! பலன் அடையுங்கள்!

### 5-6 ஆண்டு ஆகியும் குழந்தை இல்லாதோர் பிரச்சினைகள்

1) ஆர்மோன் ஒழுங்கீனம் காரணமாக தாறுமாறான, கறுப்பான கட்டிகளாக அதிகமான ரத்தப்போக்கு. 2) கருக்கோளங்களில் கட்டிகள் - PCOD (Poly Cystic Ovarian Diseases) 70% பேரின் முக்கிய பிரச்சனை இதுதான்! இதனால் மாதவிடாய் நாட்கணக்கின்படி வருவதில்லை. முட்டை (Follicle) உற்பத்தி தடைபட்டு மாத்திரை சாப்பிட்டால் மட்டுமே மாதவிலக்கு ஏற்படுவது இல்லாவிட்டால் 2 - 3 மாதம் ஆனாலும் வருவதில்லை. சிலருக்கு 13 - 14 வயதிலேயே இந்தப் பிரச்சினை ஆரம்பித்து விடுகிறது 3) கருப்பையினுள் கட்டிகள் புண்கள் (Fibroid Polyp, Cyst, Endometriosis, Cervicitis) குழந்தை பெறுமுன்பேகூட பல பெண்களுக்கு கட்டிக்காக கருப்பையை எடுத்துவிட வேண்டிய நிர்ப்பந்தம். 4) கருக்குழலில் அடைப்புகள்- (Fallopian Tube Block) இதற்கு ஆபரேஷன் செய்வதால் கருக்குழலே சேதமடையும் வாய்ப்பு அதிகம். 5) 3-வது, 4-வது மாதத்தில் தொடர்ந்து கருச்சிதைவு (Missed Abortion) கருப்பை கோளாறுகளுக்கும், குழந்தை இல்லாத குறைபாடுகளுக்கும் பொதுவாக ஒருசில ஆர்மோன் மருந்துகளே பல பெயரில் வேறு வேறு டாக்டர்களால் வேறு வேறு மருந்துகள் போல தரப்படுகின்றன. ஒிருமுறை சாப்பிட்டு பலனின்றியும் அதையே பல ஆண்டுகள் சாப்பிடுவதால் எளிதில் கருத்தரிக்கும் இளம் வயதுதான் வீணாகிறது என்பதை பலர் உணரவில்லை. **(சோதனைக்கு பெண் மருத்துவர் உண்டு).**

**உயிரணு இல்லாத ஆண்கள்:** (Azoospermia) ஆண்களின் குறைபாடுகளில் மிகவும் சிக்கலானதும் பிறரிடம் உயிரணு பெறுதல் அல்லது தத்து எடுத்தல் இரண்டு மட்டுமே தீர்வு என்று கருதப்படும் இந்த கோளாறுக்கு வெற்றிகரமான சிகிச்சை எம்மிடம் உண்டு. பல நவீன சிகிச்சை / ஆபரேஷன் செய்தும் கூட 8 ஆண்டுகளாக உயிரணு உற்பத்தி இல்லாமல் இருந்த 40 வயதான ஒருவருக்கு எமது குருமருந்து சிகிச்சைக்குப் பின் உயிரணு உற்பத்தி தொடங்கி உள்ளது விஜயா ஹெல்த் சென்டர் சோதனை மூலம் உறுதியாகி உள்ளது. 5-6 மில்லியன் உள்ளவர்கள் பலர் பல மாத்திரை, ஊசி மருந்து எடுத்தும் தற்காலிகமாக அதிகமாகி 3 மாதம் கழித்து சோதித்தால் முன் உள்ளதும் இல்லாமல் போனவர்களும் பலர் உண்டு. இவர்கள் நல்ல பலன் காணலாம்.மற்ற எந்த மருந்தினாலும் 1 ஆண்டில் கிடைக்கும் பலனை எமது சிகிச்சையில் ஒரு சில மாதங்களிலேயே காணலாம்! உடலை வாட்டும் கடும் பத்தியம் இல்லை. எமது சிகிச்சையில் 90% பேருக்கு ஆண் குழந்தைகளே பிறந்துள்ளன. குழந்தை இல்லாதவர்களுக்கென்றே 180 ஆண்டு பரம்பரை அனுபவம் பெற்றது. **கருப்பை கட்டி:** திருமதி சந்தரி, சிதம்பரம் தெரு, சென்னை-4 இவருக்கு இரண்டு கருக்கோளங்களிலும் 7 செ.மீ., 6 செ.மீ. அளவு கட்டிகளும் (Loculated Cyst) தாறுமாறான ரத்தப் போகும் இருந்தது. ஆபரேஷனே தீர்வு என்ற நிலையில் எமது சிகிச்சைக்கு பின் 2 கட்டிகளும் கரைந்து விட்டன. U.S. Scan மூலம் உறுதியாகி உள்ளது. **10 ஆண்டு ரத்தப் போக்கு:** செல்வி. வித்யா (22) இவருக்கு பருவமடைந்த 12 வயது முதலே மாதம் முழுவதும் இருந்த ரத்தப் போக்கை நிறுத்த தொடர்ந்து கருத்தடை மாத்திரையே (21 நாள்) சாப்பிட்டு வந்தார். இந்த 10 ஆண்டு நோய் எமது சிகிச்சையில் குணமாகி வீணாய்ப் போக இருந்த திருமண வாழ்க்கை பிழைத்தது. 15-20 நாட்கள் நிறுத்த முடியாத ரத்தப்போக்கை எமது மருந்தினால் குணப்படுத்தலாம். ஆபரேஷன் தேவையில்லை.

---



**Dr. S. JEYARAM,**
M.A., M.A., PRAVEEN, HIMP, RMP

**நவோதயா சித்தர் மருத்துவமனை**

20, ஆற்காடு ரோடு (மாடியில்)
கோடம்பாக்கம், சென்னை - 600 024.
(லிபர்டி பஸ் ஸ்டாப் / சேகர் எம்போரியம் அருகில்)
போன் : 044-4810752 / 044-8551258 (வீடு)
தபால் - போன் : நேரில், தேதி-நேரம் குறித்துக் கொண்டுதான் வர வேண்டும்.

### பெண்கள் மார்பக கட்டி

பெண்கள் மார்பகத்தில் குத்தல், வலியுடனோ வலி இல்லாமலோ ஒருவித கட்டி (Fibro Adenoma) வருவதுண்டு. இது ஆபரேஷன் செய்தாலும் மீண்டும் மீண்டும் வரும். இதை கரைத்துவிட சரியான மருத்துவம் இல்லாமல், மாதாமாதம் Check-up செய்து கொண்டு வருபவர் பலர். எமது சிகிச்சையில் எளிதாக குணம் பெறலாம். பயத்துடன் நாட்களை கடத்த வேண்டாம்.

கருப்பை கட்டி (Fibroid) மார்பக கட்டிக்கான (Fibro Adenoma) மருந்துகள் எமது சொந்த ஆராய்ச்சி கண்டுபிடிப்புகளாகும். வேறு வைத்தியரிடமோ, கடையிலோ நிச்சயம் கிடைக்காது. 3-4 மாத சிகிச்சையில் 100% கரைந்து போவதை காணலாம். போலி மருந்துகளால் ஏமாற்றமே!

---

ஆலோசனை நேரம் : காலை 10 முதல் 2 மணி வரை, மாலை 4 முதல் 8.30 மணி வரை, ஞாயிறு காலை மட்டும்

பிப்ரவரி 16-ந் தேதி, கோவை, R.S.புரம், 6, பெரியசாமி ரோடு கிழக்கு, பிருந்தாவன் லாட்ஜில் டாக்டரை சந்திக்க. முன் பதிவுக்கு (அகாதீஸ்வரா பீடம்) போன்: 452235 (P.P.) (10 a.m. to 4 p.m.)

பிப்ரவரி 17-ந் தேதி, டாக்டரை திருச்சி-1, ஜங்ஷன் ரோடு, திருவள்ளுவர் பஸ் நிலையம் அருகில், ஹோட்டல் அஜந்தாவில் சந்திக்கலாம். போன்: 460501.

சென்ற இதழ் தொடர்ச்சி....

**மங்கையர் மலர் & பார்க் டவுன் பெனிபிட் பண்டு லிமிடெட் இணைந்து வழங்கும் வழிகாட்டிகள் — கலந்துரையாடல்**

# சேமியுங்கள் பயப்படாமல்

நிதி நிறுவனங்கள் பலவற்றில் நடந்த மோசடிகளால் சேமிக்கவே பயமாக இருக்கிறது எனும் சூழ் நிலை. ஆனால் சேமிப்பு என்பது தனிப்பட்டவர்களுக்கும், குடும்பத் திற்கும், சமூகத்திற்கும் மிக அவசிய மான ஒன்று. எனவே இந்த பயம் மறைந்து சிறந்த நிதி நிறுவனங்களில் மக்களின் சேமிப்பு பெருக வேண்டும். அந்த வகையில் சிறந்த சேமிப்பு நிறு வனங்கள் பல உள்ளன. அதில் சில நிதி நிறுவன அமைப்புகள் பற்றி இங்கு பேசுகிறார்கள். அடுத்த இதழில் வேறு சில பிரபல நிதி நிறுவனத்தாரின் பேட்டியும் தொடருகிறது.

இந்த இதழில் வாசகியரின் கேள்விகளுக்கு விடையளித்தவர்கள் —

***வீரராகவன்*** கௌரவச் செயலாளர், சேம்பர் ஆஃப் நிதீஸ், ***டாக்டர் பாலசுப்ரமண்யம்*** - தலைவர், பார்க் டவுன் பெனிஃபிட் பண்ட் லிமிடெட், ***சுந்தரம்*** - பர்பெக்ட் பெனிஃபிட் பண்ட்.




• சுந்தரம்


• பாலசுப்ரமணியம்

***சீதா ராகவன்*** : இப்போதுள்ள சூழ்நிலையில் நிதி நிறுவனங்களை விட, குறைந்த வட்டி கிடைத்தாலும் பரவாயில்லை என்று வங்கியிலேயே முதலீடு செய்து விடலாமே என்ற எண்ணம் தோன்று கிறது. பாதுகாப்பாக வும் இருக்குமல்லவா?

***வீரராகவன்*** : நிதி நிறுவனங்களைப் பற்றி அதிகமாக மக்கள் மத்தியில் விளக்கப்படாததால் இந்த எண்ணம் ஏற்பட்டுள்ளது. தொலைக்காட்சியிலும் காவல்துறை மூலமும் செய்தித்தாள்களிலும் பொதுவாக 'நிதி நிறுவனம்' என்று சொல்கின்றனர். ரிசர்வ் வங்கிக் கட்டுப்பாட்டின் கீழ் இயங்கும் நிதி நிறுவனங்களை தனியார் நிதி நிறுவனங்களுடன் சேர்த்துக்

குழப்பிக் கொண்டிருப்பதால் இந்த பயம் ஏற்பட்டுள்ளது. பங்கு தாரர்களாக நீங்கள் இருக்கும் நிதி நிறுவனங்களிடம் பயப்படாமல் சந்தேகங்களுக்கு விளக் கம் கேட்டு, குறைகளைத் தட்டிக் கேட்கவும் உங்களால் முடியும். அதனால் நிதி நிறுவனங்களிடையே சட்டதிட்டங்களில், செயல் பாட்டில் வித்தியாசம் உள்ளதைப் புரிந்து கொள்ள வேண்டும். பாதுகாப்பான அதிக வட்டிக்கு உத்திரவாதம் கிடைக்கும்.

**சுந்தரம் :** நிதி நிறுவனம் பற்றி ஏற்பட்டுள்ள பயத்தால் சேமிக்கலாமா? வேண்டாமா? என்ற சந்தேகமே வந்து விட்டது மக்களுக்கு. சமீபத்தில் ஆரம்பிக்கப்பட்ட நிறுவனங்கள் முறையாக நடத்தப்படாததும், விளம்பரங்களின் கவர்ச்சியும், ஆதிக்கமும் பார்த்து முதலீடு செய்ததுதான் அதற்குக் காரணம். மிக வும் பாதுகாப்பானது வங்கிதான். ஆனால் ஏறிவரும் விலைவாசிக்கு ஏற்றார் போல் வட்டி விகிதம் அதில் இல்லை. அரசு வங்கி வட்டியைக் கூட்டி, விலைவாசியைக் குறைக்க வேண்டும். வங்கியிலும், நிதிகளிலுமாக பணத்தைப் பிரித்துப் போட வேண்டும். கொஞ்சம் பணத்தைப் போட்டுவிட்டு சில மாதங்களில் திருப்பிக் கேளுங்கள். தருகிறார்களா என்று சோதித்துப் பாருங்கள். பிறர் சொல்லும் வதந்திகளை, புரளிகளை நம்பாமல் அனுபவ பூர்வமாகத் தெளிவடைந்த பின்தான் போட வேண்டும்.

கேள்வி கேட்ட வாசகிகள்

**கீதா :** அப்படிப் பார்த்தால் கடந்த நான்கு வருடங்களாக ஒரு நிதி நிறுவனம் நல்ல நிலை யில் உள்ளதா எனத் தெரிந்து முதலீடு செய்திருக்கிறேன். வருங் காலத்தில் அதே நிலை நீடிக்குமா என்று எப்படித் தெரிந்து கொள்வது? 'சேம்பர் ஆஃப் நிதிஸ்' மூலம் தெரிந்து கொள்ள முடியுமா?

**வீரராகவன் :** Chamber of Nidhisக்குக் கடிதம் எழுதிக் கேட்க முடியும். நிதி நிறுவனங்களின் உண்மை நிலையை எழுதி சேம்பர் உங்களுக்கு வழிகாட்டும். பல நிதி நிறுவனங்களைப் பற்றி சிபாரிசு செய்தல் எங்களால் இயலாது. ஆனால் [illegible]கள் குறிப்பிட்டுக் கேட்கும் நிறுவனம் பற்றிய [illegible] அனுப்போம். எங்கள் சேம்[illegible]ல் மத்திய அரசின் அங்கீகாரம் பெற்ற நூற்றி தொண்ணூற்றி இரண்டு நிறுவனங்களின் வி[illegible]ரங்கள் உள்ளன.

வீரராகவன்

**திருமதி மகாதேவன் :** ரிசர்வ் வங்கியின்படி வட்டி தருவதற்கு உச்ச வரம்பு உள்ளதா? பல இடங்களில் முதலீடு செய்வதால் வருமானவரி பிரச்னை வருமா?

**சுந்தரம் :** '96 ஆம் வருடம் ஜூலை மாதம் 6 ஆம் தேதிக்கு முன் நிதிகள் எந்த வட்டி யும் தரலாம் என்று இருந்தது. இதனால் போட்டி போட்டுக் கொண்டு வரம் பின்றி வட்டி தந்தனர். இதனால் ஏற்பட்ட குழப்ப நிலைக்குப் பிறகு தான் 15% வட்டிதான் தர வேண்டும் என்று ரிசர்வ் வங்கி வரம்பு வைத்தது. மேலும் நாங்கள் நிதி நிறுவனங்களில் அசையாத சொத்துக்களான நிலம் வீடுகள் மீதும், நகைகளின் மீதும், டெபா சிட்டுகளின் மீதும் தான் கடன் தருகிறோம். பிற்பாடு நிலத்தில்

ஏதேனும் வில்லங்கம் ஏற்பட்டாலும் ஏலம் போட உரிமையுண்டு. நகைகளும் அப்படித்தான். அதனால் எங்களிடம் பணம் போட்டாலும் நஷ்டம். இல்லை. பாதுகாப்பாக இருக்கும். டெபாசிட்டுகள் முதிர்ச்சி அடைவதற்கு முன் கேட்டால் சிறிது சிரமமாக இருக்குமே தவிர நிச்சயம் பயப்படத் தேவையில்லை.

**ஒரு கல்லூரி மாணவி :** பெனிபிட், பண்டாபிஸ், மியூசுவல் என்று இவற்றுக்கு வித்தியாசமே புரியவில் லையே?

**வீரராகவன் :** இதற்கு நிதியின் ஆரம்ப கால சரித்திரம் கொஞ்சம் தெரிந்து கொள்ள வேண்டும். நூறு. நூற்றி ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பான் புரோக்கர்கள், அடகு வைத்த பொருட்களுக்கு அதிக வட்டி வாங்கியதோடு, மக்களில் பலர் கைநாட்டு என்பதால் ஏமாற்றி ஏலம் போட்டு சுருட்டினர். இதனால் அந்தந்தப் பகுதியிலிருந்த மனிதாபிமானமிருந்த பெரியோர்களால் கணிசமான பணம் முதலீடு செய்யப்பட்டு, குறைந்த வட்டிக்குக் கடன் தருவதென்று ஆரம் பித்தவைகளே நிதி நிறுவனங்கள். இது அந்தந்தப் பகுதிகளில் துவங்கப்பட்டது. இதனால் தான் ஏரியா பெயரில் திருவல்லிக்கேணி ஃபண்ட், நுங்கம்பாக்கம் ஃபண்ட் என இருக்கும். பின் பல இடங்களில் ஆரம்பிக்கப்பட்டது. அவற்றில் பல வகைகளே பெனிபிட் ஃபண்ட், மியூச்சுவல் ஃபண்ட் என்பதெல்லாம்.

**ஒரு மாணவி :** எங்களுக்கும் சேமிக்கும் எண்ணம் உள்ளது. வங்கியில் நாங்கள் சேமிக்க முடியுமா?

**வீரராகவன் :** நீங்கள் பதினெட்டு வயதுக் குட்பட்ட மைனர்கள். பெற்றோர், கார்டியன்கள் மூலம்தான் பணம் கட்ட வேண்டுமென்று விதிமுறை உள்ளது. பதினெட்டு வயதுக்கு மேல் நீங்கள் பணம் போட்டு எடுக்கலாம்.

**நளினி** (ஆசிரியை) : மாதா மாதம் பணம் போடுவதை விட, தினமும் கிடைக்கும் பணத்தைச் சேமித்து வைக்க ஏதேனும் திட்டம்

## நிதியைக் கையாள்கின்ற நிறுவனங்கள்

- கம்பெனி சட்டம் 1956-ன் கீழ் பதிவு செய்யப் பெற்ற வங்கி சாரா நிதி நிறுவனங்கள் (Non-Banking Financial Companies incorporated under the Companies Act) (NBFC's)
  - தொழிற்சாலை இயந்திரங்கள், உபகரணங்களை வாங்கி வாடகைக்கு விடும் நிறுவனங்கள் (Equipment Leasing Companies)
  - வாகனங்கள், டி.வி. போன்ற அசையும் சொத்துக்கள் வாங்க கடன் தரும் நிறுவனங்கள் (Hire purchase finance companies)
  - வீடு கட்ட கடன் வழங்கும் நிறுவனங்கள் (Housing Finance Companies)
  - வீடு, இயந்திரம் மற்றும் அசையும் சொத்துக்கள் இவற்றை தவிர மற்ற கடன்கள் வழங்கும் நிறுவனங்கள் (Loan Companies)
  - பத்திரங்களின் மீது முதலீடு செய்யும் நிறுவனங்கள் (Investment Companies)
  - பரஸ்பர நிதி, நல நிதி நிறுவனங்கள் (MBFCS, Mutual Benefit Financial Companies) கம்பெனிச் சட்டம் 620 அ பிரிவின் கீழ் 'நிதி' அந்தஸ்து பெற்ற நிறுவனங்கள்
- கம்பெனி சட்டம் 1956-ன் கீழ் பதிவு செய்து கொள்ளாத நிறுவனங்கள் (Un-incorporated entities)
  - தனி நபர் நிறுவனம் (Proprietory Concern)
    - 25 நபர்களிடமிருந்து மட்டுமே டிபாசிட் பெற முடியும்
  - பங்குதாரர் நிறுவனம் (Partnership Firms)
    - ஒரு பங்குதாரருக்கு 25 வீதம், அதிக பட்சமாக 250 நபர்களிடமிருந்து மட்டுமே டிபாசிட் பெற முடியும்

(தகவல்; நன்றி) : சுந்தரம், இயக்குநர், பெர்பக்ட் பெனிஃபிட் பண்ட், கமிட்டி உறுப்பினர் - சேம்பர் ஆஃப் நிதிஸ்



## அதிர்ஷ்ட(ராசி) கற்கள் அணிவதால் வாழ்க்கையில் மாற்றத்தை ஏற்படுத்த முடியுமா?
## ஆம் ஏற்படுத்த முடியும்.



இதுபற்றி பத்மஸ்ரீபேர்ல்ஸ் உரிமையாளர் **Mr. S. Rajasekhar** கூறுவதாவது

ஒவ்வொருவர் ஜாதகத்திலும் குறைகள் நிறைகள் இருக்கின்றன. அந்த ஜாதகத்தில் உள்ள கிரகங்கள் சிலது நல்லவை செய்பவையாகவும் சிலது கெடுதல் செய்பவையாகவும் அமைந்திருக்கும். இந்த கிரகங்களை நல்வழிப்படுத்துவதற்கு நாம் ராசி கற்களை நாடுகிறோம். இந்த அதிர்ஷ்ட கற்களை அணிவதால், கிரகங்களின் நற்செயல்கள் மேலும் நன்மை அடைந்து தீயசெயல்கள் வலிமை அற்று இருக்கும். நவரத்தின கற்களின் ஆராய்ச்சியின்படி கிரகங்களின் நிலையினை அறிந்துதான் ஜாதகத்தில் உள்ள குறைகளையும், நிறைகளையும் தெரிந்து கொண்டு அக்குறைகளை நிவர்த்தி செய்யக்கூடிய அதிர்ஷ்ட கற்களை நாங்கள் தேர்வு செய்கிறோம். நாங்கள் இவ்வாறு செய்வதினால் வாடிக்கையாளர்கள் பெரு மகிழ்ச்சி அடைகிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. அவ்வாறு பயனடைந்த வாடிக்கையாளர்கள் எண்ணற்றவர்கள். உதாரணமாக---

**திருமதி அம்புஜம், தி. நகர், சென்னை - 17 கூறுவதாவது**

என் மகனுக்கு 27 வயது ஆனபொழுது, எங்கள் வீட்டில் அவனுடைய திருமணத்தைப் பற்றி சிந்தித்தோம். ஆனால் என் மகனுக்கு திருமண விஷயத்தில் ஒரு ஈடுபாடு இல்லாமல் இருந்தான். சில நல்ல வரன்கள் வந்து, திருமணம் தள்ளிப் போய்க் கொண்டே இருந்தது. தற்செயலாக **பத்மஸ்ரீபேர்ல்ஸின்** விளம்பரத்தை **கல்கி, மங்கையர் மலரில்** பார்த்து, அவனுடைய ஜாதகத்துடன் **பத்மஸ்ரீபேர்ல்ஸு**க்கு விஜயம் செய்தேன். அவர்களுடைய ஜோசியர் ஜாதகத்தை ஆராய்ந்து, அதற்குண்டான அதிர்ஷ்ட கற்களை தேர்ந்தெடுத்து அணியச் செய்தார்கள். அந்த கற்களை அணிந்த 1½ மாதத்தில் திருமணம் நடைபெற்றது. தற்சமயம் திருமணத் தம்பதியினர் வாழ்க்கையில் சந்தோஷமாக இருக்கின்றனர். ராசிக் கற்களை அணிவதால் வாழ்க்கையில் உள்ள இடையூறுகள் எளிதில் நிவர்த்தி ஆகிவிடும் என்பதை அப்பொழுதுதான் தெரிந்து கொண்டேன்.

**• நிதி நிலைமை, திருமணத் தடைகள், கல்வி, சொத்து சம்பந்தமான பிரச்னைகள், வேலை வாய்ப்பு, உடல் நிலைமை, வெளிநாடு பயணம் போன்ற பிரச்னைகளுக்கு தீர்வு காணப்படும்.**

**வியாபார முன்னேற்றத்துக்கும், குழந்தை பேறு இல்லாதவர்களுக்கும் சிறப்பு ஆலோசனை கூறுகிறோம்.**

• எந்த கற்களை அணிய வேண்டும் என்று சொல்லுவதற்கு ரூ. 151/- (ஒரு ஜாதகத்திற்கு) + (ரூ. 30/- தபால் கட்டணம் கூடுதலாக) மற்றும் மூன்று கேள்விகளுக்கு பதில் அளிக்கப்படும். ஜாதகத்துடன் நேரிலோ (அ) ஜாதகத்தின் நகலையோ (அ) பிறந்த தேதி, நேரம், இடம் போன்ற விவரங்களை உங்கள் பிரச்னையுடன் **D.D/M.O**வை **Padmashri pearls** என்ற பெயரில் எடுத்து அனுப்பவும்.

இதற்குமுன் இந்த விளம்பரத்தைப் பார்த்து **D.D/M.O** அனுப்பியவர்களுக்கு பதில் அனுப்பி கொண்டு இருக்கிறோம்.

* Result can be seen within 30 days — 6 months. * Hundreds have been benefited

வேலை நேரம் : காலை 10.30 முதல் மாலை 8.30 வரை
ஞாயிற்றுக் கிழமை வர விரும்புகிறவர்கள் முன் பதிவு செய்து கொள்ளவும்.

**Consultation by appointment only**

**Hyderabad** முத்துக்கள் மற்றும் ஜாதி நவரத்தினக் கற்கள் விற்பனையாளர்கள்



# PADMASHRI PEARLS,

**JEWELLERS & GEM MERCHANTS,**
**53, NORTH USMAN ROAD, T. NAGAR, CHENNAI - 17**
**(OPP. ARR COMPLEX) PH : 8234060/ PAGER : 9632 - 756314**




**Hyderabad Show Room : 2-4-47 M.G. Road, Secunderabad - 3 Ph. 841936**



• கேள்வி கேட்ட வாசகிகள்.....

உள்ளதா? தேர்வு சமயத்தில் அந்தப் பணம் உதவுமே!

**பாலசுப்பிரமணியம்** : தினமும் குறைந்த பட்சம் ஐந்து ரூபாய் கட்ட வேண்டும். அப்படித் திட்டங்கள் உள்ளன. உங்கள் ஏரியாவிலுள்ள நிதி நிறுவனங்களில் சேமிக்கலாம்.

**ரமேஷ்** : நிதி நிறுவனங்களிலும் ஆர்.டி. உள்ளதே. வங்கியைப் போல ஆட்களை அனுப்பி பணத்தை வாங்கிச் செல்வீர்களா?

**வீரராகவன்** : S.B. யில் போடலாம். ஏன் ஏஜெண்டுகள் மூலம் போட வேண்டும். நம் பகுதியில் அருகில் இருக்கும் நிதி நிறுவனத்தில் போடலாமே. இப்போது தெருவுக்குத் தெரு நிதிகள் உள்ளன.

**சாரதா ஜெயராமன்** : சின்ன பசங்க, படிக்காதவர்கள், வேலைக்காரிகள் பிறருக்குத் தெரியாமல் சேமித்து வைத்துப் பயனடைய நினைத்தால் அதற்கு நிதி நிறுவனம் உதவுமா?

**வீரராகவன்** : கார்டியன், பெற்றோர் பாது காப்பில்தான் பணம் போட சட்டம் உள்ளது.

**பிரசன்னா** : அசோக் லேலேண்ட், டி.வி.எஸ். போன்ற நிறுவனங்களில் முதலீடு செய்வதால் இந்தப் பணம் தொழிற்சாலைக்குச் செல்கிறது என்பதால் நாட்டுக்குப் பயன்படுகிறது. அதே போல் உங்களால் என்ன நன்மை?

**சுந்தரம்** : நாங்கள் திருமணம், கல்வி, வீட்டின் நல்லது கெட்டதுக்கு சமுதாய நோக்கத்துடன் உங்கள் தேவைகளுக்காக கடனுதவி செய்கிறோம். நீங்கள் சொல்கின்ற கம்பெனிகளில் பலவகை உண்டு. தொழிற்சாலை நடத்துபவர்கள், வீடு கட்டும் ஹவுஸிங் லோன் கம்பெனிகள் என. அவர்கள் ரெகரிங் டெபாஸிட், ஸேவிங்க்ஸ் எல்லாம் வாங்க முடியாது. ஆனால் எங்களால் அவற்றைப் பெற முடியும். எனவே ஒவ்வொன்றின் தன்மையையும் புரிந்து கொண்டு டெபாசிட் செய்ய வேண்டும்.

**கிருஷ்ணவேணி** : முன்பெல்லாம் குழந்தைகள் வங்கியில் கொடுத்திருந்த உண்டி மூலம் பணம் சேர்த்தார்கள். அது போல் நிதி நிறுவனங்களிலும் உண்டி சேமிப்பு முறையை ஏன் ஆரம்பிக்கக் கூடாது?

**பாலசுப்பிரமணியம்** : குழந்தைகளை சேமிப்பில் ஈடுபடச் செய்து பெற்றோர் பணம் கட்டத்தான் சட்டத்தில் இடம் உள்ளது. பொம்மைகள் மூலம் சேமிக்கச் செய்வது நல்ல பழக்கம்தான். ஏன் மங்கையர் மலர் நம் கலாச்சாரத்துடன் கூடிய பொம்மை ஒன்றை டிசைன் செய்து தந்தால் நானே நிச்சயம் ஆரம்பிக்கிறேன் என உறுதி தருகிறேன். (இதைப் பற்றிய அறிவிப்பு சென்ற இதழில் வந்திருந்தது.)

*(அரங்கில் பலத்த கைதட்டல்)*

**புவனேஸ்வரி** : சேமிப்பது சரி. நன்கு படிப்பதற்கு அரசாங்கம் உதவுவது போல நிதி நிறுவனங்கள் படிப்புக்குக் கடனுதவி அளிக்கலாமே?

**வீரராகவன்** : செக்யூரிட்டி எதுவும் இல்லாமல் நிதிகள் கடன் தருவது கடினம்தான். எங்களுடைய சட்டதிட்டங்களில் இப்படிப் பட்டதற்குக் கடன் தர இயலாது. இப்படிப் பட்ட சட்ட கட்டுப்பாடுகள்தான் உங்களுடைய டெபாசிட் பணம் பத்திரமாக இருக்கிறது என்பதற்கு உத்தரவாதம் என்று கூட சொல்லலாம். கூலி வேலை செய்யும் இரண்டு பெண்கள் R.D. கட்டி சேமிக்கிறார்கள். அது போல நீங்களும் R.D. யில்தான் சேமிக்க வேண்டும்.

**பவதாரிணி** : உங்களில் இந்தக் கலந்துரையாடலால் இன்றைக்குத் தேவையான, ஏமாறாமல் இருக்கும் விஷயங்களைத் தெரிந்து கொண்டோம்.

**ராதிகா** : சேமிப்பு முக்கியம்தான். பெற்றோரையே தொந்தரவு செய்யாமல் நமக்குக் கிடைக்கும் பணத்தில் பாதியைச் சேர்த்து வைத்து நம் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டும்.

தொகுப்பு : **பானுமதி இராமசந்திரன்**

படங்கள் : **ஜி. சுரேஷ்**

# கர்ம யோகி

விடியற்காலை நாலு மணிக்கு பில்டர் சப்தம் கேட்டு கண் விழித்ததிலிருந்து பார்த்துக் கொண்டேயிருக்கிறேன். ஓட்டம்! ஓட்டம்! ஓட்டம். ஓடிக் கொண்டேயிருக்கிறான்...

இன்னும் கீழே உட்கார்ந்த பாடில்லை. வெண் பொங்கலின் மணம் 'கும்'மென்று வீடு முழுவதும் பரவி நிற்க, கூடவே அம்மாவின் குரல்.

"ஹேமா! இந்தா, இந்த பச்சை மிளகாயைக் கிள்ளி சாம்பாரில் போடு. இறக்கற நேரமாயிடுத்து. இந்த ஏழெட்டு மிளகாயப் பொடியா நறுக்கிக் கொடு. தயிர் சாதத்துக்கு தாளிக்கணும். பத்மநாபனுக்கு இன்னைக்கி கேரியர் வேண்டாம். வயிறு சரியில்லையாம். வெறும் தயிர் சாதம் டப்பாவுல கொடுத்தனுப்பினா போதும்!"

"ஹரி எங்கே? இன்னுமா மார்க்கெட்லேந்து காய்கறி வாங்கிண்டு வரலே! மணி எட்டடிச்சா டாண்ணு இலை போட்டாகணும் டிபனுக்கு. சட்னியைத் துளி வாயில போட்டுண்டு பாரு. உப்பு சரியாயிருக்கான்னு..."

"அப்படியோவ்! நம்மால முடியாதும்மா, ஆடிப் போயிடுவேன் நான் இரண்டே நாள்ல."

குரலிலும், கண்களிலும் தெரிந்த ஆயிரத்தெட்டு ஆச்சரியக் குறிகளோடு உள்ளே வந்த என் மனைவி லலிதா அயர்ந்து போய் உட்கார்ந்தாள்.

"நிஜமாங்க! நேத்து நாம வந்து இறங்கினதுலேந்து பார்க்கறேன். என்ன உழைப்பு! போய்ப் பாருங்க கிச்சன்ல. மணி எட்டாகப் போகுது அவ்வளவுதான். நாற்பது, அம்பது பேருக்கு இட்லி, சாம்பார், பொங்கல், சட்னி எல்லாம் ரெடி. அதோட பாதி சமையல் ஆயாச்சு இன்னொரு பக்கத்துல. அப்பா! வியர்வை



வழிய வழிய கேஸ்கிட்ட உங்கம்மா கிடந்து அல்லாட றதை கண்ணாலேயே பார்க்க முடியலிங்க. ஹெல்ப் பண்ணலாம்னு போனா உனக்கு வேண்டாம்மா இதெல்லாம். முடியவும் முடியாது. ஹேமா இருக்காளே. நீ போயி உட்காருங்கறாங்க. பாவம்! செக்கு மாடுமாதிரி ராவும், பகலும் என்ன ஓட்டம். போய்ப் பாருங்க!"

அவள் பேசிக் கொண்டே போக உடைந்து போகிறேன் நான். என் கண்ணீரை மறைப்பதற்காக சட்டென்று எழுந்து போய் ஜன்னலருகே நிற்கிறேன்.

"லலிதா! நீ இன்னைக்கித்தான் பார்க்கறே. ஆனா நான்... எனக்கு விவரம் தெரிஞ்ச நாளா பார்த்துண்டிருக்





**மழையினால் கடையில் வாங்கிய உருளைக்கிழங்கு சிப்ஸ் நமத்து இருந்தது. நான்-ஸ்டிக் வாணலியில் ஒரு ஸ்பூன் நெய் ஊற்றி, சிப்ஸை போட்டு, காஸை சிறியதாக எரியவிட்டு, மூடி வைத்தேன். 5 நிமிடத்தில் சிப்ஸ் 'மொறு மொறு' ஆனது.**

**— எஸ். லக்ஷ்மி**

ஒ ஒ ஒ ஒ ஒ ஒ ஒ ஒ ஒ ஒ ஒ ஒ ஒ ஒ ஒ ஒ ஒ ஒ ஒ

கேன். கிட்டத்தட்ட இருபத்தேழு. இருபத்தெட்டு வருஷமா உழைக்கறா எங்கம்மா, ஒரு நாள் விடாம.

இருபத்திரண்டு வயசுல பூவையும், பொட்டையும் இழந்து விதவையா நின்னா. துணைக்கு வயசுல மடில தூங்கின என்னைத் தவிர யாருமில்லை. அன்னைலேந்து இப்படி செக்கு மாடா உழைச்சு, உழைச்சுதான் என்னை வளர்த்தா. படிச்சேன்! வேலைக்கு போனேன்; சம்பாதிக்கறேன் நம்ம கல்யாணம் ஆயாச்சு. ஆனா எங்கம்மா ஓட்டம் மட்டும் இன்னும் நிற்கவேயில்லை. உழைச்சுண்டே யிருக்கா!" குரல் கம்மிப் போகிறது எனக்கு.

"ஏங்க? கை நிறைய சம்பாதிக்கறீங்க. போதாக் குறைக்கு நானும் வேலைக்குப் போறேன். இப்படி உங்கம்மா கிடந்து அல்லாடணும்னு அவசியமே இல்லையே."

லலிதா பேசிக் கொண்டே போகத் தலையாட்டுகிறேன். "எவ்வளவோ சொல்லிட்டேன்! முதல் மாசம் சம்பளம் வாங்கிக் கவரோட கொண்டு வந்து அம்மாக் கைல கொடுத்த நாள் இன்னைக்கும் ஞாபகமிருக்கு. சம்பளம் வாங்கின கையோட ஹோட்டல் ரூமுக்குக் கூடப் போகாம நேர பஸ் ஏறி ஓடி வந்தேன் அன்னைக்கி. பெரிசா அழுதா! இனிமே என் கூடத்தாம்மா இருக்கணும் கிளம்புன்னா உடனே சிரிச்சா. பைத்தியக்காரா! இன்னும் உயரப் போகணும்டா நீ. ப்ரமோஷன்லாம் ஆகட்டும் நான் வரேன்னா. ப்ரமோஷன் ஆகி கூப்பிட்டேன். கல்யாணம்னு சாக்கு சொன்னா! இப்ப என்ன சொல்லப் போறா ளோத் தெரியாது."

"சொல்றது என்னங்க!" லலிதா எழுந்து என்னருகே வந்தாள்.

"இரண்டு பேருமா சேர்ந்து கூப்பிடுவோம். இத்தனை வருஷமா சாக்கு போக்கு சொல்லி தனியா இருந்த மட்டும் போதும் வயசாச்சு பாவம்! இனிமே நம்ம கூட இருக்கட்டும். உடம்பு தேய்ஞ்சு ஆடிப் போயிடும்."

நான் நெகிழ்ந்து போய் நிற்கிறேன். அம்மாவின் குரல் கேட்கிறது முன் அறையிலிருந்து.

"சுந்தர்! சுந்தர்... இங்க கொஞ்சம் வரியா?"

கதவுக்கு மேல் தொங்கிய சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டு வெளியே வருகிறேன்.

முன் அறை முழுவதும் வரிசையாய் இலை போடப்பட்டு அனைவரும் உட்கார்ந்திருந்தனர். ஹேமாவும் ஹரியும் பரிமாறிக் கொண்டிருக்க அம்மா கதவுக்கருகில் கம்பீரமாய் உட்கார்ந்திருந்தாள்.

மெல்லிய நூல் புடைவை. வெள்ளை ரவிக்கை நெற்றியில் துளியாய் விபூதி... கண்கள் பரிமாறும் விதத்தையும், இலையையும் எடை போட்டுக் கொண்டிருந்தன.

"ஹரி! இன்னைக்கி வெள்ளிக்கிழமை. சீனுவுக்கு வெங்காய சட்னியை விட்டுடாதே. விரதம்! ஏம்ப்பா, உங்கம்மா கால் எப்படி இருக்காம் இப்ப. லெட்டர் கிட்டர் வந்திருக்கா?"

யாரையோ கரிசனையோடு விசாரித்துக் கொண்டிருந்தாள். நான் அம்மாவின் அருகே போகிறேன்.

"வாப்பா! இதுதான் எம் புள்ளை சுந்தர். பெரிய கம்பெனில இருக்கான் ஆபீசரா!" அறிமுகப்படுத்தினாள்.

சொல்லும் போதே அவள் கண்கள் பெருமையில் பூரித்து நின்றன.

"ஒரே புள்ளை. இந்தூர்லதான்... நம்ம பெரிய பள்ளிக் கூடத்துலதான் படிச்சுட்டு

✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳

**அரைத்து வைக்கும் எந்தக் குழம்புக்கும் தக்காளியை தேங்காயுடன் சேர்த்து வதக்கி அரைத்து குழம்பில் ஊற்றினால் சுவையே தனிதான். செய்து பாருங்களேன்!**

**— யசோதா பழனிச்சாமி**



வேலைக்குப் போயிருக்கான்."

அம்மா என் கதையை அளந்து கொண்டே போக நான் வாய்மூடி வழக்கம் போல கேட்டுக் கொண்டே நிற்கிறேன். அன்றிலிருந்து இன்று வரை அதே பேச்சு.

எவர் மனத்தையும் நோக அடிக்கவோ, குத்திக் கிளறிப் பீறிட வைக்கவோ அம்மாவுக்குத் தெரியாது. நிதானம்! எதிலும் நிதானமாய் இருப்பாள்.

சாப்பாட்டுக்கே இல்லாமல் கஷ்டப்பட்ட போதும் வாய் திறந்து, நொந்து போய் நாலு வார்த்தை பேசிப் பார்த்ததில்லை.

நின்ற இடத்திலேயே கண் கலங்கிப் போய் கால்கள் ஆட்டமெடுக்க பட்டென்று வெளியே வருகிறேன்.

"இந்த கரிசனையும், அன்பும் தான்ம்பா உங்கம்மாவே தேடி ஓடி வர வைக்கறது. பாரு! எப்படி ஒரு பாசத்தோடு பேசிண்டிருக்கா. அதோட, கை மணம். பகவான் நூறு ஆயுசைக் கொடுக்கணும் அவங்களுக்கு!"

வெளியில் வந்து நின்றவன் முதுகை வெளியே வந்த ஒருவர் தட்டி பேசிவிட்டுப் போக மௌனித்து நிற்கிறேன் நான் நின்ற இடத்திலேயே.

இரவு!

"ஏம்மா! மணி பத்தாகப் போறது. இன்னும் என்ன பண்றே? ரெஸ்ட்டா வந்து படும்மா!"

"இதோ வந்துட்டேம்ப்பா. நாளைக்கி, உன் கிட்ட பேசிண்டிருக்கலே கொஞ்சம் கறுப்பா ஒரு பையன் அவனுக்கு கல்யாணம் நிச்சயம் ஆகியிருக்கு. ஆபீஸ்ல இருக்கறவாளுக்கு பார்ட்டி கொடுக்கப் போறானாம். அதான் நாளைக்கி ஸ்வீட், காரம் பண்ணி அனுப்பணும். சாமான்லாம் இருக்கான்னு பார்த்தேன். நெய்யும், ஏலக்காயும் வாங்கிண்டு வான்னு ஹரிகிட்ட சொல்லணும்."

அருகில் வந்து கால் நீட்டி உட்கார்ந்த அம்மாவைக் கண் நிறையப் பார்க்கிறேன். அழுகை அடைத்துக் கொண்டு வருகிறது எனக்குத் தெரியாமலேயே. காலை மெள்ள அமுக்கியபடியே தாங்க முடியாமல் 'பொத்' தென்று அம்மாவின் மடியில் விழுகிறேன்.

அவளின் கரங்கள் என் தலையை வழக்கம் போல வருட நான் பேச்சின்றி... பேசவே முடியாமல் அப்படியே கிடக்கிறேன்.

"நல்லாயிருக்கு! கல்யாணமாச்சு, குடியும் குடித்தனமும் ஆயாச்சு இன்னும் அம்மா மடீல தலையை வச்சுண்டு!"

அம்மா பேசினாலும் குரலில் பெருமையும், சந்தோஷமும் சாய்ந்தாடியது.

"தோ பாரு லலிதா! அம்மா கோண்டுவைப் பாரு..."

"இல்லம்மா! அவ்வளவு ஆசை, பாசம் அதோட அதிகமா உங்களைப் பத்தி கவலை உங்க பிள்ளைக்கு!"

"எனக்கு என்னப்பா! போன மாசம் சித்த உடம்பு நை, நைன்னு படுத்தித்து. இப்ப ஒண்ணுமில்லைடா. கொழந்தை மாதிரி படுத்துண்டு, அழுதுண்டு... எழுந்துரு! பைத்தியக்காரா."

அம்மா முதுகைத் தட்ட எழுந்து அவளின் சுச்சிக் கரங்களைப் பற்றுகிறேன்.

"இல்லைம்மா! என்னால இனிமேலும் இதெல்லாம் கண்ணால பார்க்க முடியாது. பேசாம எல்லாத்தையும் மூடிட்டு என் பின்னால கிளம்பு. கடைசி காலத்துலையாவது கொஞ்சம் நிம்மதியா, ரெஸ்ட்டா இரும்மா. காலம் பூரா உழைச்சு ஓடா தேய்ஞ்சது போதாதா? இனிமே யாருக்காக உழைக்கறே? எனக்கு ஒண்ணும் வேண்டாம்மா."

அம்மா நகர்ந்து சுவற்றில் சாய்ந்து கொள்கிறாள். "ஆமா அத்தை! இவரை படிக்க வைக்கணும், நிமிர்ந்து நிக்க வைக்கணும்னு ராவும் பகலுமா கஷ்டப்பட்டதெல்லாம் போதும். பெருமையா பிள்ளை வீட்ல வந்து உட்கார்ந்துண்டு சாப்பிடக் கூடாதா?"

லலிதாவும் தன் பங்கிற்கு விடாமல் பேசிக் கொண்டே போனாள் பக்கத்தில் உட்கார்ந்து.

✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦

**பொரியை ஒரு பேசினில் போட்டு ஒரு ஸ்பூன் நெய், காலையில் மீந்த, ஒரு ஸ்பூன் வெங்காய சட்னி, ஒரு ஸ்பூன் உருளைக்கிழங்கு கறி (மத்யானம் செய்தது) ஒரு அப்பளம் தூளாக்கியது, கொஞ்சம் கொத்தமல்லி தூவி ஒரு கப்பில் போட்டு சாப்பிட கொடுங்கள். பள்ளியிலிருந்து வந்த குழந்தைகள் விரும்பி சாப்பிடுவார்கள்.**

**— கே. பாக்யலக்ஷ்மி**



"இல்லம்மா! தப்பு... சும்மா உட்கார்ந்து சாப்பிடறதையா பெருமைங்கற?"

அம்மா நிதானமாய்க் கேட்க நாங்களிருவரும் வாயடைத்துப் போகிறோம்.

"நிஜம் தாம்ப்பா. உன்னை காலூன வைக்கனும் ஒரு இடத்துலன்னு கொஞ்சம் மாவு இடிக்கலை நான். விடு விடா சொன்ன வேலைலா பண்ணினேன். நிறைய ஓடினேன். அதுக்காக இப்ப அப்பாடின்னு கையைக் கட்டிண்டு உட்கார முடியாதுப்பா.

இது ஓடி உரமேறின உடம்புடா. கவலைப் படாதே. எனக்கு ஒண்ணும் ஆயிடாது. அதோட கடமை இன்னும் இருக்குப்பா. அதெல்லாம் பண்ண வேண்டாமா?"

அம்மா கேட்க புரியாமல் அவனைப் பார்க்கிறேன். "இன்னும் எனக்கு எதுவும் வேண்டாம்மா. என்ன செய்யப் போறே இன்னும் எனக்கு! ம்!"

"உனக்கு வேண்டாம்ப்பா. ஆனா என்னை நம்பி இருக்கறதுகளை நட்டாத்துல விட முடியுமா சொல்லு?"

"சுந்தர்! உனக்கு ஞாபகம் இருக்கா. கிட்டு மாமா!

"ஆமாம்மா!" தலையாட்டுகிறேன்.

"அவர் யாரோ, நான் யாரோ. ஆனாலும் வயசான காலத்துல கழியை ஊனிண்டு வந்து எனக்கு வேலையை எத்தனை வாங்கிக் கொடுப்பார்! உன் பிள்ளைக்கு டிசம்பர்ல பீஸ் கட்டணுமே திரும்ப... இந்த வேலையை ஒத்துக்கோ, இருநூறு, முன்னூறு கிடைக்கும்னு நம்ம கவலையைப் படுவாரே ஞாபகம் இல்லை?

"அதே மாதிரி தான்ப்பா! நம்ம கஷ்டம் விடிஞ்சு போச்சுங்கறதுக்காக உட்கார்ந்தே சாப்பிட்டுட்டு சாகணுமா? ஓடிண்டிருக்கற மட்டும் ஓடட்டுமே.

ஹரியைப் பாரு! பகல் முழுக்க என்கிட்ட வேலை செய்யறான். ராத்திரி முழுக்க படிக்கிறான். நல்ல புள்ளை பாவம். அப்பா, அம்மா இல்லை. மாமா வீட்ல ஒண்டிண்டு கிடக்கான்.

ஹேமா... படுத்த படுக்கையா தாயாரை வச்சுண்டு வயசான காலத்துல கட்டிக்க துணியில்லாமக் கிடந்தது. ஒத்தாசை பண்ணுன்னு அழைச்சுண்டு வந்தேன். மாடா உழைக்கறா பாவம்! இதுக்கு முன்னால வேலை பார்த்துதே சாந்தா அவளுக்கு பொண் பொறந்திருக்கு தெரியுமா. அழுதுண்டு லெட்டர் போட்டிருக்கு பைத்தியம். குழந்தையைத் தூக்கிண்டு ஒரு நடை வான்னு ஹரியை விட்டு எழுதிப் போட சொன்னேன். ஏதோ! ஏழைப் பொண்ணு.

அதே மாதிரி ஹேமாவுக்கும் ஒரு நல்ல இடமாப் பார்த்து கோவில்ல வச்சாவது தாலி கட்டி அனுப்பணும். நிறையக் கடமை இருக்குப்பா. உதறிட்டு வான்னு கூப்பிடாதே. அம்மா நம்ம கிட்ட வந்து இருக்கலையேன்னு குறை படாதே. என்ன? ஏதோ நம்மால முடிஞ்சது....

என்னிக்கி என் கடமை முடிஞ்சது, கட்டை ஓய்ஞ்சு போச்சுன்னு தோணறதோ அன்னைக்கி கிளம்பி வருவேன் உன் கிட்ட... உட்கார்ந்து சாப்பிட, போறுமா."

முடித்து விட்டு பெருமூச்சு விடும் அம்மாவை நிமிர்ந்து கண்ணாரப் பார்க்கிறேன்.

இவள் கடமை எப்போது ஓயப் போகிறது? முன்னால் ஒரு சாந்தா... இப்போது ஹரி, ஹேமா - பின்னால் இன்னொரு சாந்தா, இன்னுமொரு ஹரி நிச்சயம் வருவார்கள். ஓடிக் கொண்டேயிருப்பாள் அலுப்பின்றி.

பெருமையோடு கண் நிறைய பார்க்கிறேன். கைகளைப் பிடித்து கண்களில் ஒற்றிக் கொள்கிறேன்.

✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣

***சாம்பிராணி புகைபோட அவசரத்திற்குக் கரி இல்லையா? கட்டி கற்பூரத்தைத் தூள் செய்து அதில் சாம்பிராணி பொடி போட்டு இரண்டையும் கொளுத்துங்கள். மணம் அறை முழுவதும் 'கம கம'க்கும்!***

***— கி. மஞ்சு***





## வெள்ளைப்பூண்டு = 10 தாய்

**இது மருத்துவ பழமொழி. கேஸ் அடுப்பில் சமையல் ஆகும் போதே பூண்டு பற்களை அனலில் வைத்து எடுங்கள். எளிதில் தோல் உரியும். நன்கு வெந்து இருக்கும். பாலுடனோ, தேனுடனோ, வெந்நீருடனோ சாப்பிடலாம். ஜலதோஷம், வாயுத் தொல்லை, கொலஸ்ட்ரால் எல்லாம் கிட்டே நெருங்காது.**

**— நளினா தேவி**

✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣

முதல் பரிசு ரூ. 500/-
பெறும் கட்டுரை:

## தோல் தொழில் பயிற்சிகள்:

# என்ன கோர்ஸ், எங்கு படிக்கலாம்?

நம் நாட்டின் ஏற்றுதியில் இரண்டாவது இடத்தைப் பெறுவது தோல் துறையே. மேலை நாட்டினர் விருப்பத்திற்கேற்ப தரமும், வடிவமும் கொண்டவையாக தோல் பொருட்கள், தோலாடைகள், காலணிகள் போன்றவற்றைத் தயாரிப்பது அவசியம். இதனைக் கருத்திற் கொண்டு மத்திய அரசு, இத்துறைகளில் பயிற்சியைத் தருவதற்கான பல்வேறு நிறவனங்களை ஏற்படுத்தியிருக்கிறது.

இப்பயிற்சிகளுக்கு சர்வதேச தரத்துடன், அயல்நாட்டு இயந்திரங்கள் மற்றும் தொழில்நுட்ப வல்லுநர்களை வரவழைத்து நவீன முறையில் செய்முறைப் பயிற்சி களையும் கற்றுத் தருகின்றன.

இப்பயிற்சிகளுக்கு அடிப்படைக் கல்வித் தகுதி எஸ்.எஸ்.எல்.சி., +2. அடிப்படை தொழிற்திறன் பயிற்சி, தொழில் நுட்பர் பயிற்சி, வல்லுநர் பயிற்சி என்று பல்வேறு பயிற்சிகளை அளிக்கிறது. நம் தேவைக்கேற்ப பயிற்சியைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். பயிற்சி காலம், 3 மாதம் முதல் 2 ஆண்டுகள் வரை பயிற்சியைப் பொறுத்தது.

இதில் சிறப்பம்சம் Campus Interview முறையில் பெரிய நிறுவனங்கள், பயிற்சி நிலையங்களுக்கே வந்து அவர்களுக்குத் தேவையான தகுதியைப் பெற்றிருப்பவர்களை தேர்வு செய்து, நல்ல ஊதிய மளித்து பணிக்கு அமர்த்திக் கொள்கின்றன.

இப்பயிற்சிகளை முடித்தவர்கள், பெரிய ஏற்றுமதி நிறுவனங்களில் கணிசமான ஊதியத்திற்கு விரும்பி அழைக்கப்படுகிறார்கள். சுயமாக தொழில்புரிய முனைபவர்களுக்கு அரசும், வங்கிகளும் வேண்டிய நிதி மற்றும் பிற உதவிகளையும் செய்து வருகின்றன.

நம் நாட்டுத் தோல் தொழில் துறைக்குத் தேவைப்படும் தொழில் திறன் படைத்தவர்களின் தேவையில் தற்போது 28% மட்டுமே உள்ளனர் என்பது இத்துறையில் இன்னும் ஏராளமானோர்க்கு வாய்ப்பிருப்பதைக் காட்டுகிறது.

இப்பயிற்சிகளில் பெண்களுக்கு மிகுந்த முக்கியத்துவம் அளிக்கப்படுவதுடன், பின்தங்கிய பகுதியைச் சார்ந்தவர்களுக்கு, பயிற்சியின் போது உதவித் தொகையும் வழங்கப்படுகிறது.

தோல் பொருட்கள், தோலாடைகள், காலணிகள் தயாரிப்பிற்கு பயிற்சியளிக்கும் நிறுவனங்களின் முகவரிகள் :

Head, Education & Training Division, Central Leather Research Institute, Adyar, Chennai - 600 020.

Director, Prototype Development & Training Centre, Sector B-24, Guindy Industrial Estate, Ekkaduthangal, Chennai - 600 097.

Director, Central Footwear Training Cer*re, 65/1, G.S.T. Road, Guindy, Chennai - 600 032.

Franco - Indian Vocational Training Institute, 33, Dumas Street,

நமது இதழில் 'வழிகாட்டிகள்' போட்டியை அறிவித்தது பற்றிப் பெருமிதப்படும் வகையில் நிறைய வாசகிகள் மிகப் பயனுள்ள கல்வி வகுப்புக்களைப் பற்றி எழுதியிருக்கிறார்கள். இவற்றைப் பத்திரப்படுத்திக் கொண்டே வாருங்கள். கல்வியாண்டில் பயனுள்ளதாக இருக்கும். மற்றவர்களுக்கும் தரலாமே, வழிகாட்டலாமே! (வாசகர்களுக்கு ஒரு வார்த்தை) இது ஒரு வழிகாட்டும் தகவல் பகுதி மட்டுமே. கோர்ஸ் அல்லது கோர்ஸ் நடத்தும் நிறுவனங்களின் நிறைகுறைகளை அவரவர்கள்தான் ஆராய்ந்து தேர்ந்தெடுக்க வேண்டும் எனக் கேட்டுக் கொள்கிறோம். நம் நிறுவனம் அதற்குப் பொறுப்பாகாது. — ஆர்.

Pondicherry - 605 001.

ALT Training College, Unit No. 203, Block 'A', II Floor, 1073/74, Raheja Centre, Avanashi Road, Coimbatore - 641 018.

Director, NSIC - PDTC, 30. Industrial Estate, Dindugal.

Principal, Dr. JCKIRTD, Gandhi Niketan Ashram, T. Kalluppatti - 626 702. Madurai Dist.

Leather Goods Training Centre, Siruvayal Road, Kundrakudi - 623 206.

Leather Goods Training Centre, Kalkurichy, Manamadurai, P.M.T. District.

— *பிரபினா முருகேசன், திண்டுக்கல் - 8.*

## இரண்டாம் பரிசு ரூ. 250/- பெறும் கட்டுரை :

*(10+2) ஹையர் செகன்டரி கோர்ஸுக்கு பின்னர் டெக்னிகல் அல்லது, புரபசனல் கோர்ஸ் கிடைக்கவில்லையே என்று வருந்த வேண்டாம்.* B.Sc, (Botany) or B.Sc, (zoology) with ancillary Botany *முடியுங்கள். பின்னர்* 1 year P.G. Diploma in Plantation Management *படிக்கலாம்.*

Course : P.G. Diploma in Plantation Management.

Duration : One year. 2 Semesters.

at Kothari Institute of Plantation Management, Coonoor. The Nilgiris.

*லண்டனில் உள்ள ஒரு பிரபலமான பல் கலைக்கழக பட்டயம்.*

*வாய்ப்புகள் : 100 சதவீத வேலை வாய்ப்பு கேம்பஸ் இன்டர்வியூ.*

*இந்தியாவில் தமிழ்நாடு, கேரளா, கர்னாடகா, மற்றும் அஸ்ஸாம், முதலிய மாநிலங்களில் உள்ள தேயிலை, காப்பி மற்றும் ரப்பர் எஸ்டேட்டுகளில் நல்ல வேலை, சம்பளம்.*

*வெளிநாடுகளில் மலேசியா, இங்கிலாந்து நாடுகளில் வேலை வாய்ப்பு* Asst. Manager, *வேலை. நல்ல சம்பளம் மற்றும் அலவன்சுகள்.*

*இந்தியாவில்* Plantation Science *ல்* Kothari Institute *மட்டுமே இத்தகைய கோர்ஸை நடத்துகிறது.*

Diploma in Plantation Management — 6 Months

*வேலை வாய்ப்பு :* Asst. Field Officer, Field Officer.

*(10 + 2)ற்குப் பின்னர், போட்டி மிகுந்த, மாறிவரும் இவ்வுலகில் படிக்க மிகச் சிறந்த ஒரு கோர்ஸ் முடநீக்கியல் பட்டப்படிப்பு ஆகும். இதைப் பற்றிய விவரங்கள் —*

Name of the Course : B.Sc (or) B.P.T. (Physiotherapy)

Duration of the Course : 3½ years.

3 years + 6 months Internship

Post Graduate Level :

1. PGDR (Post graduate Diploma in Rehabilitation)

1 year course.

2. M.Sc., (or) M.P.T. (Physiotherapy) 2 years course.

3. PhD in Physiotherapy

*கோர்ஸ் நடத்தப்படும் இடங்களும், கல்லூரிகளும் —*

1. Christian Medical College, Vellore.
2. Govt. Institute of Rehabilitation, K.K. Nagar, Chennai.
3. Govt. Institute of Rehabilitation, Trichy.
4. Post graduate Institute for Medical Education & Research, Chandigarh.
5. Rehabilitation Council, New Delhi.
6. All India Institute of Physical Medicine & Rehabilitation, Mahalaxmi, Mumbai.
7. National Institute of Rehabilitation & Research, Calcutta & Cuttack.
8. Self-Financing Physiotherapy Colleges like

a) Ramakrishna Institute of Paramedical Sciences, Coimbatore.

b) KMCH, Coimbatore.

c) Adiparasakthi Institute of Paramedical Sciences, Melmaruvathur.

d) Santosh Hospitals, Chennai.

e) Mother Theresa Institute of Paramedical Sciences, Pondicherry.

f) Manipal Academy, Manipal.

g) Shetty Institute of Paramedical Sciences, Mangalore.

h) Erode College of Physiotherapy.

— *வதாராஜ், பாண்டிச்சேரி - 11.*

### மூன்றாம் பரிசு ரூ. 100/- பெறும் கட்டுரை:

+ 2 படிப்பில் Mathematics or Statistics பாடத்தை படித்துள்ளவர்கள் மேற்படிப்பில் 'B' Stat (Hons) என்ற பட்டப்படிப்பிற்கு விண்ணப் பிக்கலாம். இந்தப் படிப்பு "Indian Statistical Institute, Calcutta" என்ற நிறுவனத்தால் வழங்கப் படுகிறது. இந்த Institute கல்கத்தா, புதுதில்லி மற்றும் பங்களூரில் செயல்படுகிறது. +2 படிப்பு முடித்தவுடன் நுழைவுத் தேர்வு உண்டு. நுழைவுத் தேர்வு Mathematics and statistics பாடங்களில் வைக்கிறார்கள். நுழைவுத் தேர் வில் வெற்றி பெற்றவர்களுக்கு நேர்முகத் தேர் வும் உண்டு. நேர்முகத் தேர்வில் தேர்ந்தெடுக் கப்படுபவர்களுக்கு B-Stat (Hons.) பட்டப் படிப் பிற்கு இடம் கிடைக்கிறது. இதற்கு மாதம் ரூ. 250/- உதவித் தொகையும் Institute வழங்குகிறது. இந்தப் படிப்பு 3 ஆண்டு கால படிப்பு ஆகும். B-Stat (Hons.) முடித்தவர்களுக்கு அரசு மற்றும் தனியார் நிறுவனங்களில் வேலை வாய்ப்பிற்கு வழி உண்டு.

மேலும் M-Stat என்ற பட்ட மேற்படிப்பும் இங்கு உள்ளது. இப்படிப்பு B-Stat, B.Sc Maths, Statis படித்தவர்களுக்கு மட்டும். இதற்கும் நுழைவுத் தேர்வு, நேர்முகத் தேர்வு, உதவித் தொகை ரூ. 400/- போன்றவை உண்டு. இப்படிப்பு முடித்தவர்களுக்கு இந்தியாவில் மட்டுமின்றி வெளிநாடுகளிலும் வேலை வாய்ப்பு பிரகாச மாக உள்ளது.

ஒவ்வொரு வருடமும் ஜனவரி, பிப்ரவரி மாதங்களில் ஆங்கில நாளிதழ்களில் இதற்கான விளம்பரம் செய்யப்படும். மேலும் விவரங் களுக்கு —

The Dean of Studies,
Indian Statistical Institute, 203, Barrackpore Truck Road, Calcutta - 700 035.

— *ராஜீகோபாலன், கோவை - 4.*

சென்னை மாநகராட்சி அலுவலகத்தில் நேரு வேலை வாய்ப்பு திட்டத்தின் கீழ் நடை பெறும் தொழிற் பயிற்சிகளைப் பற்றி தங்கள் "மங்கையர் மலர்" நவம்பர் '96 மாத இதழில் அறிவித்திருந்தீர்கள். மிக்க மகிழ்ச்சி. இத் தொழிற் பயிற்சி சென்னை மாநகராட்சி எல் லைக்கு (155 வட்டம்) உட்பட்ட (only city limit) உணவு பங்கீட்டு அட்டை வைத்திருக்கும் குடும்ப வருமானம் மாதம் ரூ. 1000/-க்கு மிகாமல் வறுமை கோட்டிற்குக் கீழ் வாழும் ஏழை நபர் களுக்கு மட்டுமே தகுதியானது. மேலும் அதிக பட்சமாக 6 மாதங்கள் மட்டுமே அளிக்கப்படும் தொழிற் பயிற்சிதான் சென்னை மாநகராட்சி யில் நடத்தப்படுகிறது. எனவே சென்னையைச் சாராத மற்ற மாவட்டங்களிலிருந்தும் உதாரண

மாக சேலம், ஈரோடு, கோயம்புத்தூர், கடப்பா போன்ற இடங்களிலிருந்தும் மனுக்கள் வந்த வண்ணம் இருக்கிறது. ஆதலினால் தங்களின் அடுத்த இதழில் சென்னையை அல்லாத இடங்களில் வசிப்பவர்கள் அந்தந்த ஆட்சியாளர்/நகராட்சி அலுவலகத்தை அணுகி இப்பயிற்சி பற்றிய விவரங்களை கேட்டறியுமாறு தங்கள் இதழில் தெரியப்படுத்துமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறது.

— சா. அ. ஜெகன்னாதன்
*சமுதாய வளர்ச்சி அலுவலர், சென்னை - 3.*

நான் திருச்சியிலுள்ள சேஷசாயி இன்ஸ்டிடியூட் ஆப் டெக்னாலஜியில் பல்ப் அண்டு பேப்பர் டெக்னாலஜி படித்தேன். 3½ ஆண்டு கோர்ஸ். இது தமிழகத்திலேயே பேப்பர் டெக்னாலஜிக்கு பட்டயப் பயிற்சி அளிக்கும் ஒரே ஸ்தாபனம். இதற்கு நல்ல மதிப்பெண்களுடன் பத்தாம் வகுப்பு தேறி இருந்தாலே போதும்.

முதல் 1½ ஆண்டுகள் இன்ஸ்டிடியூட்டிலும் அடுத்த 2 வருடங்களுக்கு 1 வருடம் சேஷசாயி பேப்பர் மில்லில் படிப்புடன் கூடிய நேரடி பயிற்சியும் பின் திருச்சியில் உள்ள இன்ஸ்டிடியூட்டில் கல்வியும் பயிற்றுவிக்கிறார்கள்.

நான் படித்துக் கொண்டிருக்கும் போதே ஹைதராபாத்திலிருந்து அப்ரெண்டிஸ் எடுப்பதாக கேட்டிருந்தார்கள். 10 நாட்கள் ஹைதராபாத்துக்கு சென்று தங்கி தேர்வு எழுதினேன். உடன் தேர்வு செய்து ரிசல்ட் வந்தவுடன் அப்ரெண்டிஸ் கொடுத்து வேலையும் கொடுத்து விட்டார்கள். படிக்கும் போது உள்ள ஒரு வருட நேரடிப் பயிற்சிக்கு மாதம் ரூ. 400/- உதவித் தொகையாக அளித்து விடுகிறார்கள். மொத்தம் இந்த கோர்ஸ்க்கு 20 பேர் எடுக்கிறார்கள்.

— எஸ். இராஜேந்திரன், கம்பம்.




**நாங்கள் புதிய சூட்கேஸ் வாங்கினோம். அதனுடன்** alphabets letters **கொடுத்தார்கள். சூட்கேஸிற்கு ஒட்டியது போக மீதியிருந்ததை வேஸ்ட் பண்ணாமல் ஒவ்வொரு ஸ்விட்சின் மேல் ஒரு எழுத்தினை ஒட்டிவிட்டார் என் கணவர்.**

B - Bulb; F - Fan; T - Tube light; L - Lamp; V - Verandah; M - Mixie; G - Grinder; H - Hall light; K - Kitchen; N - Night lamp; R - Radio; W - Washing machine.

— கல்பனா

## காகித அறிவியல் பட்டப்படிப்பு

உயரிய தொழில் முக்கியத்துவமும், உடனடி வேலை வாய்ப்பும் மிக்கது இந்தப் பட்டப் படிப்பாகும். தென்னகத்தில் கர்நாடக மாநிலத்தைத் தவிர வேறெங்கும் இந்தத் தொழில் நுட்பப் படிப்பு இல்லை.

படிப்பின் பெயர் : பி.ஏ.எஸ்சி

படிப்பின் காலம் : நான்கு ஆண்டுகள்

கல்வித் தகுதி : +2 தேர்வில் 55% மதிப்பெண் பெற்று தேர்ச்சியடைந்து இயற்பியல் வேதியியல், கணக்கு இவற்றுடன் ஆங்கிலத்தை ஒரு பாடமாகக் கொண்டவராக இருத்தல் வேண்டும்.

1. படிப்பில் சேர்த்துக் கொள்ள தகுதி பெற்றோருள் சிறப்புத் தகுதி உடையோர் இருப்பின், அவர்கள் "வெஸ்ட் கோஸ்ட் காகித ஆலையின்" உதவித் தொகையையும் பெறும் வாய்ப்புள்ளது.

2. பாடங்களுடன் இணைந்த செய்முறைப் பயிற்சிகளும் மாணவர்களுக்கு அளிக்கப்படுகிறது.

3. கர்நாடகப் பல்கலைக் கழகத்தின் அங்கீகாரம் பெற்று அதனுடன் இணைந்துள்ள பாங்குருவாகர் பட்டப்படிப்புக் கல்லூரியில், இத்தொழில் படிப்பு சமீபத்தில் தொடங்கப்பட்டுள்ளது.

4. வகுப்புகள் ஜூலை முதல் வாரத்தில் தொடங்கப் பெறுகின்றன.

5. விண்ணப்பங்கள் மே மாதம் இரண்டாவது வாரத்திலிருந்து வழங்கப்படுகின்றன.

6. பூர்த்தி செய்யப்பட்ட விண்ணப்பப் படிவத்தை ஜூன் 18ம் தேதிக்குள் அனுப்பிட வேண்டும்.

விண்ணப்பம் பெற முகவரி :
"பிரின்சிபால்",
பாங்குருவாகர் டிகிரி காலேஜ்,
தண்டேலி - 581 325.

— இ. சண்முகம், திருச்சி.

டிப்ளமா சிவில் மற்றும் டிப்ளமா விவசாயம் படித்துவிட்டு வேலையில் இருந்து கொண்டு மேற்கொண்டு டிகிரி படிப்பதற்கு 'தொடர்பு வழி' கல்வியில் படிப்பதற்கு "Indira Gandhi National Open University" (IGNOU) யில் இரண்டு கோர்ஸ், ஜூலை 1994 இருந்து ஆரம்பித்து இருக்கிறார்கள்.

## ஸ்பெஷல் அப்பம் :



*தேவையான பொருட்கள் :*

பச்சரிசி - 1 ஆழாக்கு

கோதுமை - ½ ஆழாக்கு

உளுந்து - 1 கைப்பிடி

வெல்லம் - ½ கிலோ

ஏலம் - 4

தேங்காய் துறுவல் - 1 மூடி

எண்ணெய் - பொரிக்க

*செய்முறை :*

பச்சரிசி, கோதுமை, உளுந்து மூன்றையும் ஒரு மணி நேரம் ஊற வைத்து நைஸாக மிக்ஸியில் அரைக்கவும். பின்னர் கடைசியில் தேங்காய்த் துறுவல், வெல்லம் சேர்த்து அரைத்து எடுக்கவும். ஏலம் சேர்த்துக் கரைத்துக் கொள்ளவும். வாணலியில் எண்ணெய் வைத்துக் கரண்டியால் எடுத்து ஊற்றி இருபுறமும் திருப்பிப் போட்டு எடுத்து இரண்டு கரண்டியால் அழுத்தி எண்ணெய் வடியவிட்டு எடுத்துத் தட்டில் வைக்கவும். நான்கு நாட்கள் ஆனாலும் கெடாது.

— கமலா வியாசராவ்

---

A) Advanced Diploma in Construction Management Leading to B.Tech. (Construction Management)

B) Advanced Diploma in Water Resources Leading to B.Tech. Civil. (Water Resources Engg.)

இது இரண்டு வருட படிப்பு. இதை முடித்த பிறகு அடுத்த இரண்டு வருடம் படிக்க வேண்டும். அது முடிந்தவுடன் பி.டெக் டிகிரி கிடைக்கும்.

தகுதி : Diploma in Civil Engg. or Agricultural Engg. and Employed.

இது சம்பந்தமாக விளம்பரம் ஜூலை மாதத்தில் பேப்பரில் வெளிவரும்.

விண்ணப்ப படிவம் அனுப்ப கடைசி நாள். 30 செப்டம்பர்.

போன வருடம் வரை நுழைவுத் தேர்வு கிடையாது. மேலும் விபரமறிய தொடர்பு முகவரி :

The Regional Director,
IGNOU Regional Centre, Arulagam,
133, Chamiers Road, Nandanam, Chennai - 600 035.

(or)

The Director (Student Registration Evaluation) Indira Gandhi National Open University, Maiden Garhi, New Delhi - 110 068.

— இ. கார்த்திகேயன், அருணாசலப் பிரதேசம்.

**N**ational Small Industries Corporation Ltd., இந்த கார்ப்பரேஷனிலுள்ள புரோட்டோடைப் டெவலப்மெண்ட் மற்றும் டிரெயினிங் சென்டர் (Proto type Development and Training Centre) சுமார் 20க்கும் மேற்பட்ட டிரெயினிங் கோர்சுகளை அளிக்கிறது. பெண்களுக்கான கோர்சுகளும் உள்ளன. விவரங்களுக்கு Guindy Industrial Estate, Ekkaduthangal, Chennai - 600 097 என்ற விலாசத்திற்கு எழுதிப் பெறலாம்.

Central Institute of Plastics Engineering and Technology (CIPET), Guindy, Chennai - 600 032. பயிற்சி வகுப்புகளை நடத்துகிறது.

— ராஜி.

**பி**.ஏ., பி.எஸ்ஸி முடித்த மாணவர்கள் எம்.ஏ., எம்.எஸ்ஸி., எம்.பி.ஏ. என்று தங்கள் கல்வி நிலையை மேம்படுத்தலாம். ஆனால் பி.பி.எம் (Bachelor of Business Management) படித்த மாணாக்கர்களுக்கு என்று இப்போது எம்.எப்.டி. (M.F.T. Master of Foreign Trade) என்ற பாடப் படிப்பு அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது. டெல்லியில் N.I.F.T.-ல் இதைக் கற்கலாம். 2 வருடங்களுக்கு முன் பூனாவில் சிம்பயாஸிஸில் (Symbiosys Institute of Foreign Trade) இந்தக் கல்விமுறை ஆரம்பிக்கப்பட்டது. கல்வியின் தரம் மிக உயர்ந்ததாகவும், மதிப்பெண் அதிகம் பெற்று தேர்ச்சி அடைந்தவர்களுக்கு, கட்டணத் தொகை மிகக் குறைவாகவும் உள்ளது. ஏதேனும் தொழிலகத்தின் சிபாரிசு மூலமோ அல்லது வெளி நாட்டில் வாழும் இந்தியர்களின் சந்ததிகளாகவோ இருந்தால், அதிகக் கட்டணம் கட்டி சேரும் வாய்ப்பு உள்ளது. இரண்டு வருட படிப்பு, தங்கும் வசதி உண்டு. வாரத்தில் ஏழு நாட்களும் படிக்க வேண்டி இருந்தாலும், படிப்பை முடிக்கும் தறுவாயில் பல நிறுவனங்கள் நேரடியாக மாணவர்களைத் தேர்வு செய்து வேலை அளிக்கின்றன. நுழைவுத் தேர்வுக்குக் குறைந்தது ஆறுமாத காலமாவது படித்தல் தேவை.

— கீதா கல்யாணம், கோயம்புத்தூர் - 4.

# உங்கள் வளமான எதிர்காலத்திற்கு
# எங்கள் விசேஷ சேமிப்புத் திட்டம்

## சில்வர் டெபாசிட் திட்டம்



இன்றே எங்களிடம் ஒரு டெபாஸிட்டைத் துவக்கி,
வளமான மகிழ்ச்சியான வருங்காலத்தை எதிர்நோக்குவீர்

**EXPRESS**
FINANCIAL EXCHANGE LIMITED

பாங்க் ஆப் அமெரிக்காவின் சார்பு நிறுவனம்

- வாகனங்களுக்கான கடன்கள்
- பங்குகள் மீதான கடன்கள்

அங்கீகரிக்கப்பட்ட டீலர் அமெரிக்கன் எக்ஸ்பிரஸ் டிராவலர்ஸ் செக்குகள்

பதிவு அலுவலகம்: நெ. 9, அட்வேல் டவர், தெற்கு போக் சாலை, சென்னை-600 017.
போன்: 4340325, 4340329, 4341403, ஃபாக்ஸ்: 4341518.

• சென்னை • ஹைதராபாத் • விஜயவாடா • விசாகப்பட்டினம் • பெங்களூர் • திருச்சி
• கும்பகோணம் • கோயம்புத்தூர் • பாண்டிச்சேரி

1996 மார்ச் 4ந் தேதி எகனாமிக் டைம்ஸில் வெளியான எமது சட்ட பூர்வ விளம்பரத்தைத் தொடர்ந்து இந்த விளம்பரம் வெளியாகிறது.

Helios & Matheson

# வாஸ்து சாஸ்திரம்

நாகரீக மாற்றங்களின் காரணமாகவும், வேதங்களை மனிதன் மறந்த தினாலும், விஞ்ஞான வளர்ச்சியே மனிதனின் தனிப்பட்ட திறன் என்றும் கருதி எல்லா துறைகளிலும் உள்ள இயற்கை விஞ்ஞானத்தை நம்முடைய அஞ்ஞானத்தால் மறந்தோம். ஒவ்வொரு துறையிலும் உள்ளது போல் கட்டட கலையிலும் நாம் நம் இயற்கை விஞ்ஞான சாஸ்திரமாகிய வாஸ்துவை மறந்து கட்டடத்தின் உயரம், கம்பீரம், அழகு இவைகளில் மட்டும் கவனம் செலுத்தி கட்டடங்களைக் கட்டி அதில் வசிக்கும் மக்களுக்கு தோல்வி, மனச்சோர்வு, வியாதி, சந்தோஷமின்மை ஆகியவற்றை நம்மை அறியாமலேயே கொடுத்துக் கொண்டிருக்கிறோம்.

நாகரீகம் வளர்ந்த இந்த யுகத்தில் பெரு நகரங்களில் இன்று அடுக்கு மாடி கட்டடம் மட்டும்தான், நடுத்தர மக்களின் கனவை நினைவாக்கிக் கொண்டிருக்கிறது. இப்படி கட்டப்படும் அநேக அடுக்குமாடி கட்டடங்கள் இன்று வாஸ்து என்பது என்ன என்று அறியாமலேயே கட்டப்பட்டிருக்கின்றது. கட்டடம் என்பது செங்கற்கள், மணல், சிமெண்டினால் மட்டும் கட்டப்படுவதில்லை. மனிதனின் வாழ்வையே பிரதிபலிப்பதற்காகவும், சிறக்கச் செய்வதற்காகவும் இயற்கை விஞ்ஞானமாகிய வாஸ்துவையும் சேர்த்துக் கட்டுவதாகும். நம்முடைய வீடு இப்படி கட்டப்பட்ட அடுக்கு மாடி கட்டடத்தில் இருக்கின்றதா? அறியாமை என்பது மனிதனின் தவறு. தவறுகளை திருத்திக் கொள்வோம். முதலில் நம்முடைய அடுக்குமாடி கட்டட வீடு கட்டப் பட்டுள்ள நிலத்தின் அமைப்பை நாம் அறிந்து கொள்வோம். இது அடுக்கு மாடி கட்டடத்திற்கு மட்டும் அல்லாமல் தனிப்பட்ட வீடுகளுக்கும் பொருந்தும். கீழே கொடுக்கப் பட்டுள்ள நிலத்தின் மாதிரி வரை படங்களில் தெளிவு பெறுவோம்.






மேலே குறிப்பிட்டுள்ளது போல் எட்டு வகையில் நாம் நம்முடைய கட்டடம் கட்டப்பட்டுள்ள நிலங்களை பிரிக்கலாம். மேலும் அதில் இரண்டு இரண்டு படங்களாக நான்கு திக்குகளையும் தெரிந்து கொள்ளலாம். முதலில் இந்த இடத்தின் அமைப்பின் பலனிலேயே நாம் 60% பிரச்னைகளில் இருந்து விடுபட முடியும்.

AB என்ற இரு படங்களையும் பார்க்கின்ற பொழுது அவைகள்

**பி.ஜே. ரவிராஜ்**

இரண்டும் வட கிழக்கு மூலையாகிய ஈசான்யம் கிழக்கு பாகமாக A படத்திலும், வடக்கு பாகமாக B படத்திலும் வளர்ந்துள்ளது. இப்படி இருக்கும் நிலத்தில் கட்டப்பட்டுள்ள இடம் மிகவும் நன்றாக இருக்கும். எல்லாவகை வளர்ச்சியும் பொருளாதார மேம்பாடும் ஏற்படும்.

CD என்ற இரு படங்களையும் பார்க்கின்ற பொழுது அவைகள் இரண்டும் தென் கிழக்கு மூலையாகிய அக்னி C படத்தில் கிழக்கு பக்கமாகவும், D படத்தில் தெற்கு பகுதியிலும் வளர்ந்துள்ளது. இப்படி வளர்ந்துள்ள இடத்தில் அதிகப்படியான செலவுகளும், பண நஷ்டங்களும், மான அவமானங்களும் ஏற்படும்.

EF என்ற இரு படங்களையும் பார்க்கின்ற பொழுது அவைகள் இரண்டும் தென் மேற்கு மூலையாகிய இராட்சச மூலையில் வளர்ந்துள்ளது. E படத்தில் தெற்காகவும், F படத்தில் மேற்காகவும் வளர்ந்துள்ளது. இப்படி வளர்ந்துள்ள இடத்தில் விபத்துக்களும், உடல் நிலை பாதிப்புகளும், தீராத வியாதிகளும் ஏற்படும்.

GH என்று இரு படங்களையும் பார்க்கின்ற பொழுது அவைகள் இரண்டும் வட மேற்கு மூலையாகிய வாயு மூலையில் வளர்ந்துள்ளது. G படத்தில் வடக்கு நோக்கியும் H படத்தில் மேற்கு நோக்கியும் வளர்ந்துள்ளது. இப்படி வளர்ந்திருந்தால் தொழில் நஷ்டம், தரித்திரம், பொருள் நஷ்டங்கள் ஏற்படும்.

AB என்ற படத்தைத் தவிர மற்ற இடங்களில் காட்டப்பட்டுள்ள வளர்ந்த பகுதிகள் நன்மைகள் செய்ய கூடியவைகள் அல்ல. இதை நாம் நிச்சயமாக சரி செய்து விட முடியும். படத்தில் காட்டியுள்ளது போல் நிலத்தை சதுரமாகவோ செவ்வகமாகவோ மாற்றிக் கொள்ளலாம்.

இவைகளுக்கு கிணறு, ஆழ்துளை கிணறு, அடி நிலை தொட்டி போன்றவை நான் முன்பு எழுதியது போல் வட கிழக்குப் பகுதியிலேயே வரவேண்டும். இதில் மாற்றங்கள் இருந்தால் அதனால் என்ன விளைவுகள் எல்லாம் ஏற்படும் என்பதனை கடந்த இதழ்களில் விரிவாக குறிப்பிட்டிருந்தேன்.

நாம் மனை கட்டிய பின்புதான் மனை அடி சாஸ்திரத்தின் பலன்கள் நமக்கு ஏற்படுகின்றது. இந்த மனைக்கு அடியில் இருக்கும் நிலம் நமக்கு அதன் நல்ல பலனை அடைய நாம் சிறந்த முறையில் திட்டமிட்டு கட்ட வேண்டும். இட நெருக்கடியின் காரணமாகவோ, அல்லது சிக்கனத்தின் காரணமாகவோ, சாஸ்திரத்தை மறந்து கட்டப்பட்ட வீட்டில் தொல்லைகள்தான் மிஞ்சும்!

நம் கண்களுக்குப் புலப்படாத பஞ்ச பூதங்கள் நம்மை அவைகள் காக்கும் வகையில் அடுக்குமாடி கட்டடங்களை தெளிவுபட நிச்சயமாகக் கட்ட முடியும். இன்று பலர் கண்ணாடி பிரதிபலிப்பாக வீட்டை கட்டி எதிர் மறையான விளைவுகளையே மக்களை சந்திக்க செய்கின்றனர். இதைக் குறித்து ஏற்கெனவே கட்டப்பட்டுள்ள வீட்டில் வசிப்பவர்களுக்குக் குறைகள் இருக்கும். நாம் முயற்சித்தால் இப்பொழுது இருக்கும் குறைபாடுகளை அதிகபட்சமாக குறைத்து விடலாம். மாற்ற முடியாத குறைபாடுகளையும் கண்ணாடிகளின் பிரதிபலிப்பின் மூலம் மாற்றங்களையும் கொண்டு வரலாம். இது தனிப்பட்ட ஒவ்வொரு வீட்டையும் குறித்த விஷயமாகும். பொதுவான விஷயங்களை அந்த அடுக்கு மாடியில் வசிக்கும் அனைவரும் ஒன்று சேர்ந்து மாற்றங்களை கொண்டு வரலாம். பொதுவான குறைபாடுகள் அந்த கட்டமைப்பில் உள்ள அனைவரையுமே பாதிக்கும் என்பதனை நாம் மறந்து விடக் கூடாது.

வருகின்ற இதழில் மேலும் தெளிவு பெறும் வகையில் விளக்கப்படங்களுடன் அறிந்து கொள்ளலாம். மேலும் இது விஷயமாக தெளிவு பெற ஒவ்வொரு மாதமும் ஒன்றாம் தேதி முதல் ஐந்தாம் தேதி வரையில் சென்னையில் 8540084-லும் ஆறாம் தேதி முதல் மாதக் கடைசிவரை கோவை 577907-ல் தொடர்பு கொண்டு நேரம் குறித்துக் கொண்டு நேரில் சந்திக்கலாம்.

*(தொடரும்)*

---

புழுங்கலரிசி ஒரு டம்ளர், பச்சரிசி ஒரு டம்ளர் இரண்டையும் ஊறவைத்து அதனுடன் நான்கு தக்காளி, பச்சைமிளகாய், இஞ்சி, பெருங்காயம், கொத்தமல்லி எல்லாவற்றையும் சேர்த்து மிக்ஸியில் அரைத்து (காலையில்) சாயந்திரம் தோசையாக வாருங்கள். எண்ணெயும் அதிகம் விட வேண்டாம். சிக்கனமான ஆனால் ஆரோக்கியத்திற்கு ஏற்ற தோசை.

— வித்யாபாலசுப்ரமணியம்



# பதினேழின் உலகம்!



• கவிதா

**'மங்கையர்' கைகளில் 'மங்கையர் மலர்' மலர ஆரம்பித்து 17 ஆண்டுகள் ஆகிவிட்டன. அதனை நினைவு படுத்தும் விதத்தில் இனிக்கும் '17' வயதிலிருக்கும் இளம் பெண்களிடம் நடந்து முடிந்த ஆண்டான '96 அவர்களுக்கு எப்படி இருந்தது? குடும்பம், நண்பர்கள் பற்றிக் கேட்டோம் –**



• இந்துமதி

## 'மாறியது நெஞ்சம்'

**வ**ருடம் தவறினாலும் படிப்பிற்கான 'மெரிட்' அட்டையைத் தவறாது தட்டிச் செல்லும் மௌஷ்மி வித்யா மந்திர் பள்ளியில் 12-ம் வகுப்பு மாணவி.

"போன வருட இறுதியிலிருந்து ஒரு பெரிய வித்தியாசம் என்னுள் ஏற்பட்டதை மறப்பதற்கில்லை. எங்கள் பள்ளி ஆண், பெண் இருவரும் சேர்ந்து படிக்கும் 'கோ-எட்'. ஏனோ பதினோராம் வகுப்பு வரை நான் மாணவர்களிடம் பேசுவதே ரொம்பத் தவறான செயல் என்று நினைத்து கொஞ்சம் ரிசர்வ்டாகவே இருந்து வந்தேன். பேச்சு என்று வந்தாலும் அவை படிப்பு சம்பந்தமாகவே முடிந்து விடும். அடுத்த வருடம் பள்ளியை விட்டுச் சென்று விடுமோமே என்கிற தாபமோ என்னவோ என்னைத் தளர்த்திக் கொண்டு மாணவர்களிடம் சுதந்திர உணர்வோடு பழக ஆரம்பித்தேன். பிறகுதான் புரிந்தது மனதில் விகல்பமின்றி



• சாருகேசி



• மௌஷ்மி



பள்ளி செல்லும் பிள்ளைகளுக்கு பேன் தொல்லை தீராத பிரச்னை. சீதாப் பழத்தின் விதைகளை வெயிலில் உலர்த்திப் பொடி செய்து நல்லெண்ணெயில் போட்டுக் காய்ச்சி தலைக்குத் தேய்த்துக் குளித்தால் பேன் தொல்லை நீங்கும். சீயக்காயோடும் இவ்விதைகளை சேர்த்து அரைத்து வைத்துக் கொள்ளலாம்.

— நளினா தேனி

பொது இடத்தில் எப்படி பழக வேண்டும், மரியாதையான வார்த்தைகளை உபயோகிக்க வேண்டும் என்பதெல்லாம். இந்த நட்பு முறை எனக்குக் கற்றுத் தந்தது என்றால் அது மிகையில்லை. எனது தோழிகளிடம் அடிக்கடி சண்டையிட்டு வந்த நான் ஓரளவு மாறி இருக்கிறேன். நன்றாக படிப்பதாலோ என்னவோ 'தலைக்கனம்' உண்டு என்பதை உணர்ந்திருக்கிறேன். தவிர்க்க முயற்சிக்க வேண்டும்.

எங்கள் குடும்பம் - பெற்றோர்களுடன் உறவு முறை என்று குறிப்பிட்டுச் சொல்ல வேண்டுமானால் என் அம்மாதான் எனக்கு எல்லாமே. நான் இன்றைக்குப் படிப்பில் ஓரளவு தேறி இருக்கிறேன் என்றால் காரணம் என் அம்மா. கூட்டுக் குடும்பத்தில் மிகவும் சிரமப்பட்டு விட்டதால் நான் அப்போது மிகச் சிறியவளானாலும் அந்த வடுக்கள் இன்னும் என் மனதிலிருந்து மறையவில்லை. என்னுடைய எதிர்கால ஆசை, குறிக்கோள் எல்லாமே நான் பெரிய ஆளா வந்து நிறைய சம்பாதித்து என் அம்மாவை ரொம்ப ரொம்ப சந்தோஷமாக வைத்துக் கொள்ள வேண்டும் என்பதுதான். இந்த நினைவை ஒவ்வொரு கணமும் மறப்பதே இல்லை. எதற்கெடுத்தாலும் என் தோழிகளை நண்பர்களைத்தான் மிக முக்கியமானவர்கள் என்று நினைத்துக் கொண்டிருந்த நான் இந்த வயதில் முதன் முறையாக அவர்களைவிட நம் பெற்றோர்கள்தான் நமக்கு எல்லாமே என்பதை உணர்ந்து கொண்டேன்.

வெளி உலகில் குறிப்பாக அரசியல் விஷயங்கள், சமூக மாறுதல்கள் என்னை அவ்வளவாக பாதித்ததில்லை. கல்யாணத்தைப் பற்றி கனவு கண்டதுண்டு. ஜனத் தொகை எங்கோ

போகிறதே, ஒரு குழந்தைதான். ஏன் சிரிக்கிறீர்கள்? தப்பாக ஏதாவது சொல்லிவிட்டேனா?"

## இந்தியா இங்கிலாந்து ஆகிவிடாதா?

மீனாட்சிக் கல்லூரியில் இரசாயனப் பிரிவில் முதலாம் ஆண்டு படிக்கும் சாருகேசிக்குப் போன ஆண்டு 'உருக்குகிற' ஆண்டாகத்தான் திகழ்ந்ததாம். பள்ளி இறுதித் தேர்வு தலையெழுத்தை நிர்ணயிக்கும் மதிப்பெண்கள், கல்லூரியில் இடம், பிடித்த பிரிவு இப்படி எல்லாமே படிப்பைச் சுற்றித்தானாம். '96 முழுவதும்.

"பாடம் நடந்ததா அன்றே படித்து முடித்தோமா? இந்த நல்ல பழக்கமெல்லாம் எனக்குக் கிடையாது. எல்லாமே கடைசி நிமிடத்திற்குத் தள்ளிப் போடுவதில் கெட்டிக்காரி. பள்ளி இறுதித் தேர்விற்காக ஏதோ ஒப்பேற்றினேன். நல்ல மதிப்பெண்கள் வரும் என்கிற நம்பிக்கையே இல்லை. நான் எழுதிய 'அழகு' எனக்குத்தானே தெரியும். வேண்டாத கடவுள் இல்லை. இந்த ஒருமுறை மன்னித்து நல்ல மதிப்பெண்கள் தந்துவிடு என்று கெஞ்சாத நாளில்லை. முடிவு வந்தது. ஆச்சர்யம் நான் நினைத்துக் கூடப்பார்க்காத 86% மதிப்பெண்கள். இனிமே இப்படி கடவுளுக்கு தொந்தரவு கொடுக்கக் கூடாது. முறையாக ஒழுங்காக படிக்க வேண்டும் என்று முடிவிற்கு வந்தது '96ல்தான். ஏனெனில் அப்போது எனக்கிருந்த 'மன இறுக்கம்' வார்த்தைகளால் கூற முடியாது. எதிர்கால திட்டம் ஐ.ஐ.டி.யில் முதுநிலை விஞ்ஞானப் படிப்பு. இப்பொழுதே 'டியூஷன்' செல்ல ஆரம்பித்து விட்டேன்.

என்னுடைய நட்புலகம் மிகச் சிறியது. யாரிடமும் நெருக்கமாக பழக மாட்டேன். ஆண் சிநேகர்கள் - அவர்களுடன் பழகுவதை நான் தவறாகக் கருதுவதில்லை. இன்னும்... பிராணிகள் வதை, குழந்தை தொழிலாளர்கள் என்னை மிகவும் பாதித்த விஷயங்கள். சொல்லப் போனால் போன வருஷம் செயல் முறை தேர்விற்காக எலியைக் கூறு செய்ய நேர்ந்தது. மயக்க மருந்து கொடுத்து சாகாத நிலையில் அதனைக் குத்திக் கிழிக்கும் செயல் அராஜகமாகத் தோன்றியது. நண்பர்களிடம் தோழிகளிடம் இதைப் பற்றி மிகவும் வருத்தப்பட்டுப் பேசியபோது அவர்கள் அத்தேர்வில் வரும் மதிப்பெண்களுக்காக கவலைப்பட்டுக் கொண்டிருந்தார்கள். ஏதோ ஒரு உந்துதலில் என் கைப்பட எனது உணர்வினை கடிதத்தில் கொட்டி ப்ளூக்ராஸ் சங்கத்திற்கு அனுப்பினேன். பலன் பூஜ்ஜியம். என்னை மாதிரியே இங்கிலாந்திலும் ஒரு மாணவி இதே மாதிரி உணர்வினால் அங்கிருக்கும் பிராணிகள் வதை சங்கத்திற்கு



**இரண்டு பெரிய அப்பளத்தை எடுத்து உருளைக்கிழங்கு ஃபிங்கர் சிப்ஸுக்கு வெட்டுவது போல் வெட்டிப் பொரித்தேன். 'புதுமையாக இருக்கே' என வேஸ்ட் செய்யாமல் ஆவலோடு சாப்பிட்டார்கள் குடும்பத்தவர்கள்!**

**— லக்ஷ்மி ஸ்ரீனிவாசன்**

எழுதிவிட அவர்கள் உடனே நடவடிக்கை எடுத்தார்களாம். செய்தியில் படித்தேன். இந்தியா இங்கிலாந்து போல மாறுமா?"

குடும்ப வாழ்க்கையில் என்று எடுத்துக் கொண்டால் மற்ற டீனேஜ் மாணவிகளுக் கிருக்கும் அதே பிரச்னை எனக்கும் என் பெற் றோர்களிடமுண்டு. ஆண் நண்பர்கள் இருப் பதை தவறாக நினைக்கும் பெற்றோர்கள் இங்கு அதிகம். பெண்களை விட ஆண்நண்பர்கள் எவ்வளவோ மேல். பொறாமை, கோபம், குத்தல் பேச்சு எல்லாமே அங்கே மைனஸ். என்னைக் கேட்டால் இன்றைய பெற்றோர்கள் ஒரு பரந்த மனப்பான்மையோடு குழந்தைகளுக்கு சுதந்திரம் கொடுப்பவர்களாக அவர்களை முற்றிலும் நம்புகிறவர்களாக மாறுவது மிக அவசியம். எதிர் காலத்தில் பிரச்னை என்பதே இருக் காது."

## பகைமை நிறைந்த நினைவுகளே

எஸ்.ஐ.ஈ.டி. கல்லூரியில் முதலாம் ஆண்டு பி.காம் படிக்கும் இந்துமதி, 'காமா'ன டைப் பிள்ளை. செம 'கலகல' பேச்சு மடைதிறந்த வெள்ளம். '96 முழுதும் இவருக்கு படிப்பு, படிப்பு, படிப்புத்தானாம்.

"நான் படித்தது பி.எஸ். ஹையர் செகண்டரி பள்ளி. பள்ளி இறுதி தேர்வு என்ப தால் போன வருடம் முழுவதும் 'டிரில்' வாங்கி விட்டார்கள். நல்ல மதிப்பெண் கிடைத்தது. மீனாட்சி கல்லூரியில் தோழிகள் அனைவரும் 'கொத்தாக' ஒரே பிரிவில் சேர திட்டமிட் டோம். இடம் கிடைத்தும் பயனில்லை. காரணம் எனது தந்தை. சிங்கப்பூரிலிருக்கும் அவர், வீட்டிற்கு அருகிலிருக்கும் கல்லூரியே போதும் என்று வற்புறுத்தியதால் இங்கு இன்று நான் மாணவி. இந்த வருடம் எனது தோழி களைப் போலல்லாது கொஞ்சம் ரிலாக்ஸ்டாக இருக்கிறேன், கல்லூரி விழா, விளையாட்டு என்று மனதிற்கு மாறுதல்தான். அப்பாவிற்கு நன்றி சொல்கிறது என் மனம்.

எனது 'நட்புலகம்' கொஞ்சம் கடினமானது தான். தோழிகளுடன் எதை ஆரம்பித்தாலும் எங்கு சென்றாலும் முடிவில் மிஞ்சுவது சண்டைதான். இருந்தாலும் இன்றைக்கு சொந்த வீட்டிலிருக்கும் நான் எனது வாடகை வீட்டுத் தோழிகளை மறக்க இயலவில்லை.

அப்பா என்னை அதிகம் புரிந்து கொண் டவர். எடுத்துச் சொன்னால் தட்டமாட்டார். அம்மா அப்படியில்லை. எனவே விட்டுக் கொடுப்பவள் நான்தான். ஆண் நண்பர்களா? மூச். கொஞ்சம் ஆசாரமான குடும்பம். எகிறி குதிப்பார்கள். ரொம்ப கட்டுப்பாட்டுடன் வளர்ப்பதே குழந்தைகளை தவறு செய்யத் தூண்டி விடும் என்பதை பெற்றோர்கள் உணர வேண்டும். எதிர்காலத் திட்டம் எம்.பி.ஏ. முடிக்க வேண்டுமென்பதுதான்."

## அக்கா இடத்தில் நான்!

ரோஸரி மெட்ரிகுலேஷன் பள்ளியில் படிக் கும் மாணவியான சுமிதா தன்னை 'முன் யோசனை இல்லாதவள்' என்று கூறிக் கொள் கிறார். படிப்பில் புலி. தந்தை ஐ.ஐ.டி.யில் பேரா சிரியர். அம்மாவும் பள்ளி ஆசிரியை. சுமிதா வின் இலக்கு பொறியியல் படிப்பு. புத்தகங் களுடன்தான் முழு வருடமும் கழிந்தது என் கிறார். அரசாங்கம் பாடத்திட்டத்தையே சிறிது மாற்றி அமைத்தால் நல்லது என்று கூறி எரிச் சலுமடைந்தார்.

'96-ம் வருடம் என்னை பொறுத்தவரை வருத்தம் + சந்தோஷம் கலந்த ஆண்டு. பள்ளி

**நான் ஒரு முறை பாதுஷா செய்தபோது ஜீரா கனிசமாக மீந்து விட்டது. கொஞ்சம் நீர் சேர்த்து அடுப்பில் வைத்து கெட்டிப் பாகை இளக்கினேன். இட்லிக்கு அரைக்கும் போது கொஞ்சம் உளுத்தம் மாவு எடுத்து அத்துடன் ஒரு கை மைதா, ஒரு கை கடலை மாவு சேர்த்து தோசை மாவு பதத்தில் கரைத்து அடுப்பில் வாணலியில் எண்ணெய் ஊற்றி பூந்திக் கரண்டியில் தேய்த்து; வெந்ததும் அரித்தெடுத்து ஜீராவில் போட்டுக் கிளறினேன். அங்கூரா பூந்தியும் ரெடி.**

— நளினா தேவி



## புகழ்பெற்ற ஜோதிஷர், மந்திர சாஸ்திர நிபுணர் பண்டித காழியூர் ம. பத்மநாபன்.



எனது தந்தையார் அடியேனுக்கு மந்திரோபதேசம் செய்யும் காட்சி.

பிரபல ஜோதிஷர் **(பண்டித காழியூர் பத்மநாபன்)** காழியூர் ஸ்ரீனிவாசாச்சாரியாரின் மூத்த புதல்வரும், ஜோதிஷ மந்திர சாஸ்திரங்களில் 45 வருட காலம் நன்கு தேர்ச்சியும், ஆசீர்வாதமும் பெற்றவரால், மகத்தான சக்தி வாய்ந்த யந்திரங்கள், சக்கரங்கள் வெள்ளியில் தயாரிக்கப்படுகின்றன. மகா லெக்ஷ்மி கவசம் ரூ. 250/-, மகா சுதர்சன யந்திரம் ரூ. 250/-, லக்ஷ்மி நரசிம்ம கவசம் ரூ. 350/-, தனாகர்ஷண யந்திரம் ரூ. 350/-, மகா சுதர்சன சக்கரம் ரூ. 550/- மஹாலக்ஷ்மி சக்ரம் ரூ. 550/-. இவை தவிர அநேக விதமான யந்திரங்களும், கவசங்களும், (விசேஷ பூஜா க்ரமப்படிக்கு) தயாரித்து அனுப்பப்படும்.

வெளிநாட்டு நேயர்கள் இரட்டிப்புத் தொகை DD மூலம் அனுப்ப வேண்டும். தபால் செலவு ரூ. 50/-

கம்ப்யூட்டர் ஜாதகம் தமிழ் / ஆங்கிலம் ரூ. 50/- ஜாதகத்தின் பொதுப்பலன்களை நேரில் சொல்வதற்கு ரூ. 50/- ஆயுள் பலன் (வருஷம், மாதம் தேதி, நேரம், ஊர்) ரூ. 250/-.

மூன்று கேள்விகளுக்கு ரூ. 50/-. வேண்டுவோர் கடிதத் தொடர்பு கொண்டு விவரம் அறிந்து பணம் அனுப்பி சகல நன்மைகளும் அடைவீர்களாக. நேரில் - காலை 8 to 12 noon

பிரபல ஜோதிஷர் பண்டித காழியூர் பத்மநாபன்,
"தபோநிதி"
நெ. 5, வித்யோதயா முதல் மெயின் தெரு,
தபெ எண் : 1411, தி.நகர்,
மதராஸ் 600 017. Ph. 826 3814
தென் இந்தியா (கிளைகள் எதும் கிடையாது)

**முக்கிய கவனிப்பு :** முன் பதிவு செய்து கொள்வது அவசியம். தபால் மூலம் வரும் எல்லா கடிதங்களும் வெகு கண்டிப்பாக பரம இரகசியமாக வைக்கப் படுகின்றன. வீட்டில் கிரகதோஷம் மற்றும் எந்த விதமான தோஷங்களும் பாதிக்காமலிருப்பதற்கு, சுதர்சன ஹோமம், மகா சுதர்சன சக்ரம் பிரதிஷ்டை செய்து தரப்படும். உள்ளூர் வாசிகளுக்கு மட்டுமே செய்யப்படும். நேரிலோ தபால் மூலமோ தொடர்பு கொள்ளலாம்.

---

# ஸ்ரீ சக்தி எல்.பி.ஜி. இப்பொழுது அரசாங்க விலைக்கு சமமாக* கிடைக்கிறது !!!

SHAKTI GAS
THE NO.1 GAS



ஸ்ரீ சக்தி எல்.பி.ஜி. இந்தியாவின் மிகப்பெரிய மேலும் மிகவும் ஒருங்கிணைந்த தனியார்துறை நிறுவனமாகும்.

காகினாடா, ஹைதராபாத் மற்றும் பெங்களூரில் உள்ள அதன் நவீன தொழிற்கூடங்களும், காகினாடா மற்றும் மங்களூரில் உள்ள சொந்தமான சமையல் எரிவாயு இறக்குமதி செய்யும் வசதியும், உங்களுக்கு குறித்த நேர டெலிவரி செய்வதற்கு உறுதி செய்கிறது.

தனியார்துறையில் 1,50,000 மேல் திருப்தியடைந்த வாடிக்கையாளர்களின் பேராதரவைப் பெற்றது ஸ்ரீ சக்தி எல்.பி.ஜி.




**ஸ்ரீ சக்தி எல்பிஜி லிமிடெட்**
தலைமை அலுவலகம் : ஏசியாடிக் சதுக்கம்,
பேகம்பேட், ஹைதராபாத் - 500 016.
Tel: 869416/17/18/19 Fax: 814411
பிராந்திய அலுவலகம் : 24, உ... ரோடு,
காந்திநகர், பெங்களூர் - 560 009.
Tel: 2265166 Fax: 2265679

*இந்தியாவின் மிகப்பெரிய தனியார்துறை எல்.பி.ஜி. நிறுவனம்.*

SHAKTI GAS

- வனிதா சக்தி திட்டத்தின்கீழ் மட்டும்.
- ஸ்ரீ சக்தி சமையல் எரிவாயு இணைப்பு வழக்கமான விலையிலும் கிடைக்கிறது

*மேலும் விவரங்களுக்கு உங்கள் அருகாமையில் உள்ள ஸ்ரீ சக்தி எல்.பி.ஜி. டீலரை அணுகவும்*

இணைப்பு தொகை

Inayat Gas Company, Thiyagadurgam Post, Ph : 33220; ACS Gas, Dindigul, Ph : 24513; Sri Balambika Agency, Vellore, Ph : 25040.

---



கும்பகோணம் லயன்ஸ் நங்கையர்களின் குழந்தைகள் தினவிழா மற்றும் லயன்ஸ் நங்கையர் தினவிழா சமீபத்தில் கொண்டாடப்பட்டது.

குழந்தைகளுக்கு பேச்சுப் போட்டி, பாட்டுப் போட்டி, வினாடி வினா, ஓவியப் போட்டி, மாறுவேடப் போட்டி புதுக்கவிதைப் போட்டி போன்ற பலவித போட்டிகள் குடந்தை நகர அனைத்து பள்ளி மாணவ மாணவியர்களுக்கு நடத்தப்பட்டது. இப்போட்டி களில் கலந்து கொண்டு வெற்றி பெற்றவர்களுக்கு நங்கையர் விழாவில் பரிசுகள் வழங்கப்பட்டது.

விழாவின் சிறப்பு விருந்தினராக 'மங்கையர் மலர்' ஆசிரியர் திருமதி மஞ்சுளா ரமேஷ் கலந்து கொண்டார். அனுசூயா ஜானகிராமன், சுசிலா கலியமூர்த்தி, சீதாலட்சுமி வேம்பு, ரேவதி வெங்கடேசன், இந்திரா ராமன், திலகவதி ராஜகோபால், ஜெயம் வெங்கடராமன், கிரிஜா வெங்கடராமன், லலிதா பத்மசேனன் போன்ற பல லயன்ஸ் நங்கையர்களின் கூட்டு முயற்சியால் இவ்விழா சிறப்பாக நடந்தது.



முதல்வரிடம் நிறைய 'டோஸ்கள்' அனுபவித்த வருடம், தோழிகளிடம் அதிக நெருக்கம், பெற்றோர்களை புரிந்து கொள்ள ஆரம்பித்தது அனைத்துமே போன வருட அனுபவங்கள் தான். என்னை மிகவும் பாதித்த விஷயம் எனது தோழிகள் பெற்றோர்களை இழந்தது. வளரும் பருவத்திலிருக்கும் என்னைப் போன்றவர்களுக்கு பெற்றோர்களின் அரவணைப்பு எவ்வளவு முக்கியம் என்பதை அந்த தருணத்தில் உணர்ந்தேன். பெற்றோர்களுடன் அதுவரை எதற்கெடுத்தாலும் விவாதித்து வந்த நான் எனது தவறுகளை உணர ஆரம்பித்தேன்.

பெற்றோர்களுடன் அதிக நெருக்கமும் ஏற்பட்டது போன ஆண்டில்தான். காரணம் என் அக்கா நடன நிகழ்ச்சிக்காக மேலைநாடு சென்று விட்டதால் அதுவரை வெறும் கடைக்குட்டியாக குடும்பத்தில் மதிப்பிட்டு வந்த என்னுடன் என் பெற்றோர்கள் தங்கள் அனுபவங்களை, குடும்ப நிலவரங்களை பகிர்ந்து கொள்ள ஆரம்பித்தனர். நன்றி என் அக்காவிற்குத்தான் போய்ச் சேர வேண்டும். படிக்க வேண்டும் என்கிற அழுத்தம் என்னை மிகவும் பாதித்ததை சொல்லியே ஆக வேண்டும்.

ஆண் நண்பர்கள், சமூகத்தில் பழகுவது இவையெல்லாவற்றிலும் நான் போன வருடம் வரை 0. காரணம் எனக்கு அண்ணா, தம்பி கிடையாது. இரண்டு பேரும் பெண்கள் என்பதால் ஆண்களுடன் பழகியதே இல்லை. எங்கள் குடும்பத்தில் போன வருடம் நடந்த திருமணம், உறவினர் வீட்டு விருந்தோம்பல் ஓரளவு என்னை மாற்றியிருக்கிறது. எனது ஒன்றுவிட்ட அண்ணன்களுடன் இப்போதுதான் பழக பேச ஆரம்பித்திருக்கிறேன். என் அப்பா 'ஜாலி' டைப், அம்மா 'மூடி' டைப். அதனால் ஏதோ சமாளித்து வருகிறேன்.

ஆங்... அரசியல் பற்றி தோழிகள் நாங்கள் பேசாத நாட்கள் குறைவு. ஏதோ செய்ய வேண்டும் எதிர் காலத்தில் என்று எண்ணியதுண்டு. அந்த உணர்வு நிலைப்பது ஒரு நிமிடம்தான். உடனே வகுப்பு, படிப்பு கம்ப்யூட்டர் என்று அனைத்தும் எங்களை ஆக்கிரமித்து விடும். நான் மிகவும் வருத்தமடைந்த இன்னொரு விஷயம் பியானோவில் ஐந்து கிரேட் தேர்ச்சி பெற்ற எனது படிப்பின் பொருட்டு 6 வது கிரேட் தேர்விற்குச் செல்ல முடியாத நிலை. இதை என்றுமே என்னால் மறக்க முடியாது."

இளம் பெண்களிடம் நாம் எடுத்த சர்வேயின் படி பதினேழு எனும் வயது ஒரு மாற்றத்தை ஏற்படுத்த ஆரம்பிக்கும் வயதாக இருக்கிறது. படிப்பு 50% குடும்பம் 25% நட்பு 25% வெளி உலக செய்திகள் மாற்றங்கள் இவர்களை அதிகம் பாதித்ததாகத் தெரியவில்லை.

— கீதா மோஹன்

படங்கள் : ஜி. சுரேஷ்



## மாந்திரீகக் கதைகள்

துப்பறியும் கதைகள் விறுவிறுப்பு, திருப்பங்கள், த்ரில் கூட பயமும் கொள்ளவைக்கும் சுவாரஸ்யமான சிறுகதைகளை படைத்திருப்பவர் இருகூரான்.

பக் - 164 விலை ரூ. 30.00

## பேருக்கு ஒரு மனைவி!

புனிதன் தரும் இரண்டு குறுநாவல்கள்

பக் - 226 விலை ரூ. 42.00

*(இரண்டும் - மணிமேகலைப் பிரசுரம், த.பெ. எண்: 1447, 4, தணிகாசலம் சாலை, தி.நகர், சென்னை - 17)*

## ஐசுவரியம் தரும் அஷ்டலக்ஷ்மி

ஸ்ரீ மஹாலக்ஷ்மி அவதார மகிமை மற்றும் பூஜா விதானங்கள் என லக்ஷ்மியைப் பற்றிய அனைத்து விவரங்களும்.

பக் - 192 விலை ரூ. 30.00

*(குமரன் பதிப்பகம், 2, முத்து கிருஷ்ணன் தெரு, த.பெ. எண் : 6124, தி. நகர், சென்னை - 17)*

## கடற் கரைக் காதலர்

சங்க இலக்கியத்தின் பல சுவையான பாடல்களை விளக்குபவர் டாக்டர் தி. முத்துகண்ணப்பர்.

பக் - 148 விலை ரூ. 35.00

## இலக்கை அடைய என்ன செய்ய வேண்டும்?

வாழ்வில் முன்னேறுவதற்கான கட்டுரைகள். ஆசிரியர் - பி.சி. கணேசன்.

பக் - 114 விலை ரூ. 22.00

*(இரண்டும் - கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17)*

## புகழ்பெற்ற ஜோக்ஸ் - III

சிறுசிறு சம்பவங்களாக ஜோக்ஸ் சொல்பவர் - எ. சோதி.

பக் - 66 விலை ரூ. 10.00

*(நன்மொழிப் பதிப்பகம், 41, கங்கை வீதி, வசந்தநகர், புதுச்சேரி - 3)*

## மறுமலர்ச்சி கவிதைகள்

பல்வேறு நிலைகளில் தரம் குறைந்து கொண்டிருக்கும் சமுதாயம் மறுமலர்ச்சி பெறக் கவிதையால் ஆதங்கப்பட்டிருப்பவர் வலசை ப. கணேசன்.

பக் - 69 விலை ரூ. 18.00

## உரையாடல் மூலம் வெற்றி பெறுவது எப்படி?

- என்று யோசனைகள் கூறுபவர் வாசன்.

பக் - 72 விலை ரூ. 16.00

*(இரண்டும் நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட், 41-பி, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை - 98.)*

## உங்கள் ஜாதகப்படி என்ன தொழில் செய்யலாம்?

ஆசிரியர் - ஸ்வாமி சத்யநாராயணா

பக் - 80 விலை ரூ. 15.00

## நீங்களே ஜாதகம் கணிப்பது எப்படி?

ஜாதகம் தெரிந்து கொள்ள ஆசைப்படுபவர்களுக்குச் சொல்பவர் ஸ்வாமி முருகானந்தா.

பக் - 112 விலை ரூ. 20.00

*(இரண்டும் - மயிலவன் பதிப்பகம், 18, தெற்கு பெருமாள் கோவில் முதல் தெரு, வடபழனி, சென்னை - 21.)*

## புக் ஷெல்ஃப்

## உயிர்ப் பறவை

இரா. பகவானந்ததாசன் எழுதிய சிறுகதைத் தொகுப்பு. அன்றாட வாழ்வியலை சுவாரஸ்யமாகப் பின்னியிருக்கிறார்.

பக் - 164 விலை ரூ. 25.00

*(தமிழ்ப் புதுவை, 53, செங்குந்தர் தெரு, ஒர்லையன் பேட்டை, புதுச்சேரி - 605 005.)*

## ஸ்ரீநவக்ரஹ ஸ்தோத்திரம்

தொகுப்பு - ஸ்வாமி அபயானந்தஜிதாஸ். தவிரவும் ஆதித்யஹ்ருதயம், தமிழில் ஸ்தோத்திரங்கள்.

பக் - 48 விலை ரூ. 4.00

## சௌபாக்யம் தரும் மங்கல வ்ரதபூஜைகள்

விநாயகர் பூஜை முதல் கௌரி வ்ரத பூஜை போல பலவற்றின் செயல் முறைகள், மற்றும் ஸ்தோத்திரங்கள்.

பக் - 176 விலை ரூ. 10.00

### நீங்களும் திரைப்பட இயக்குநர் ஆகலாம்

திரைப்பட இயக்குநருக்குத் தேவையான செய்திகளைத் தருபவர் - விஜயகுமார்.

பக் - 224 விலை ரூ. 42.00

(மூன்றும் - இலக்குமி நிலையம், 53, கௌடியா மடம் சாலை, இராயப்பேட்டை, சென்னை - 14.)

### வாழ்க்கை அது நம் கையில்!

- என்று உற்சாகமாக மனோதத்துவ ரீதியாக விளக்குபவர் கமலா கந்தசாமி.

பக் - 100 விலை ரூ. 17.00

### வீட்டுக்கும் வியாபாரத்துக்கும் ஊறுகாய், சர்பத் ஸ்குவாஷ் வகைகள்.

116 வகையான சமையல் விதங்களைத் தருபவர் அ. ராம்கோபால்.

பக் - 128 விலை ரூ. 23.00

(இரண்டும் - நர்மதா பதிப்பகம், 16/7, ராஜாபாதர் தெரு, பாண்டிபஜார், தி. நகர், சென்னை - 17.)

### மனத்துள் புகுந்த மாயை

கிருஷ்ணகிரிவசந்தன் எழுதிய சிறுகதைத் தொகுப்பு. நடைமுறை வாழ்வின் பிரச்னைகளின் பிரதிபலிப்பாய் அமைந்திருக்கிறது.

பக் - 176 விலை ரூ. 33.00

(குமரிப் பதிப்பகம், 8, நீலா தெற்கு வீதி, நாகப்பட்டினம் - 1.)

### நோய் நொடியில்லாமல் குழந்தை வளர்ப்பு

இளம் தாய்மார்களுக்கு உதவியாக இருக்கும் நூல். ஆசிரியர் - தமிழ்மணி.

பக் - 128 விலை ரூ. 22.00

(கார்த்திகா பப்ளிகேஷன்ஸ், 18, தெற்கு பெருமாள் கோவில் முதல் தெரு, வடபழனி, சென்னை - 26.)

### நியாயம்

கொங்குமணம் கமழும் சிறுகதைத் தொகுப்பு. ஆசிரியர் - சௌந்தரா கைலாசம்.

பக் - 112 விலை ரூ. 16.00

### ஞானமலர்கள்

காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள் அருளிய கட்டுரைகள், பேட்டிகளின் தொகுப்பு.

பக் - 632 விலை ரூ. 80.00

(இரண்டும் - வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை - 17.)

---

## பல்ஸ் புலாவ்

**தேவையான பொருட்கள் :**

புழுங்கல் அரிசி - 1 ஆழாக்கு
து. பருப்பு - 2 டீஸ்பூன்
மஞ்சள் தூள் - ¼ டீஸ்பூன்
மிளகாய் வற்றல் - 3
ப. மிளகாய் - 2
சின்ன வெங்காயம் - நறுக்கியது சிறிது
தக்காளி - 2
சீரகம் - ½ டீஸ்பூன்
உப்பு, எண்ணெய் - சுவைக்கேற்ப



**செய்முறை :**

து. பருப்பை முதலிலேயே சிறிது தண்ணீரில் ஊறப் போடவும். சீரகத்தையும், மி. வற்றலையும் மையாக அரைத்துக் கொள்ளவும். வாணலியில் எண்ணெய் விட்டு கடுகு, கறிவேப்பிலை தாளித்து வெங்காயம், ப. மிளகாயையும் வதக்கவும். பிறகு குக்கரில் அரிசி, பருப்பு, அரைத்த விழுது, வதக்கிய வெங்காயம், தக்காளி, உப்பு, மஞ்சள் தூள் போட்டு 3½ ஆழாக்கு தண்ணீர்விட்டு, ஆவி வந்து 3 விசில் வந்ததும் நிறுத்தி விடவும்.

— ரேவதி சௌந்தர்

*அன்னையின் அணைப்பில்*

*அளவில்லா ஆனந்தம்...*

*வங்கியின் சேவையில்*

*வாடிக்கையாளர் பேரின்பம்...*

**தா**யின் கரிசனத்தோடு அந்த அறியாப் பருவத்தில் ஓடியாடி விளையாடிய நேரம்தான் எத்தனை இன்பம்...

சிட்டி யூனியன் வங்கி தரும் கனிவுமிகு சேவையில்தான் எத்தனை ஆனந்தம்! வாழ்வில் அந்த ஆனந்தம் நிலைக்க CUB தரும் சேமிப்புத் திட்டங்கள்தான் எத்தனை!




**சிட்டி யூனியன் பேங்க் லிட்.,**

பதிவு அலுவலகம் : கும்பகோணம் - 612 001.
மத்திய செலாவணி அங்கீகாரம் பெற்ற வங்கி

MCS / CUB / 1581 / 97

---

- சேமிப்புக் கணக்கு
- மாதாந்திர சேமிப்புத் திட்டம்
- நிரந்தர வைப்புத் தொகை
- ஸ்ரீசக்ரா திட்டம்
- VIP திட்டம்
- ரொக்கப் பத்திரங்கள்
- CUB ஸ்டாக் இன்வெஸ்ட்மெண்ட்
- NRI சேமிப்புத் திட்டம்
- வாமன விஸ்வரூப திட்டம்

# ஆபீஸிற்கு அவசரமாக அலங்கரித்துச் செல்லலாம்

பறக்கும் இந்த உலகில் ஆபீஸிற்கு ஐந்து நிமிடத்தில் அலங்கரித்துக் கொண்டு போக முடியுமா என 'தி விஸிபிள் டிஃபரன்ஸ்' என்ற பெயரில் தி. நகர் வித்யோதையா எதிர் தெருவில் பார்லர் வைத்திருக்கும் (தொ. 8254079) திருமதி வசந்தராவைக் கேட்டோம்.

"என்ன நீங்க, என் பார்லர் பெயரே 'தி விஸிபிள் டிஃபரன்ஸ்'தானே. சாதாரணமாக வீட்டில் தோற்றமளிக்கும் பெண் ஐந்து நிமிடத்தில் சிறிய 'மேக்-அப்'பின் மூலம் ஃப்ரெஷ்ஷாக மாற முடியும். அந்த டிஃபரன்ஸ் விஸிபிளாகத் தெரியும்" என்றவர்,

அதை நம் வாசகிகளுக்காகச் செய்தும் காட்டினார். முதலில் சாதாரணமாகத் தோற்றமளித்த பெண் கடைசியில் 'பளிச்' சென்று மாறினார். இங்கு புகைப்படங்களில் படிப்படியாக அவர் செய்யும் அலங்காரத்தினைப் பார்க்கலாம்.

• வசந்தரா

• அலங்கரிக்குமுன்....



• மேக்-அப்பிற்குப் பின்

பெண் என்றாலே அழகு என்றுதான் அர்த்தம். ஆனால் இக்காலத்துப் பெண்கள் சகல கலா வல்லுனர்களாக திகழ வேண்டியுள்ள நிர்பந்தம். அவர்கள் அபீஸ் வேலை, வீட்டு வேலை, கணவன், குழந்தைகள் என்று பல்வேறு காரியங்களை கவனிக்க வேண்டியிருக்கிறது. அதனால் அவர்களுக்கு எப்பொழுதும் நேரமின்மை, தங்களை அழகு படுத்திக் கொள்ள முன் போல அவகாசம் கிடையாது. சில சமயங்களில் அவர்கள் அபீஸிற்குச் சென்று வந்த உடன் வெளியிலே கிளம்பி பார்ட்டி, அல்லது வேறு நிகழ்ச்சிகளுக்குச் செல்ல வேண்டும் என்றால் உடனேயே ரெடி ஆக வேண்டி வரும். அதற்காக இதோ சில ரெடிமேட் டிப்ஸ் –

ஒரு பார்லருக்குச் சென்றால் 20 - 30 நிமிடங்களில் நீங்கள் தயார். முதலில் முகத்தை 'ப்ளீச்' செய்து

கொள்ளுங்கள். 8 - 10 நிமிடத்திற்குப் பிறகு அதை எடுத்து விட்டு eyebrows செய்து கொள்ளலாம். அதைச் செய்வதற்கு 3 - 5 நிமிடங்கள் ஆகலாம். பின்பு முகத்தைத் துடைத்துவிட்டு expert make-up 'லைட்' ஆக அணிந்து கொள்ளலாம். அதற்குத் தேவையான நேரம் 5 நிமிடங்களே. அதன் பின் ஒரு simple hairstyle. அதற்குச் செலவாகும் நேரம் 5 நிமிடங்களே. நீங்கள் இருக்கும் அவசரத்தில், ஒரு பார்லருக்குச் சென்று இவைகளை செய்து கொள்ளவே நேரமில்லை என்றால் வீட்டிலேயே செய்து கொள்ளவும் முடியும். முதலில் முகத்தை சோப்பும் நீரும் கொண்டு கழுவுங்கள். அதன்பின் க்ளென்ஸிங் மில்க் கொண்டு ஒரு பஞ்சினால் துடைத்து சுத்தம் செய்யவும். நேரம் இருந்தால் வீட்டில் நீங்களே தயாரிக்கக் கூடிய எளிய pack ஒன்றினை பூசி, 10 நிமிடத்திற்குப் பிறகு (இந்த நேரத்தில் மற்ற வேலைகளைச் செய்யலாம்) துடைக்கலாம். Pack ற்குத் தேவையான பொருட்கள் -

கொண்டைக் கடலை மாவு - 2 டீஸ்பூன்

அரிசி மாவு - 2 டீஸ்பூன்

தேன் - 1 டீஸ்பூன்

ஆரஞ்சு பழச்சாறு - 3 டீஸ்பூன்

இவைகளைக் கலந்து முகத்தில் பூசலாம். ஊறவைக்க நேரமில்லையென்றால், தேய்த்து ஒரு நிமிடத்தற்கெல்லாம் கழுவினாலும் 'பளிச்'சென்று இருக்கும். முகம் ஒப்பனை செய்தால் நன்றாக இருக்கும். Moisturizer லேசாக தடவி, அதன் பின் foundation (உங்களுடைய சருமத்திற்கு ஏற்ற நிறத்தைத் தேர்ந்தெடுத்து) தடவ வேண்டும். அது காய 1 - 2 நிமிடங்கள் ஆகும். அதன் பின் translucent powder (அதிலும் நிறங்கள் பல உள்ளன. நாச்சுரல் கலர் வெளுப்பானவர்களுக்கும், Beige colour சிறிது நிறம் மட்டானவர்களுக்கும் உகந்தது. இதைத் தடவி, கூடுதல் பவுடரை 'ப்ரஷ்' கொண்டு எடுத்து விடலாம்.

அடுத்து முகத்திற்குச் சத்தான உணர்வைக் கொடுத்து அழகு படுத்தும் blusher. Light rose colour எல்லோருக்கும் பொருந்தும். இதைத் தாடையின் மேல் இருபுறமும் மேல் நோக்கி தடவலாம். கண் இமைக்கு மேல் லேசாக Eye-shadow தடவினால் அழகாக இருக்கும். அதன் பின்னர் ஐ-லைனர், மற்றும் Mascara கண்களுக்குக் கூடுதல் அழகைத் தரும். புருவங்களை சீர் படுத்திவிட்டு, கண்களின் கீழ்ப் புறத்தில் சிறிதளவு மை தீட்டலாம். இப்பொழுது கிடைக்கும் Eye-definers னால் இதைச் செய்யலாம்.

உதடுகளை அழகு படுத்த lipstick தேவை. உதடுகளை lip-pencil னால் outline செய்துவிட்டு அதன் பின், ஒரு brush னால் lipstick ஐ எடுத்து உதடுகளில் தடவுவது மிகவும் முக்கியம். நீங்கள் தானாகவே செய்து கொள்ளக் கூடிய சிகை அலங்காரம் எத்தனை, எத்தனையோ. அது போன்று ஒன்றினை செய்து கொண்டு, அழகான உடை உடுத்தி வெளியே செல்ல நீங்கள் இப்பொழுது தயார்.

— வசுந்தரா

படங்கள் : ஜி. சுரேஷ்

---

வாழ்வில் கசப்பை நாம் விரும்ப மாட்டோம். ஆனால் உணவில் கசப்பை அவசியம் சேர்க்க வேண்டும். அகத்திக்கீரை, பாகற்காய், சுண்டைக் காய், வேப்பம்பூ இவற்றில் ஏதாவது ஒன்றை உணவில் சேர்த்துவந்தால் நோய் எதிர்ப்பு சக்தி நம் உடம்பில் அதி கரிக்கும்.

— வி.பி. மகராசி



---

வீட்டில் ஒயரிங் வேலை செய்தபின் மிச்சம் இருக்கும் ஸ்ளாம்பை சட்டத்தில் அடித்து கரண்டி மாட்டலாம். நான் கரண்டி, ஸ்பூன் போன்றவைகளை மாட்டி வைத்துள்ளேன்.



— ரா. மஞ்சுளா

# நிறம் மாறிய திசை மாறிய பற்கள்

விரபல முகச் சீரமைப்பு அறுவை சிகிச்சை நிபுணர் டாக்டர் **எஸ்.எம். பாலாஜி** அவர்கள் ஒவ்வொரு மாதமும் முகச் சீரமைப்பு கலையில் அதிநவீன சிகிச்சை முறைகள் குறித்து இங்கு விவரிக்கின்றார் –

முகத்திற்குப் பொலிவூட்டுவது சிரிப்பு. அந்தச் சிரிப்பிற்கு அழகு சேர்ப்பது வரிசையான வெண்ணிற பற்கள். ஆகவே நிறம் மாறிய பற்கள், திசை மாறிய பற்கள் மற்றும் குறைபாடு உள்ள பற்கள் உடையவர்களுக்கு முகத்தின் அழகு பாதிக்கப்படுவதோடு அவர்களின் உள்ளத்தையும் பாதிக்கும். இவர்கள் பெரும்பாலும் கூச்ச சுபாவம் உடையவர்களாக


டாக்டர் எஸ்.எம். பாலாஜி

நிகழ்வார்கள். இவர்களுக்கு நவீன சிகிச்சை முறைகளினால் அழகூட்டுவதோடு தன்னம்பிக்கையும் ஊட்ட இயலும். இயற்கையாக பற்களின் நிறம் இளம் மஞ்சள் கலந்த வெண்மை நிறமே தவிர எல்லோரும் கருதுவது போல் பளீரென்று வெண்ணிறமாக இருப்பதில்லை.

பற்கள் நிறம் மாறுவதற்கு இரண்டு வகையான காரணங்கள் உள்ளன. அவை வெளி கறைகளாலும், உள் கறைகளாலும் ஏற்படுகின்றன. வெளி கறைகள் நாம் உண்ணும், உபயோகிக்கும் பொருள்களினால் மற்றும் கிருமிகளினால் உண்டாகின்றன. இவை பற்களின் மேற்பரப்பில் படிவதால் கருவிகள் கொண்டு எளிதில் நீக்கி விடலாம். ஆனால் உள் கறைகள், பல்லின் உள்ளே ஏற்படும் சிதைவினால் மற்றும் பற்கள் வளர்கின்ற பருவத்தில் ஏற்படும் மாற்றங்களினால் உண்டாகிறது. இவற்றைக் கருவிகளால் எளிதில் நீக்க இயலாது.

வெளி கறை ஏற்படுவதற்கான சில காரணங்கள் - வெற்றிலை போடுவதாலும், புகை பிடிப்ப தாலும், புகையிலை உபயோகிப்பதாலும், பற்கள் காவி நிறமாகவோ அல்லது கருப்பு நிறமாகவோ தோன்றும். இவை பல்லின் எனாமல் மேல் ஒட்டிக் கொண்டிருப்பதால் வாயில் துர் நாற்றம் வீசும். இது தவிர பலவிதமான சிகிச்சைக்காக நாம் சாப்பிடும் மருந்துகளும் விதவிதமான கறைகளை உண்டாக்கும். இரத்த சோகை உள்ளவர்களுக்கு இரும்பு கலந்த ஊட்டச்சத்து மருந்துகள் கொடுப்பதால் பற்களில் கருப்புக் கறை படிகிறது. அயோடின் கலந்த மருந்துகளை உபயோகிப்பவர்களுக்கு பழுப்பு நிறம் உருவாகிறது. காச நோய்க்காக உட்கொள்ளும் மாத்திரைகள் பற்களில் பல விதமான கறைகளை உருவாக்கின்றன. இவை அனைத்தும் பல்லின் வெளி உறையில் ஏற்படுவதால், இவற்றைப் பற்கள் சுத்தம் செய்யும் கருவிகளால் சுத்தம் செய்யலாம். நோயாளிகளுக்கு இவ்வாறு கறைகளை ஏற்படுத்தும் மருந்துகளை தவிர்ப்பதற்கு அறிவுரை கூறலாம்.

பெரும்பாலான உள் கறைகள் உடலில் ஓடும் இரத்தத்தின் வழியாக ஏற்படுகிறது. பற்கள் வளர்ந்து வரும் காலத்தில் உடம்பில் உள்ள நச்சுக் கிருமிகளை அழிக்க உதவும் 'டெட்ராசைக்ளின்' மருந்தை கொடுத்தால், மருந்து இரத்தத்தில் கலந்து பற்களில் உள் கறைகளை உண்டாக்குகிறது. கர்ப்பமாக இருக்கும் பெண்ணுக்கு இந்த மருந்தை செலுத்தினால், கருப்பையில் வளரும் குழந்தையின் பற்களுக்குக் கறையை உண்டாக்கும். கல்லீரல் பாதிப்பு உள்ளவர்களுக்கு, மஞ்சள் காமாலை ஏற்படு கிறது. இவர்களுடைய பற்கள் பச்சை நிறத்தில் இருக்கும். காரணம், இந்நோயில் 'பைல் சால்ட்' அதிகமாக இரத்த ஓட்டத்தில் இருப்பதால், இவை பற்களிலும் படிந்து விடுகிறது. இதனால் ஏற்படும் உள் கறை, பால் பற்களையும் நிலை பற்களையும்

## ஸ்ரீ காஞ்சி பூஜ்ய ஸ்ரீ பரமாச்சார்யாள் அவர்கள்
## அத்வைத வித்யாசார்யாள் மஹாராஜா ஸாஹேப் பகவான்
## ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களின் வம்சத்தில் உதித்தவர்களே.

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால், 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு, தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 130 மாணாக்கர்கள் வேதாத்யாயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஓர் நாள் உணவளிக்க, உணவு வகைகளை அனுசரித்து சுமார், முறையே ரூ. 500/-, ரூ. 750/- அல்லது ரூ. 1000/- ஆகிறது. இந்தத் தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 5000/-, ரூ. 7500/- அல்லது ரூ. 10,000/- மூலதனம் ஏற்படுத்தியோ, அவ்வப்போது தொகை அனுப்பியோ, ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம். நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும் :

**அத்வைத வித்யாசார்யா மஹாராஜா ஸாஹேப்**
**ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,**
**42, காமாக்ஷி ஜோசியர் தெரு, கும்பகோணம் - 612 001.**

செக் (or) டிராப்ட் முதலியவைகளை A.V.M.S.G.D.P.S. ஸமிதி என்ற பெயருக்கு அனுப்பலாம்.

......இந்த நன்கொடைக்கு 80-G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு......

குறிப்பு : எம்மிடம் வேத, வைதிக, ப்ரயோக நூல்கள் யாவும் கிடைக்கும். Rs. 3/- க்கு தபால் தலை அனுப்பி எமது Catalogue ஐ பெற்றுக் கொள்ளலாம்.

---

# காஸ் ஸ்டவ் பயன்படுத்துவோர் கவனத்திற்கு!



காஸ் ஸ்டவ்
பிரச்சினையா?
எங்களை
உடனே அணுகவும்.
✆ 4851685

எல்லா வகையான காஸ் அடுப்புகளும் ரிப்பேர், ஸ்ப்ரே பெயிண்டிங், குரோமியம் பிளேட்டிங், உதிரி பாகங்கள் மற்றும் தங்களின் பழைய ஸ்டவ் எடுத்துக்கொண்டு 2 வருட உத்திரவாதத்துடன் தரமான புதிய ஸ்டெய்ன்லெஸ் ஸ்டீல் ஸ்டவ் தருகிறோம்.

# சிவா
## காஸ் ஸ்டவ் சர்வீஸ்

43, கோவிந்தன் ரோடு (சீனிவாசா தியேட்டர் அருகில்), மேற்கு மாம்பலம், சென்னை - 33
எங்களுக்கு வேறு எங்கும் கிளைகள் இல்லை

---

ரிப்பேர் செய்ய தங்கள் ஸ்டவ்வை கொடுக்கும்போது உடனடி உபயோகத்திற்கு மாற்று காஸ் ஸ்டவ்வும் தருகிறோம்.

பாதிக்கும் வாய்ப்புள்ளது.

பிறக்கும் குழந்தைக்கும், தாய்க்கும் இரத்தத்தில் உள்ள 'Rh' என்னும் காரணியின் வேறு பாட்டினால், இரத்த அணுக்கள் சிதைகிறது. இந்நிலையில் உடல் முழுவதும் மட்டுமின்றி பற்களும் நீல நிறமாக தோற்றம் அளிக்கும். அளவிற்கு அதிகமான 'புளோரைடு' உள்ள குடி தண்ணீரை பருகினால், அது இரத்தத்தில் கலந்து, வளரும் நிலையில் உள்ள பற்களையும் எலும்புகளையும் தாக்குகிறது. இதனால் பற்களில் காவிநிற உட்கறை படிகிறது. செந்நிறப் பற்கள் சில இரத்தம் சம்பந்தப்பட்ட நோய்களில் உண்டாகிறது. இரத்தத்தில் இருக்கும் கனிம பொருட்கள், அதாவது இரும்பும், பார்பைரின் சரியாக இணையாமல் போனால், பார்பைரின் உடலில் உள்ள திசுக்களில் படிந்து சிவப்பு நிறத்தை அளிக்கிறது. இதனால் பற்களும் சிவப்பு நிறத்தில் உள்ளது.

பற்களின் வளர்ச்சி நிலையில் தடை



சிகிச்சைக்கு முன்......

.......சிகிச்சைக்குப் பின்

ஏதும் ஏற்பட்டால், அதன் எனாமல் பாதிக்கப்படும். இவ்வாறு பாதிக்கப்பட்ட எனாமல் எளிதில் தேய்ந்து விடும். இதனால் கறைகள் படிந்து விடும். உடலை தாக்கும் நச்சுக் கிருமிகளிலிருந்து வெளிப்படும் சுரப்பிகள், பற்கள் வளரும் காலத்தில், இரத்தத்தில் கலந்து அவற்றின் வளர்ச்சியை தாக்குவதோடு, பற்களில் சிறு புள்ளிகள் தோற்றுவிக்கும். பாதிக்கப்பட்ட பற்கள் மஞ்சளாகவோ அல்லது நீலமாகவோ இருக்கும். மேற்கண்ட காரணங்கள் தவிர பல் லைடப்புகளினாலும் பற்களின் நிறம் மாறலாம். பற்களின் உள்புறத்தில் இரத்தக் குழாய்களும், நரம்புகளும் உள்ளன. பல் சொத்தை ஆழமானாலோ அல்லது பல் விபத்தில் அடிபடும் பொழுதோ, கிருமிகள் எளிதில் உள்ளிருக்கும் திசுக்களை தாக்குகிறது. இவ்வாறு தாக்கப்பட்ட திசுக்களிலிருந்து இரத்த அணுக்கள் வெளிப்படுகின்றன. வெகு நாள் இந்நிலையில் இருந்தால், கெட்டுப் போன திசுக்களினால் பற்கள் கரும்பழுப்பு நிறத்தில் தோற்றமளிக்கும்.

விபத்தில் உடையும் பற்களில் கிருமிகள் நுழையாமல் இருந்தால், அதை முழுமையாக செய்து விடலாம். முன் பற்கள் முகத்திற்கு அழகு கொடுப்பதால், அதனை பற்களின் நிறத்திலேயே முழுதாக்க வேண்டும். வெகு நாட்களாக உடைந்த பற்களை கவனிக்காமல் இருந்தால், கிருமிகள் உள்ளே இருக்கும் திசுக்களை எளிதில் பாதிக்கும். இவ்வாறு பாதிக்கப்பட்ட பற்களில் உள் பக்கமாக ஒரு சிறு துவாரம் இட்டு கெட்டுப் போன திசுக்களை நீக்கிவிட்டு செயற்கை நரம்பு கொண்டு அடைக்க வேண்டும். சில வேளையில் நோய் வேர்முனை வரை பரவி அதைத் தாங்கி உள்ள எலும்பை பாதிக்கக் கூடும். அப்பொழுது, வேர்முனை கட்டியை நீக்க சிறு அறுவை சிகிச்சை செய்ய வேண்டும்.

உடைந்த பற்களை முழுமையாக்கவும், பற்களின் உள்ளே உள்ள கறைகளை மறைக்கவும் பல்லின் நிறம் உடைய பசையை உபயோகிக்கலாம். இந்தப் பசையை 'லைட் க்யூர் ரெஸின்' (Light Cure Resin) என்பார்கள். இதை கெட்டியாக்க 'அல்ட்ரா வைலட்' (Ultra Violet) ஒளியைக் கொண்டு கெட்டியாக்கலாம். ஒளியைக் காட்டுவதற்குமுன் ஒவ்வொருவர் விருப்பத்திற்கு ஏற்றாற்போல் பற்களை உருவமைக்கலாம். உள்கறை கடினமாக இருந்தால், அந்தப் பல்லின் அளவைக் குறைத்து அதற்கு ஏற்ற உறையைக் கொடுக்க வேண்டும்.

பற்கள் சீராக வளராமல், வரிசை மாறி ஒழுங்கற்று வளருவதால் முகத்தின் அழகான தோற்றம் மாறி, வசீகரம் இழந்து விடுகிறது. பற்கள் சீராக வளராமல் இருக்க பல காரணங்கள் உள்ளன. பற்சீரின்மை பலவகைகளாக பிரிக்கப்பட்டுள்ளது. அவற்றில் மூன்று வகை மிகவும் இன்றியமையாதவை. இந்தப் பிரிவுகள் மேல் தாடை பற்களும், கீழ்

தாடை பற்களும், ஒரு நிலையில் சாதாரண மாக இருப்பதை வைத்து பிரிக்கப்பட்டுள்ளது. இவற்றில் அதிகமாக தாடை எலும்பு குறைபாடுகள் இல்லாமல், தனித்தனி பற்களில் மட்டுமே மாற்றம் ஏற்பட்டிருக்கும். இப்படி இருக்கும் நபர்க்கு, கிளிப் மூலம் சீர் செய்யலாம். எலும்புகளில் மாற்றம் இருந் தால், அறுவை சிகிச்சையே சிறந்த வழி.

பற்சீரின்மையை முறையாகக் கண்டறிய பலவிதமான முறைகள் உள்ளன. தலை, முகம், மண்டை ஓடுகளின் X-ray படம் எடுத்து, அவற்றின் வளர்ச்சி குறித்து கண் டறிய வேண்டும். மேல் தாடை, கீழ் தாடை ஆகியவற்றின் அச்சுக்கள் எடுத்து, அவற்றில் பல் வரிசைகளை அளந்து, பொருத்திப் பார்த்து அவற்றில் உள்ள குறைபாடுகளை கண்டறியலாம். ஒரு மனிதனின் வாழ்நாளில் பொதுவாக இரண்டு வகை பற்கள் தோன்றும். அவை பால் பற்கள் மற்றும் நிலை பற்கள். பால் பற்கள் ஒரு குறிப்பிட்ட காலகட்டத்திற்குப் பின் விழ வேண்டும் என்ற நியதி உள்ளது. ஆனால் இவை விபத்தினாலோ அல்லது சொத்தையினாலோ முன்பே இழக்க நேரிட்டால், அருகில் உள்ள பற்கள் அந்த இடத்தில் நகரும். இதனால் உள்ளிருக்கும் நிலைபல் சீராக வெளி வராது.

விபத்தில் பால் பற்களுக்கு அடிப் பட்டால், அது எலும்பிற்குள் இருக்கும் நிலை பல்லின் சீரான பாதையை பாதிக்கும் நிலை பற்கள் திசை மாறி முளைக்கும் நிலை ஏற்படும். வாயினுள் அடங்காத பெரிய நாக்கு உடையவர்களுக்கு, நாக்கின் அழுத்தத்தால், பற்கள் வெவ்வேறு திசையில் தோன்றும் சாதாரணமாக 32 நிலைபற்கள் பல்லோருக்கும் இருக்கும். இதைத் தவிர சிலருக்கு மிகுபற்கள் முளைக்கும். பற்சீரின் மைக்கு மிகுபற்கள் காரணியாக இருந்தாலும், சில வேளையில் முளைக்க வேண்டிய பற்கள் இல்லாமல் போனாலும் பற்சீரின்மை தோன்றும். பொதுவாக ஒரு சிலருக்கு தான் இந்நிலை ஏற்படும். இருப்பினும் இக்காரணத்தால் தாடையில் இருக்கும் பற்கள் வெவ்வேறு திசை நோக்கி நகரும்.

---

**எந்த அல்வா கிண்டினாலும் கடைசியில் சிறிது மில்க் மெய்ட் சேர்த்துக் கிளறினால் சூப்பர் அல்வா கிடைக்கும்!**

**— எஸ். பட்டம்மா**



பற்களினால் மட்டுமின்றி தாடை எலும்பி னாலும் பற் சீரின்மை தோன்றும். முகத்தில் ஒரு தாடை சரியான அளவிற்கு வளர்ந்து, மறு தாடை குறைவாகவோ அல்லது அளவிற்கு அதிகமாகவோ வளர்ந் தால் பற் சீரின்மை ஏற்படும். சில வேளை யில் ஒரு குழந்தை தாடையைத் தன் தாயிட மிருந்தும், பல் அமைப்பினைத் தந்தையிட மிருந்தும் அல்லது மாற்றியோ பெறும் வாய்ப்புள்ளது. இதனால் பற்களின் அமைப்பு தாடையில் ஒழுங்காக இருக்காது. மேற்கண்ட காரணங்கள் மட்டுமின்றி உணவு குறைபாடு, வைட்டமின் 'டி' குறைபாடு சர்க்கரை நோய், நாளமில் சுரப்பி குறைபாடு உள்ளவர்களுக்கும் பற்கள் வரிசையாக இருக் காது.

பற்களின் வளர்ச்சி குறைபாடுகள் அதன் அளவிலோ, எண்ணிக்கையிலோ அல்லது அதன் அங்கங்களிலோ ஏற்படலாம். சில வேளையில் பற்கள் தாடை எலும்பிற்குள் அல்லது அதை ஒட்டியுள்ள சதையில் புதைந்து இருக்கும். பெரும்பாலும் இந்நிலை ஞானப் பல்லிற்கு ஏற்படும். வாயின் உள்ளே முளைக்க இடம் இல்லாததால், இவை எலும் பிற்குள் கோணலாக இருந்து அருகில் உள்ள பல்லை பாதிக்கும். ஆகவே இதனை ஒரு சிறு அறுவை சிகிச்சையின் மூலம் எடுத்து விடலாம். இப் படிப்பட்ட பற்களை எடுக் காமல் நீடிக்கப்பட விட்டால், கிருமியின் தாக்குதலால், நீர் கட்டி, முகம் வீங்கி விடும். இதனால் வாய்பூட்டு நோய் (Trosmus) நேரிடலாம். இது மட்டுமின்றி பால் பற்களை சிறு வயதிலேயே இழக்க நேரிட்டால், உள்ளே உள்ள நிலை பற்கள் வெளி வராமல் புதைந்து விடும். வெகு நாளாக பால் பற்கள் விழாமல் இருந்தாலும், அதற்குரிய நிலை பற்கள் முளைக்காமல் புதைந்து இருக்கும். இப்படி புதைந்துள்ள பற்களை X-ray படம் மூலம் அதன் நிலையை அறிந்து, அதற்கேற்ப மற்ற பற்களின் அளவிற்குக் கொண்டு வரவோ அல்லது பிடுங்கவோ நேரிடும்.

பற்களின் மேல் ஏற்படும் பாதிப்பை உறைகள் மூலம் சரி செய்யலாம். இவ்வாறு நவீன சிகிச்சையின் மூலம் முகக் குறைபாடு உள்ளவர் களுக்கு சிகிச்சை செய்யும் டாக்டர் பாலாஜியை (மாலையில் சென்னை இஸபெல்லா மருத்துவமனையில் ஆலோ சனை அளிக்கிறார். தொ. பே. 4991081, 82, 83, 4996890). வைத்து ஜெர்மனியில் உள்ள டிஸ்லர் படக் கம்பெனி ஒரு படம் தயாரித்துள்ளது. இந்தப் படம் பெர்லினில் நடக்க இருக்கும் சர்வதேச திரைப்பட விழாவில் காண்பிக்கப்படுகிறது.

(தொடரும்)

சருமத்தைப் பாதுகாக்கும் தன்மை உங்களுக்குள்ளேயே அமைந்திருப்பது, இயற்கை அளித்த வரப்பிரசாதம். சுத்தமாகவும் ஆரோக்கியமாகவும், குளிர்ச்சியாகவும் இருப்பதற்கு, உங்கள் சருமத்தின் இயற்கையான அமைப்பும் காரணமாகும். அழகுக்கு மெருகூட்டும் இவையாவும் சருமத்தின் அடிப்பகுதியில் ஆழப்பதிந்திருக்கின்றன. இவை சிறப்பாக செயல்பட, சருமத்தின் மேற்பகுதியில் மிகச் சரியான அளவில், முறையுடன் இவற்றை வரவழைக்க வேண்டும்.

உலகெங்கும் உள்ள சருமப்பராமரிப்பு நிபுணர்கள் நன்கு அறிவார்கள். ஆகையால்தான், உங்கள் மேனிக்கு மெருகு ஊட்ட, இயற்கையாகவே சருமத்தில் உள்ள ஊக்கிகளை தூண்டும் வண்ணம், சருமப்பராமரிப்பு சாதனங்கள் உருவாக்கப்பட்டுள்ளது.

அறிமுகப்படுத்துகிறோம். ஃபரேயா சருமப் பராமரிப்பு சாதனங்கள் அணிவரிசை. உங்கள் சருமத்திற்காக, உங்கள் சருமத்துடன் செயல்படுகிறது:-

சரும நிபுணர்கள், கடந்த சில வருடங்களாக செய்த ஆராய்ச்சியின் விளைவாக சருமம் கெட்டுப்போகும் முறைகளைப் பற்றியும், கெடுவதைக் குறைக்கும் வழிமுறைகளையும் கண்டுபிடித்துள்ளனர். இந்த விஞ்ஞான அற்புதங்கள், இந்தியாவின் மற்ற தயாரிப்புகளிலிருந்து முற்றிலும் மாறுபட்ட, சருமப் பராமரிப்பு சாதனங்களின் அணிவரிசையாக ஃபரேயா மூலம் கிடைக்கின்றன.

ஃபரேயா அணிவரிசை, சரும நோய் மருத்துவர்கள், அழகியல் நிபுணர்கள் மற்றும் மருந்தியல் வல்லுனர்கள் அடங்கிய குழுவால் உருவாக்கப்பட்டவை. இந்தியாவின் முன்னணியிலுள்ள தனிப்பட்ட பரிசோதனைக் கூடத்தில் பரிசோதனை செய்யப்பட்டுள்ளன. இவை உங்கள் சருமத்தின் இளமையை மீட்டுத்தந்து, நிலையாக வைக்கும் இயக்கத்துடன் முழுமையாக ஒருங்கிணைந்து செயல்படுகிறதா என்பதற்காகவே சோதனை செய்யப்படுகிறது. ஃபரேயா சருமத்திற்குள் செயல்படுவதால், இதன்பயன் நெடுநாள் நீடித்து நிற்கிறது.

**உங்கள் சருமத்தில் வெடிப்புகள் ஏற்பட பல காரணங்கள் உள்ளன. உங்களுக்கு அதைப்பற்றி தெரியாததும் ஒரு காரணம்.**



நாம் இன்று நிறைய மருத்துவ விழிப் புணர்வை பெற்றிருக் கிறோம். தலைவலி முதல் எய்ட்ஸ் வரை அதன் காரணங்கள், மேலும் பல நுணுக்கமான தகவல்கள்... அதே போல ஓரளவு சட்ட அறிவு, விளையாட்டு, இசை, சினிமா இப்படி... ஆனால் நாம் பார்க்கவே பயப்படும் ஒன்று - பொருளாதாரம் பற்றி.

ரூபாய் மதிப்பு வீழ்ச்சி....

ரூபாய் மதிப்பு ஆறுபைசா ஆனது....

இப்படியெல்லாம் வரும்போது ஏதோ கிரேக்க, லத்தீன் மொழி போல அடுத்த செய்திக்குப் போய்விடு கிறோம். உண்மையில் பெண்களாகிய நாம்தான் நம் வீட்டின் நிதி மந்திரியும் கூட. நாட்டின் பொருளாதார நிபுணர்களே நிதிநிலை யமைக்குத் திணறும் போது, நாம் எப்படியோ சமாளித்து விடுகிறோம்.

இப்படிப்பட்ட நாம் கொஞ்சம் பொருளாதார விஷயங்களையும் தெரிந்து கொள்வோமே. அதன் ஆரம்ப முயற்சி யாகத்தான் இந்தக் கட்டுரை. பக்கத்தைத் திருப்பி விடாமல் படியுங்கள், நமக்கு வாழ்க் கைக்கு மிகவும் உதவியாக இருக்கும்.

— (ஆர்.)



ரும்பாலான பெண்களுக்கு மற்ற விஷயங்களில் உள்ள ஆர்வமோ அறிவோ பொருளாதார விஷயங்களில் கிடையாது. இதற்குக் காரணம் ஒன்று "அவை ஆம்பிள்ளை சமாசாரம்" என்ற நம்முடைய அடித்தள எண்ணம், இரண்டு நாம் அவைகளை புரிந்து கொள்வதற்கான படிப்பறிவு நமக்குக் கிடையாது என்ற உணர்வுதான்.

பொருளாதாரத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள தேவையும் இப்பொழுது அதிகரித்துள்ளது. 1991 ல் ஆரம்பித்த பொருளாதார சீர்திருத்தங்கள், தாராளமயமாக்குதல் தான் பொது மக்களின் கவனத்தை நாட்டின் வர்த்தகம், பொருளாதாரம் சம்பந்தப்பட்ட விஷயங்களுக்குத் திருப்பியிருக்கிறது எனலாம்.

இத்துறையில் கரை கண்டவர்கள் என்பவர் யாருமே கிடையாது. நானி பல்கிவாலா, முன்னாள் மற்றும் இன்னாள் நிதி அமைச்சர்கள் மேலும் ரிசர்வ் வங்கியின் இயக்குனர்கள், நிதித் துறையைச் சார்ந்தவர்கள் போன்ற ஒரு சிலர் இத்துறையில் நல்ல வல்லமையுடையவர்கள், நல்ல விவரம் புரிந்தவர்கள்.

பொதுவாக பொருளாதாரத்தை 'மாக்ரோ எகானமி' (Macro Economy) எனப்படும் பெரிய அளவான பொருளாதார விஷயங்களென்றும், அன்றாடம் நம்மைப் பாதிக்கின்ற

# போரடிக்காமல்

வர்த்தக விஷயங்களை அதன் சிறுசிறு கூறுகள் என்றும் சொல்லலாம்.

வங்கிகளின் வட்டி விகிதம், ரிசர்வ் வங்கியின் பொருளாதாரக் கொள்கைகள், நாட்டின் மொத்த வருமானம்/செலவு, அரசாங்கத்தின் உள்நாட்டு, வெளிநாட்டு வர்த்தகத் திட்டங்கள் வெவ்வேறு வரிகள் சம்பந்தப்பட்ட விஷயம் மேலும் வேறு சில துறைகள் சேர்ந்தவைதான் 'மாக்ரோ எகானமி' எனப்படும் பெரிய அளவிலான வர்த்தக விஷயங்கள்.

நம்முடைய அன்றாட வாழ்க்கையை பாதிக்கும் பண வீக்கம், வட்டி விகிதம், நிதித்துறை கோட்பாடுகள், கம்பெனிகளின் திட்டங்கள், பங்கு மார்க்கெட் நிலவரங்கள் பொருளாதாரத்தின் சிறு அங்கங்களாகும்.

தனி மனிதனைப் போல் அரசாங்கத்திற்கும் வரவுகள் மற்றும் செலவுகள் ஏராளமாக இருக்கின்றன. ஒரு வீட்டை 'பட்ஜெட்டிற்குள்' கட்டுப்பாட்டிற்குள் வைப்பதே இவ்வளவு பாடாக இருக்கும் போது நாட்டின் வரவு, செலவினை கண்காணித்து கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வருவது எவ்வளவு கடினமான காரியமாக இருக்கும் என்பதை நாம் யூகிக்கலாம். ஒருபுறம் குறையாத ஜனத் தொகை, அரசியல் ரீதியான நிர்பந்தங்கள், மற்றொரு புறம் வெளிநாட்டோடு பொருளாதார ரீதியான தீர்மானங்கள் என்று வெவ்வேறு திசையில் இழுக்கும் காரணங்கள் உண்மையிலேயே அரசாங்கத்திற்கு மெலிதான கயிற்றில் நடக்கும் சர்க்கஸ் வித்தை போன்ற காரியம்தான் இது.

முதலில் நம்மை நேர்முகமாகப் பாதிக்கின்ற விஷயத் திற்கு வருவோம். 'பண வீக்கம்' ஆங்கிலத்தில் inflation எனக் கூறப்படும். இவ்வார்த்தையைப் பற்றி கேள்விப் படாதவர்களே இருக்கமாட்டார்கள்.

பொதுவாகச் சொன்னால் 'பண வீக்கம்' பொருளாதாரத்தின் உடல் நலத்தை வெளிப்படுத்தும் ஒரு அளவு கோல் ஆகும்.

பணவீக்கத்திற்குப் பொருளாதார விளக்கமே "மிக அதிகப் பணம் மிகக் குறைவான சாமான்களை விரட்டுவது" விளைவு? விலையேற்றம்! பணவீக்கம் ஏறினால் விலைவாசியும் ஏறுகிறது என்று புரிந்து கொள்ளலாம். இதையே வேறு விதமாகக் கூறுவ தென்றால் குறிப்பிட்ட 100 ரூபாய்க்கு (உ-ம்) குறைந்த சாமான் மட்டுமே வாங்கக் கூடிய நிலை.




மேலே கூறிய விளக்கத்திற்கு வேறு விதமாகவும் புரிந்து கொள்ளலாம். அதாவது பணவீக்கம் ஏறிக் கொண்டே போகிற தென்றால் ஒன்று நாட்டின் மொத்த உற்பத்தி குறைந்திருக்கிறது அல்லது அளவுக்கு அதிகமாக, பொருத்தமில்லாத அளவிற்குப் பணபுழக்கம் இருக்கிறது என்று பொருள் கொள்ளலாம். அதற் காக பணவீக்கம் ரொம்ப குறைந்தால் நல்லது என்று அர்த்தம் இல்லை. இன்னும் சொல்லப் போனால் பணவீக்கமே இல் லாமல் '0' சதவிகிதத்தில் பணவீக்கம் இருக்கிறது என்றால் பொருளாதாரம் மந்த நிலைக்கு வந்து விட்டது என்று அர்த்தம். இப்பொழுது இந்தியாவில் பணவீக்கம் 6 சதவிகிதத்திற்கும் சற்றுக் கூடுதலாக இருக்கிறது. எதை வைத்து கொண்டு குத்து

# 'பொருளாதாரம்' படிக்கலாமா?

மதிப்பாக 6 சதவிகிதம் என்று பார்ப்போமா?

எதை அளப்பது என்றாலும் ஒரு ஆதாரம் இருக்க வேண் டாமா? அதே போல் புள்ளி விவரங்களை தொகுத்து வழங்க ஒருவித அளவு கோல் இருக்கிறது. அரசாங்கம் குறிப்பிட்ட ஒரு வருடத்தை அடிப்படை வருடமாக நிர்ணயித்து (உதாரணத்திற்கு 1981) பலதரப்பட்ட சாமான்களின் அந்த வருடத்தின் விலையை நிலையாக வைத்துக் கொண்டு, அதிலிருந்து 'பாயிண்ட் டு பாயிண்ட்' எனும் அடிப்படையில் ஒப்பிடுதல் செய்யும். அந்த அடிப்படை வருடத்தின் விலைவாசியை 'பாயிண்ட் டு பாயிண்ட்' எனும் அடிப்படையில் ஒப்பிட்டுப் பார்க்கையில் இந்த வருட பணவீக்கம் குத்துமதிப்பாக 6 சதவிகிதத்தில் இருக் கிறது.




இந்த தேர்ந்தெடுக்கப்பட்ட அடிப்படை வருடத்தை அடிக் கடி மாற்ற மாட்டார்கள். மேலும் அந்த அடிப்படை வருடம் ஒரு சாதாரண வருடமாக இருக்க வேண்டும். அதாவது normal year. அதீத விளைச்சலோ, புயலோ, மழையோ வேறு பல வகை யான விபரீதங்கள் நடந்திராத வருடமாக இருக்க வேண்டும்.

மேலும் பணவீக்க விகிதம் முக்கியமான பல பொருட் களைக் கொண்டு நிர்ணயிக்கப்பட்ட ஒன்று. அதில் விடுபட்ட பொருட்கள் கூட இருக்கலாம். இந்தியாவையே எடுத்துக் கொண்டால் பணவீக்கம் நாட்டுப் புறங்களில் ஓரளவு சீராகவும் நகர்ப்புறங்களில் சற்று வித்தியாசமாகவும் இருப்பதைக் காண லாம். அதனால்தான் நகர்ப்புறங்களில் வேலை செய்பவர் களுக்கு CCA எனப்படும் நகர்ப்புற அதிக ஈட்டுத் தொகை வழங்கப்படுகிறது.

மற்ற நாடுகளில் பணவீக்கத்தின் நிலைமையைச் சற்றுப்

துக்கமும் கஷ்டங்களும் சில சமயம் நேரிடுவது நம்முடைய இயற்கைக் குணங்களைப் பலப் படுத்தவே. அவை பரீட்சைகளே யாகும். நம்மைத் தயார் செய்து கொண்டு அவற்றைக் கடந்து செல்ல வேண்டும்.

— சுவாமி பரமானந்தர்

தகவல் : ஆர். பார்த்திபன்

பார்ப்போம். ஒரு சில கிழக்கு அரேபிய நாடுகளில் பணவீக்கம் அநேகமாக '0' சதவிகிதம் இருக்கிறது. அங்கு விலைவாசி ஏற்றம் என்பது இல்லையென்று கூடச் சொல்லலாம். ஆனால் நான் ஏற்கெனவே கூறியது போல ஸ்திரப்பட்ட 3 - 5 சதவிகிதப் பணவீக்கம் நல்ல பொருளாதார நிலையைக் காட்டும். (இல்லாவிட்டால் வருடாந்திர சம்பள உயர்வுக்கு ஆதாரமே இல்லாமல் போய்விடும் இல்லையா?) அமெரிக்கா மற்றும் ஒரு சில ஐரோப்பிய நாடுகளில் பணவீக்கம், பொருளாதாரச் செழிப்பைக் குறிக்கும் வகையில் ஸ்திரமாக 4 சதவிகிதத்தில் இருக்கிறது.

இந்த விஷயத்தையே வேறு கண்ணோட்டத்தில் பார்ப்போம். பணவீக்கம் பணத்தின் மதிப்பைக் குறைத்திருக்கிறது. நம்முடைய நாணயத்தை எடுத்துக் கொண்டால் 1 ரூபாயின் மதிப்பு 6 பைசாவாக இறங்கியிருக்கின்றது. அதாவது ஏற்கெனவே அரசாங்கத்தால் நிர்ணயிக்கப்பட்ட அடிப்படை வருடத்தில் (1981 உடம்) 6 பைசாவிற்கு வாங்கின பொருட்கள் இப்பொழுது ஒரு ரூபாய் விலையாக இருக்கும். இதைத்தான் நம் பெரியவர்கள் "காலணாவிற்கு 2 படி வாங்கின காலம் அது" என்றெல்லாம் கூறக் கேட்கிறோம். அதற்காக எல்லாப் பொருட்களின் விலையும் 6% ஏறியிருக்கும் என்று அர்த்தம் கொள்ளக் கூடாது. புள்ளி விவர கணக்கில் சேர்க்கப்பட்ட ஒரு சில பொருட்களின் விலை 20% ஆக ஏறியிருக்கலாம். வேறு பத்து சாமானின் விலை 2% தான் ஏறியிருக்கும்.

நாணயத்தின் ஒரு பகுதி பணவீக்கம் என்றால் அதன் மறு பகுதி பணமதிப்பு வீழ்ச்சி எனப்படும் devaluation ஆகும். பணமதிப்பு வீழ்ச்சிக்கு மேற்கூறிய காரணங்களில்லாமல் உலகப் பொருளாதார நிலைமையும் காரணமாக அமையும். உதாரணமாக நம் பொருளாதார நிலைமை ஒன்று போல இருந்து நாம் ஏற்றுமதி இறக்குமதி செய்யும் நாடுகளின் பொருளாதார நிலைமை உயர்ந்து கொண்டே போனாலும் அப்பொழுதும் பணத்தின் மதிப்பு மாறுபடும்.

இதையே சற்று விரிவாகப் பார்ப்போம். முன்பு 1985 யில் 1 டாலருக்கு ரூ 12 என்று இருந்த நமது பணம் இப்பொழுது 1 டாலருக்கு 36 ரூபாய் ஆகக் குறைந்திருக்கிறது. அதாவது 36 ரூபாய் மதிப்புள்ள சாமான் நாம் ஏற்றுமதி செய்தால் நமக்கு 1 டாலர்தான் கிடைக்கும். ரிசர்வ் வங்கியில் நமது தங்கத்தின் இருப்பு குறைந்து போனாலும் நமது பணத்தின் உள் மதிப்பு குறைந்து விடும்.

அடுத்தாற் போல் நாம் பார்க்க வேண்டியது, "நாம் இந்தப் பணவீக்கத்தை எப்படிச் சமாளிப்பது?" என்பதுதான். இதையும் இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று நாம் நம்மிடம் மிஞ்சியிருக்கும் பணத்தின் மதிப்பை எப்படி பெருக்குகிறோம்; மற்றொன்று அரசாங்கம் பணவீக்கத்தை எப்படியெல்லாம் சமாளிக்கலாம்/எப்படியெல்லாம் சமாளிக்கிறது என்பதுதான்.

முதலில் நம்மிடம் இருக்கும் பணத்தின் மதிப்பை எப்படி பெருக்குவது என்று பார்ப்போம். இன்று ரூ. 1000/-யை நாம் வீட்டிலேயே வைத்துக் கொண்டால் நாளை அதன் உள் மதிப்பு ரூ. 900/- ஆக இறங்கி விடலாம். அதனால் நாம் எப்படி, எதில் முதலீடு செய்தால் பணத்தின் 'உள்மதிப்பு'. 1) அடுத்த வருடமும் ரூ. 1000 ஆக இருக்கும், 2) ரூ. 1,100/- ஆக இருக்கும் என்பதே.

கையில் இருக்கும் பணத்தை எப்படிப் பெருக்குவது என்பது உங்களுக்கே தெரியும். அதில் ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்பதை சமீபகால நிகழ்ச்சிகள் காண்பித்தன.

— ஜெயந்தி ஸ்ரீனிவாசன்

❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁

**ரங்கோலி போடும்போது நீர்க்க மைதாவை கஞ்சி வைத்துக் கொண்டு அவ்வப்போது பஞ்சினால் கஞ்சியைத் தோய்த்து இலேசாக இடத்தைத் தேய்த்து விட்டுப் பொடி தூவினால், காற்றடித்தாலும் ரங்கோலி கலையாது.**

**— எஸ். பட்டம்மா**



# ரிலீவு

காலண்டரில் நேற்றைய தாளைக் கிழித்தார் மீனாட்சி சுந்தரம். அவர் மனம் கணக்குப் போட்டது. இன்னும் சரியாக ஒரு மாதம் இருபத்தி எட்டு நாட்கள் இருக்கின்றன. அப்புறம் மாலையைப் போட்டு பார்ட்டி என்கிற பெயரில் லட்டு, மிக்சர் காப்பியைத் தந்து, பிடிக்கிறதோ இல்லையோ, இந்திரன், சந்திரன் என்று புகழ்ந்து பேசி அனுப்பி வைத்து விடுவார்கள். அதற்குப் பிறகு என்ன செய்வது என்று அவருக்கு விளங்கவில்லை. பொழுதை எப்படிப் போக்குவது? காலத்தை எப்படிக் கழிப்பது? ஒன்றும் புரியவில்லை.

என்ன செய்வது? இவருக்காக மட்டும் காலச் சக்கரம் சுழலாமல் இருக்குமா? சர்க்கார் எந்திரங்கள் இயங்காமல் தூங்குமா?

கடந்த மூன்று மாதங்களாகவே, 'ரிடயர்டு' ஆகப் போகிறோம் என்கிற கவலை மீனாட்சி சுந்தரத்தை வாட்டி வதைத்தது. வெளியில் சொல்ல முடியாத வகையில் வேதனைப்படுத்திற்று. எப்படிச் சொல்வது? கேட்பவர்கள் என்ன நினைப்பார்கள்? எப்போதும் இரவில் படுத்தவுடன் தூங்கிப் போகும் இவருக்கு இந்த வினோத வேதனையால் தூக்கம் வராமல் தகராறு செய்தது.

இந்த மீனாட்சி சுந்தரம் பொதுப் பணித் துறையில் சூப்பரெண்டெண்டாக இருக்கிறார். முப்பத்தி எட்டு வருட சர்வீஸை முடித்து இன்னும் இரண்டு மாதங்களில் ஓய்வு பெறப் போகிறார். இவருடைய அலுவலகப் பணியில் இவரை இது வரையில் குறை சொன்னது கிடையாது. ஆபீஸ் வேலைகளை நாளை செய்வோம்... நாளை மறுநாள் செய்வோம்... என்று ஒத்தி வைத்ததே கிடையாது. அலுவலக நேரம் முடிந்தால் கூட, பணியில் பாக்கி இருந்தால் சீட்டை விட்டு எழுந்திருக்க மாட்டார். அன்றாட வேலைகளை அன்றே செய்து முடித்து விடுவார். 'பெண்டிங் பேப்பர்ஸ்' என்று அவருக்கு ஒதுக்கிய பணியில் இருந்தது கிடையாது.

அரசு உத்தரவுகள்; விதிகள்; சுற்றறிக்கைகள்; இலாகா சம்மந்தப்பட்ட சட்டதிட்டங்கள் முதலியவைகள் மீனாட்சி சுந்தரத்திற்குத் தலை கீழ் பாடம். அலுவலகப் பணியைத் தவிர மற்ற விஷயங்கள் இவருக்குத் தெரியாது. ஆனால் இதில் இவர் அளவிற்கு விஷய ஞானம் உள்ளவர்கள் யாரும் இருக்க முடியாது. மூன்று வருடங்களுக்கு ஒருமுறை அலுவலர்களை ஊர் விட்டு ஊர் மாற்றுவார்கள். அப்படி மாறுதல் வரும் வேளையில் மீனாட்சி சுந்தரத்தை எங்கள் ஆபீசுக்



குப் போடுங்கள்... இல்லை எங்க ஆபீஸில் போடுங்கள்... எனக்குதான் போடணும் என்று போட்டி போட்டுக் கொண்டு அவரைப் பெறுவதற்கு உயர் அதிகாரிகள் முயற்சிப்பார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.

ஆபீஸ் நிர்வாகத்தில் அசகாய சூரர் மீனாட்சி சுந்தரம். அதே நேரத்தில் வீட்டு நிர்வாகத்தில் எந்த விபரமும் தெரியாத அப்பாவி, சம்பளம் வாங்கி மனைவி விசாலாட்சி வசம் தருவதோடு சரி. பிள்ளைகளைப் படிக்க வைத்து, தேவையானவற்றை செய்து... பராமரித்து-- திருமணம் செய்தது வரையில் விசாலாட்சிதான் பார்த்துக் கொண்டாள். விசாலாட்சி அந்தக் காலத்து எஸ்.எஸ்.எல்.சி; ஆசிரிய பயிற்சியும் பெற்றவள். மீனாட்சி சுந்தரத்தின் விருப்பத்திற்கு இணங்க வேலைக்குப் போகாதவள். வீட்டு நிர்வாகமே அவளுக்கு மிகப் பெரிய வேலையாய் போயிற்று. வேலைக்குப் போகா விட்டாலும் வெளிவட்டாரப் பழக்க வழக்கங்களைப் பெருக்கி கொண்டாள். சுற்றி இருப்பவர்களிடம் சுமுகமாய் பழகுவாள். சுமுகமான உறவை வைத்துக் கொள்வாள். நிறைய பத்திரிகைகள், நூல்கள், செய்தித்தாள்கள் வகையறாக்களையும் வாசிக்கத் தவறுவதில்லை. அதனால் அவளின் உலக அறிவும் விசாலமாயிற்று. பற்பல வேளைகளில் மீனாட்சி சுந்தரம் அலுவலக வேலைகள்



**காலியாகாமல் இருந்த கால் பாட்டில் தக்காளி ஊறுகாயை, என் அம்மா மிக்ஸியில் விழுதாக அரைத்து தோசை மாவில் கலந்து தோசை செய்தார்கள். சூப்பர் தக்காளி ஊத்தப்பம் ரெடி!**

**— எஸ். லக்ஷ்மி**

࿗࿗࿗࿗࿗࿗࿗࿗࿗࿗࿗࿗࿗࿗࿗࿗࿗࿗࿗࿗࿗

அதிகமாகிப் போனதால்... டென்சனாகி வருவார். அப்பொழுது விசாலாட்சியின் பிராக்டிக்கலான பேச்சுக்கள் அவரின் மனதிற்கு இதமான வருடலாய் இருக்கும். கனமாக இருந்த மனக லேசாகிப் போன மாதிரி உணர்வை உருவாக்கிவிடும்.

அன்றும் அப்படித்தான். இரவு ஒன்பது மணி இருக்கும். சாப்பிட்டு விட்டு இயற்கைக் காற்றுத் தழுவ... ஈஸிச்சேரில் வாசலில் உட்கார்ந்து இருந்தார் மீனாட்சி சுந்தரம். எதிர்த்தார் போல் விசாலாட்சி.

"இன்னும் ஒன்னரை மாசந்தான் இருக்கு... ரிடையர்மெண்ட்ட நெனச்சா ஒரு மாதிரியா..."

"பொண்ணுக்குக் கல்யாணம் ஆகாம... பையனுக்கு வேலை கெடைக்காம... இருந்தா கவலைப்பட வேண்டியதுதான்.

நமக்கோ பொண்ணு கல்யாணம் ஆயிடுச்சு... பையனுக்கும் வேல கெடச்சிட்டு... கல்யாணமும் முடிஞ்சிருச்சு... அப்புறம் எதுக்கு ரிடையராகப் போறதப் பத்திக் கவலைப் படணும்."

"நீ சொல்றது சரிதான். ரிடையர் ஆகிறதால நமக்குப் பொருளாதாரத் தொந்தரவெல்லாம் கெடையாது. நேரமும்... பொழுதும் எப்படிப் போகுமுன்னு நெனச்சாத்தான் பயமா இருக்கு..."

"நேரம் போறதுதானா... பெரிய காரியம்... பொழுது போகலைனா.. பொதுக் காரியத்தில் ஈடுபடுங்க."

"பொதுக் காரியமுன்னா."

"அதே புரியலையா? ஆபீஸ்லதான், அலுவலர் சங்கம் மனமகிழ் மன்றமுன்னு எதுலயும் கலந்துக்கிடாம காலத்த ஓட்டிட்டீங்க... இனி மேலாவது ஈடுபடுங்க."

"அம்பத்தெட்டு வயசுக்கப்புறம் எதுல ஈடு..."

"செயலுக்கும் வயசுக்கும் சம்மந்தமில்லங்க. எல்லாம் மனசுதான் காரணம். பென்ஷனர் சங்கத்தில் சேருங்க. ஏதாவது பொறுப்பக் கேட்டு வாங்குங்க... இந்தக் காலனியில் குடியிருப்போர் சங்கமுன்னு இருக்கு... அதுல நீக்கறதுக்கு பிரச்னையா இல்ல... பக்கத்தில் லைப்ரரி இருக்கு... மெம்பராச் சேர்ந்து புஸ்தகம் எடுத்துப் படிங்க."

"இதெல்லாம் நீ சொன்ன பிறகுதான் எனக்கு நெனைவுக்கே வருது. ரிடையர்டு வாழ்க்கை எப்படிப் போகுமோன்னு கவலைப் பட்டிட்டு இருந்தேன்."

"கடல் பூரா தண்ணி இருந்தாலும்... கடல் தண்ணி கப்பலுக்குள்ள போகாத வரைக்கும் கப்பல் சாயாது. அது மாதிரிதான் கவலையும். மனசுங்கறது கப்பல். கவலைங்கிற ஓட்டை விழாத வரைக்கும் எந்தப் பிரச்னையும் தம்மள அசைக்கவே முடியாது."

"என்னமா பேசுற... இதெல்லாம் எங்க தெரிஞ்சுக்கிட்ட."

"எல்லாம் அனுபவந்தான். எத்தனை ஊருக்கு இத்தன வருஷத்தில் மாறிப் போயிருக்கோம். ஆபீஸ்லயும் எத்தன செக்ஷன் மாறி இருக்கீங்க. மாறுதல் வரும் போது இலேசான கலக்கம் இருக்கும். அப்புறம் ஊர் பழகிடுது. செக்ஷனும் உங்களுக்குப் பழகிடுது. இல்லையா. அது மாதிரிதான் ரிடையராவதும் புது செக்ஷன்... புது ஊர் போறது மாதிரி நெனைங்க சரியாகிடும்."

"................................................"

"அடுத்து இப்பெல்லாம் ரிடையர் ஆவதை யாரும் ஓய்வுன்னு கூடச் சொல்றதில்ல... தெரியுமா? பணி நிறைவுன்னுதான் சொல்றாங்க. பணி நிறைவு அடைகிறார்னுதான் பத்திரிகைல போடுறாங்க. உங்க வேலைய நிறைவு பண்ணிட்டீங்க. இளைய தலைமுறைக்கு வழிவிடுறீங்க. அவ்வளவுதான். நீங்க வேலைக்கு லாயக் கில்ல... வீட்டுக்குப் போங்கன்னு சொல்றதா அர்த்தமில்ல."

விசாலாட்சியின் பேச்சுக்கள் 'டேக் இட் ஈஸி பாலிஸி' பாணியை மீனாட்சி சுந்தரத்திற்கு நினைவு படுத்தத் தவறவில்லை.

அதுவும் அந்தப் புது செக்ஷன், புது ஊர் பழக்கம் பற்றிச் சொன்னது யதார்த்தமாய் பட்டது. "எத்தனை தடவ அனுபவப்பட்டு இருப்போம். அது அவளுக்குப் புரிந்த அளவுக்கு நமக்குப் புரியவில்லையே..." என்கிற சிந்தனைகள் அவரிடம் சிறகடித்துப் பறந்தன. அவரது மனசிற்குள் சந்தோஷப் பூங்காற்று நுழைந்து வருடியது. கடந்த பல நாட்களாக அவர் மனதைக் கவ்விக் கொண்டிருந்த கவலைகள் விடுபட்டது போன்ற நிலைமையை உருவாக்கியது.

அன்று மீனாட்சி சுந்தரம் படுத்தவுடன் உறங்கிவிட்டார்.

**பொருள் : மருந்தாகும் 'ருசியான' உணவு!**



**முதல் பரிசு ரூ. 300/-**

## கொள்ளுமாவு இனிப்புக் கொழுக்கட்டை

*தேவையான பொருட்கள் :*

வறுத்து அரைத்த கொள்ளுமாவு - 1 ஆழாக்கு
வெல்லம் - 2 ஆழாக்கு
ஏலக்காய் - 4
தேங்காய்த் துருவல் - 1 கப்
நெய் - 1 ஸ்பூன்
தண்ணீர் - 1½ ஆழாக்கு

*செய்முறை :*

தண்ணீரைக் கொதிக்க வைத்து அதில் வெல்லத்தைக் கரைய விட்டு, வடிகட்டிக் கொள்ளவும். வடிகட்டிய வெல்லத் தண்ணீரில், தேங்காய், ஏலப்பொடி நெய் இவற்றைப் போட்டுக் கொதிக்கும் பொழுது கொள்ளுமாவைப் போட்டுக் கிளறி, உருண்டைகளாகவோ, அல்லது வடை போலவோ தட்டி ஆவியில் வைக்கவும். நல்ல ருசியும், மணமுமாக இருக்கும்.



• ராணி





## கொள்ளுமாவு உப்புக் கொழுக்கட்டை

வாணலியில் எண்ணெய் விட்டு, பெருங்காயத்தூள், கடுகு, கருவேப்பிலை, பொடியாக நறுக்கிய பச்சை மிளகாய், கொத்தமல்லி போட்டு தாளித்த பின் ஒன்றரை ஆழாக்குத் தண்ணீர் விட்டுக் கொதித்த பின், அதில் ஒரு கப் தேங்காய், தேவையான உப்பு, ஒரு ஆழாக்கு வறுத்தரைத்த கொள்ளுமாவு சேர்த்துக் கிளறி எடுக்கவும். அதன் பின் கிளறிய மாவை உருண்டையாக உருட்டியோ, வடைகளாகத் தட்டியோ ஆவியில் வைக்கவும். கடச் கட நல்ல சுவையுள்ள சிற்றுண்டி.

## கொள்ளு பூரணக் கொழுக்கட்டை



ஒரு ஆழாக்கு பச்சரிசியை ஊறவைத்து, வெண்ணையாக மிக்ஸியில் அரைத்து இரண்டு ஆழாக்குத் தண்ணீர், சிட்டிகை உப்பு, ஒரு ஸ்பூன் எண்ணெய் விட்டு கொழுக்கட்டை மாவு கிளறிக் கொள்ளவும்.

**பூரணம்** : ஒரு கப் வறுத்து ஊற வைத்த கொள்ளு, இரண்டு கப் தேங்காய், இரண்டு கப் வெல்லம், ஏலக்காய் நான்கு போட்டு மிக்ஸியில் போளி பூரணம் போன்று அரைத்துக் கிளறி எடுக்கவும்.

மேல் மாவு சொப்பு செய்து, பூரணம் உள்ளே வைத்து ஆவியில்

இம்மாத

# இல்லத்தரசி

வைத்து எடுக்கவும். நல்ல சுவையான கொழுக் கட்டை ரெடி.

## முளைத்த கொள்ளுக் காரடை (வெல்லம்)

*செய்முறை :*

ஒரு கப் முளைவிட்ட கொள்ளு, ¼ கப் வறுத்து ஊறவைத்த காராமணி, ஒரு கப் தேங் காய், ஒரு ஆழாக்கு களைந்து வறுத்தரைத்த பச்சரிசி மாவு, இரண்டு கப் வெல்லம்.

காராமணி, கொள்ளு இரண்டையும் குக் கரில் வேகவிட்டு எடுத்துக் கொள்ளவும். ஒன் றரை ஆழாக்கு தண்ணீரைக் கொதிக்க வைத்து, வெல்லத்தைக் கரையவிட்டு, அதில் தேங்காய், காராமணி, கொள்ளு, ஏலப்பொடி, அரிசி மாவு போட்டுக் கிளறி எடுக்கவும். வெந்த மாவை அடைகளாகத் தட்டி, ஆவியில் வைத்து எடுக் கவும்.

## கொள்ளு மாவு தோசை

ஒரு கரண்டி கொள்ளு மாவு, ஒரு கரண்டி அரிசி மாவு, ஒரு கரண்டி மைதா மாவு, தேவை யான உப்பு, ஒரு ஸ்பூன் ஜீரகம், இரண்டு ஆர்க்கு கருவேப்பிலை, ஒரு கரண்டி புளித்த மோர் போட்டுக் கரைத்து எண்ணெய் விட்டுக் கரைத்த தோசை வார்க்கலாம். மொறு மொறு வென்று நன்றாக இருக்கும்.

## கொள்ளுப்பொடி

கொள்ளை நன்றாக வறுத்து, அப்பளக் குழவியில் நடத்தி விட்டுத் தோல் நீக்கவும். தோல் நீக்கிய கொள்ளுப் பருப்பில், பெருங் காயம், மிளகு, மிளகாய் வற்றல் வறுத்து சேர்க் கவும். தேவையான உப்பு போட்டு மிக்ஸியில் அரைக்கவும். சாதத்தில் பருப்புப்பொடி போல் பிசைந்து சாப்பிடலாம்.

## கொள்ளு தால்

கொள்ளை ஊற வைத்து முளைகட்டவும். ஒரு வெங்காயம், இரண்டு பல் பூண்டு, ஒரு விரல் இஞ்சி, ஒரு தக்காளி, நாலு பச்சை மிள காய், ஒரு லவங்கம், ஒரு ஏலக்காய், ஒரு விரல் பட்டை இவற்றை மிக்ஸியில் அரைக்கவும். குக் கரில் எண்ணெய் விட்டு, ஜீரகம் தாளித்து, மசாலா, ஒரு சிட்டிகை மஞ்சள் பொடி, ஒரு சிட்டிகை மிளகாய்ப் பொடி போட்டு நன்றாக கருள கலர் மாறி பொன்னிறம் வரும் வரை வதக்கி முளைகட்டிய கொள்ளு, தோல் சீவி வெட்டிய இரண்டு உருளைக் கிழங்கு துண்டு களையும் போட்டு ஒருமுறை கிளறி விட்டுத் தண்ணீரும் விட்டுத் தேவையான உப்புப் போட்டுக் குக்கரை மூடவும். வெந்து இறக்கிய வுடன் கொத்தமல்லியைப் பொடிப் பொடியாக நறுக்கிப் போடவும். சப்பாத்திக்குத் தொட்டுக் கொள்ளலாம்.

## கொள்ளு டோக்ளா

இரண்டு கப் கொள்ளு, ஒரு கப் கடலைப் பருப்பை நன்றாக ஊற வைத்து, நாலு பச்சை மிளகாய், தேவையான உப்பு சேர்த்து அரைத்து, அரை ஸ்பூன் பேகிங் சோடா சேர்த்து நன் றாகக் கலக்கி வைக்கவும். மறு நாள் புசுபுசு வென்று மாவு பொங்கி வந்து இருக்கும். பொங்கிய மாவை நன்றாகக் கலக்கி, அதில் பெருங்காயத்தூள், கடுகு, பச்சை மிளகாய் கரு வேப்பிலை, கொத்தமல்லி தாளித்துக் கலக்கவும். குக்கர் உள்ளே வைக்கும் பாத்திரத்தில் எண் ணெய் தடவி மாவை விட்டு, குக்கரில் வைத்து எடுக்கவும். வெயிட் போட வேண்டாம். ஆறிய பிறகு துண்டங்கள் போடவும். கொஞ்சம் துருவிய தேங்காய், பச்சைக் கொத்தமல்லி (பொடிப் பொடியாக நறுக்கியது) தூவி, துண்டங்களை அலங்கரிக்கவும். பஞ்சு மாதிரி மிருதுவாகவும், சாப்பிட சுவையாவும் இருக்கும்



**காலண்டர்கள் வர ஆரம்பித்திருக்கும். அவற்றில் மேலேயிருக்கும் விளம்பர வாசகங்கள் இல்லாமலிருந்தால் நன்றாகயிருக்கும் என்று ஒரு சிலர் கருதுவார்கள். காலண்டரின் மேலேயிருக் கும் இடத்திற்குத் தகுந்தமாதிரி நல்ல அழகான வாழ்த்து அட்டை (அ) இயற்கை காட்சியை அவரவர் கற்பனைக்கேற்றவாறு தகுந்த அளவில் வெட்டி ஒட்டி விடவும்.**

**— விஜயராணி**

கொள்ளு போட்ளா.

## கொள்ளு உருண்டை

இருநூறு கிராம் கொள்ளு, நூறு கிராம் வேர்க்கடலை, 250 கிராம் வெல்லம்.

கொள்ளை நன்றாக ஊற வைத்து களைந்து வடியவைத்து நிழலுணர்த்தலாகப் போட்டு வைக்கவும். வெறும் சட்டியில் போட்டு வறுக்க லாம். பட்டாணிக் கடையிலும் கொடுத்து வறுக்கலாம். வறுத்த கொள்ளை தோல் நீக்கி, தோல் நீக்கிய வேர்க்கடலையுடன் சேர்த்து, வெல்லப் பாகு வைத்து கலந்து உருட்டவும். சாப்பிட சுவையாக இருக்கும்.

— நிர்மலா மாத்ருபூதம், சென்னை - 44.

## இரண்டாம் பரிசு ரூ. 200/–

## முள்ளு முருங்கை இலை அடை

*தேவையான பொருட்கள் :*

புழுங்கல் அரிசி - 1 கப்
பச்சை அரிசி - ½ கப்
சின்ன சீரகம் - 5 ஸ்பூன்
மிளகு - 10
உப்பு - தேவைக்கேற்ப
தேங்காய் மூடி - ½
துவரம் பருப்பு - ¼ கப்
கடலை பருப்பு - ¼ கப்
உளுத்தம் பருப்பு - 4 ஸ்பூன்
முள்ளு முருங்கை இலை - 30 (நரம்பு நடுவில் இருக்கும் அதை அகற்றி விட்டு நைசாக நறுக்கவும்.)
சின்ன வெங்காயம் - 25 நைசாக நறுக்கவும்
மஞ்சள் பொடி - சிறிதளவு
ரிபைன்ட் ஆயில் அல்லது நெய் - தேவையான அளவு (வேகவைக்க)

*செய்முறை :*

புழுங்கல் அரிசி, பச்சை அரிசி, உளுத்தம் பருப்பு, கடலை பருப்பு, துவரம் பருப்பு, ஊற வைத்து நைசாக அரைக்க வேண்டும். அரைக் கும் போது மிளகு, சீரகம் உப்பு போட்டு அரைக்கவும். பின்பு அதில் நைசாக நறுக்கிய முள்ளு முருங்கை இலை, சிறிய வெங்காயம் நறுக்கியது தேங்காய்ப்பூ இவற்றைக் கலந்து அத் துடன் மஞ்சள் பொடி போட்டு தோசை மாவு பதத்தில் வைத்துக் கொண்டு தோசை கல்லில் மாவை ஊற்றி அதில் எண்ணெய் ஊற்றி இரு புறமும் சிவக்க வேக விடவும்.

இது மழை காலத்தில் சளி அதிகம் இருப்ப வர்களுக்கு அதைப் போக்குவதற்கு சுலபமான மருந்து. பிள்ளைகள் மருந்தாகக் கொடுத்தால் சாப்பிட மாட்டார்கள். இப்படிச் செய்தால் எளிதில் சாப்பிட்டு விடுவார்கள். வாரம் இரண்டு முறை இந்த அடை கொடுத்தால் சளி பறந்து போய்விடும்.

— வி. ருக்மணி, காரைக்குடி - 1.

**தேங்காய்ப் பர்பி செய்து இறக் கும் பொழுது சிறிது கடலை மாவு தூவி கிளறி இறக்கினால் சேர்ந் துள்ளது போலவும், சுவை அதிக மாகவும் இருக்கும்.**

**— க. ரேகா சுகுமார்**

✈✈✈✈✈✈✈✈✈✈✈✈✈✈✈✈✈

## மூன்றாம் பரிசு ரூ. 100/–

## பிடி கருணைக் கிழங்கு கிரேவி

என் கணவர் மூல வியாதியால் மிகவும் வேதனைப்பட்டார். டாக்டர் கருணைக்கிழங்கு தினமும் சாப்பிடக் கூறினார். கருணைக்கிழங்கு குழம்பு, மசியல் இதை இரண்டை மட்டும் மாற்றி மாற்றி வைத்தேன். கருணை என்றாலே வெறுத்துப் போய் விட்டார். டாக்டரோ கருணை மாதிரி மூல வியாதிக்கு மருந்து இல்லை என்றார். பார்த்தேன் கருணையில் புது விதமாக நிறைய ஐயிட்டங்கள் செய்ய ஆரம் பித்தேன். இப்போது ஒரே கருணை மயம்தான்! எல்லாருமே விரும்பிச் சாப்பிட ஆரம்பித்து விட்டனர்.

*தேவையான பொருட்கள் :*

கருணை - ¼ கிலோ
பெ. வெங்காயம் - 2
தக்காளி - 2
எலுமிச்சை - ½ மூடி
மல்லி பவுடர் - 1 டேபிள் ஸ்பூன்
மிளகாய்த் தூள் - 1 டீஸ்பூன்
இஞ்சி - 1 துண்டு }
பூண்டு - 2 பற்கள் }
பட்டை, சோம்பு, கிராம்பு - சிறிது }
இது மூன்றையும் அரைத்துக் கொள்ளவும்.
பொரிப்பதற்கு எண்ணெய் - சிறிதளவு
டால்டா - 2 டேபிள் ஸ்பூன்

*செய்முறை :*

கருணையை அரிசி கழுவிய நீரில் ½ மணி நேரம் ஊற வைத்து விடுங்கள். அரிப்பு இருந்தால் போய்விடும். பின் தோல் சீவி நீளவாக்கில் இரண்டாக வெட்டிக் கொள்ளவும். பின் அதை அரை வட்டங்களாக தகடு தகடாக வெட்டி, எண்ணெயில் பொன்னிறமாக வறுத்து எடுத்துக் கொள்ளவும். வெங்காயத்தை குறுக்கு வாட்டில் நீளமாக வெட்டிக் கொள்ளவும். வாணலியில் டால்டா ஊற்றி இஞ்சி, பூண்டு, பட்டை சோம்பு மசாலாவை போட்டு வாசனை வரும் வரை வதக்கி வெங்காயத்தையும் தக்காளியையும் போட்டு வதக்கவும். பின் அதில் சிறிது மஞ்சள் தூள், 1 டீஸ்பூன் மிளகாய் தூள், மல்லிபவுடர் 2 டேபிள் ஸ்பூன் போட்டு வதக்கி அதில் பொரித்தெடுத்த கருணைகளைப் போட்டு உப்பு போட்டு நன்கு கொதிக்க விடவும். கிரேவியாக வந்தவுடன் அடுப்பிலிருந்து இறக்கி மல்லித் தழை போட்டு ½ மூடி எலுமிச்சம் பழம் பிழிந்து விடவும்.

## கருணை ஸ்டப்டு சப்பாத்தி

*தேவையான பொருட்கள் :*

பிடி கருணை - ¼ கிலோ
மிளகாய்த் தூள் - 2 ஸ்பூன்
பெரிய வெங்காயம் - 2
கரி மசாலா பவுடர் - 1 ஸ்பூன்
கோதுமை மாவு - ¼ படி.

*செய்முறை :*

பிடி கருணையை குக்கரில் 10 நிமிடம் வெயிட் போட்டு வேகவைத்துக் கொள்ளுங்கள். தோலுரித்து வெந்த கிழங்குகளை மசித்து வைத்துக் கொள்ளவும். வாணலியில் 2 டேபிள் ஸ்பூன் எண்ணெய் ஊற்றி கடுகு, கறுவேப்பிலை கரிமசாலா பவுடர் போட்டு லேசாக வதக்கவும். பின் பொடியாக நறுக்கிய வெங்காயத்தையும் போட்டு கருள வதக்கவும். வதங்கியபின் சிறிது மஞ்சள்தூள், உப்பு, மிளகாய்த் தூள் போட்டு ஒரு கிண்டு கிண்டி மசித்த கிழங்கை அதில் போட்டு நன்கு கிளறவும். நீர் இருக்கக் கூடாது. பூரண பதத்திற்கு வந்தவுடன் பொடியாக நறுக்கிய மல்லித் தழையைத் தூவி இறக்கவும்.

கோதுமை மாவை சப்பாத்திக்குப் பிசைவது போல் பிசைந்து சிறு சிறு உருண்டைகளாக உருட்டவும். பின் ஒரு உருண்டையை கையில் எடுத்துத் தட்டி நடுவில் பூரணத்தை வைத்து மெதுவாக தேய்க்கவும். பொன்னிறமாக தோசைக்கல்லில் போட்டு எடுக்கவும்.

இந்த ஸ்டப்டு சப்பாத்தி சிறு குழந்தைகள் கூட விரும்பி உண்ணும். மல்லிச் சட்னியுடன் பரிமாற ருசி பிரமாதமாக இருக்கும்.

## கருணை கட்லெட்

*தேவையான பொருட்கள் :*

பிடி கருணை - ¼ கிலோ
துருவிய காரட் - ½ கப்
துருவின கோஸ் - ½ கப்
பெ. வெங்காயம் - 2
வத்தல் - 3
மிளகு - 1 ஸ்பூன்
கரிமசாலா பவுடர் - 1 ஸ்பூன்
கறுவேப்பிலை - சிறிது
உப்பு - தேவையான அளவு
ரஸ்க் தூள் - ½ கப்

*செய்முறை :*

கருணைக் கிழங்கை வேகவைத்து தோலுரித்து மசித்துக் கொள்ளவும். வாணலியில் எண்ணெய் ஊற்றி பெ. வெங்காயம் வத்தல் மிளகு போட்டு வதக்கவும். நன்கு வதங்கிய பிறகு கரிமசாலா பவுடர் போட்டு மிக்ஸியில் ஒரு சுற்று சுற்றி எடுக்கவும். அதோடு துருவிய கேரட், துருவிய கோஸ் மசித்த கிழங்கு பொடியாக நறுக்கிய கறுவேப்பிலை உப்பு போட்டு நன்கு பிசையவும். பின் சிறு சிறு உருண்டைகளாக்கி உள்ளங்கையில் வைத்து ஒரு அழுத்தம் கொடுத்து ரஸ்க் தூளில் பிரட்டி எண்ணெயில் பொரித்தெடுக்கவும்.

— அமலி எட்வர்ட், மதுரை - 19.

**ஒரு நாள் சட்னிக்கு அரைத்தேன். எப்போதுமே முதலில் தண்ணீர் விடாமல் எல்லா பொருட்களையும் மிக்ஸியில் ஓட விட்டுப் பிறகு தண்ணீர் சேர்ப்பது என் வழக்கம். மிக்ஸியில் எல்லாம் தூளான பிறகு பார்த்தால் சட்னி அதிகமாக இருந்தது போல இருந்தது. தண்ணீர் விடாமல் நன்கு தூளாக்கிய இந்தப் பொடியைக் கொஞ்சம் எடுத்து வைத்துவிட்டு மீதியில் தண்ணீர் விட்டேன். இந்தப் பொடியை நான்கு நாட்களுக்குப் பிறகு சட்னி தேவைப்பட்ட போது நீர் கலந்து உபயோகித்தேன். மணம், சுவை மாறாத அசல் சட்னி கிடைத்தது.**

**— கே. பாக்யலக்ஷ்மி**



கோதுமை ரவை, சேமியா, மற்றும் சாதா ரவையில் கேசரி செய்யும் பொழுது ஒரு துண்டு பால்கோவா சேர்த்து செய்து பாருங்கள். பாலில் செய்தது போல் கேசரி சுவை கூடுதலாக இருக்கும்.

— பாலா



## ஆறுதல் பரிசு ரூ. 50/–

## சுக்கு அன்னம்

*தேவையான பொருட்கள் :*

அரிசி - ½ கப்
நல்ல பால் - 1 டம்ளர் (200 மி.லி)
சுக்கு - ½ டீஸ்பூன்
வெ. பூண்டு - 5 பற்கள்
உப்பு - ½ டீஸ்பூன்
வெல்லம் - 2 அச்சு

*செய்முறை :*

அரிசியைக் கழுவி சுத்தம் செய்து, ½ டம்ளர் தண்ணீர் அரை டம்ளர் பாலுடன் ஒரு கிண்ணத்தில் எடுக்கவும். பின் சுக்குப் பொடி, வெ. பூண்டு பற்கள் உரித்தது, சிட்டிகை உப்பு சேர்த்து, மேற் சொன்ன கலவையில் போடவும். எல்லாவற்றையும் குக்கரில் 3 விசில் வரை வேக விடவும். குக்கர் ஆறிய பின், கிண்ணத்தில் உள்ளவற்றை கரண்டியால் சிறிது மசிக்கவும். உப்பு சுவை விரும்புவர்கள் மேலும் சிறிது உப்பு, ஆறின மிருந்துள்ள பாலைக் கலந்து உண்ணவும். இனிப்பு சுவை விரும்பு பவர்கள் 2 அச்சு வெல்லத்தைத் தட்டிக் கலந்து, பின் பாலையும் கலந்து உண்ணவும்.

குறிப்பு : இது மிக அருமையான, வாயுத் தொல்லை நீக்கும். பசியைத் தூண்டி, செரிக்கும் ஆற்றலை ஊக்கு விக்கும் எளிய சத்தான காலை (அ) இரவு உணவாகும்.

வாரம் ஒருமுறை பெரியவர்களும், சிறியவர்களும் உண்ண உகந்த மருத்துவ குணமிக்க சுவையான எளிய உணவு.

— வி. ஜெகதா, செகந்திராபாத்.

## ஆறுதல் பரிசு ரூ. 50/–

## பூண்டு, மிளகு கஞ்சி

*தேவையான பொருட்கள் :*

புழுங்கல் அரிசி - ¼ கிலோ
பாசி பருப்பு - 100 கிராம்
கொள்ளு - 25 கிராம்
எள்ளு - 5 கிராம்
து. பருப்பு - 5 கிராம்
பூண்டு - 3 (பெரியதாக, முழு பூண்டு)
மிளகு - 5 கிராம்
சீரகம் - 1 ஸ்பூன்
கருவேப்பிலை,
கொத்தமல்லி - 1 கட்டு

*செய்முறை :*

புழுங்கல் அரிசியை லேசாக வறுத்து சுத்தம் செய்து கொள்ளவும். பாசிப்பருப்பு, கொள்ளு, எள்ளு, து. பருப்பு, பூண்டு, மிளகு, சீரகம் எல்லா வற்றையும் தனித்தனியாக எண்ணெய் ஊற்றாமல் பொன் முறுகலாக வறுத்துக் கொள்ளவும். இவை எல்லாவற்றையும் அளந்து குக்கரில் ஒரு பாத் திரத்தில் வைத்து ஒன்றுக்கு மூன்று பங்காக நீர் விட்டு நன்கு வேகவிட்டு இறக்கும் போது கரு வேப்பிலை கொத்த மல்லியை நன்கு பொடி யாக நறுக்கிப் போட்டு சிறிது நேரம் மூடி வைத்து அதனுடன் தேவையான அளவு உப்பையும் சேர்த்து இறக்கினால் உங்கள் வீட்டில் ஏதாவது விசேஷமா என்று அக்கம் பக்கத்தில் அனைவரும் விசாரிக்கும் அளவிற்கு வாசனை மிகுந்த, சத்தான, எளிமை யான ருசியான சளிக்கும், தொண்டை வலிக்கும், ஜீரணத்திற்கும் ஏற்ற மருந்தாகும் ருசியான கஞ்சி ரெடி. இதற்கு தேங்காய் சட்னி செய்து சாப்பிட சுவை மிகும்.

— ப. ராணி பரமசிவம், மணச்சநல்லூர்.

## பிரசுரத்திற்கு....

## நன்னாரி ஷேக்

*தேவையான பொருட்கள் :*

நன்னாரி - 100 கிராம்
தனியா - 50 கிராம்
சுக்கு - 10 கிராம்
ஏலக்காய் - 5 கிராம்

*செய்முறை :*

எல்லா சாமான்களையும் வாணலியில் எண்ணெய் விடாமல் தனி, தனியாக வறுத்து பின் பொடி செய்து ஒரு காய்ந்த பாட்டிலில் பத்திரப்படுத்திக் கொள்ளவும்.

தேவையான பொழுது இரண்டு ஸ்பூன் பொடியை அரை டம்ளர் நீரில் நன்கு

# Sathya®

## FURNITURE

**LIFE TIME INVESTMENT BEYOND COMPARISON**

*Quality Is Our Priority*

**SILVER JUBILEE YEAR**

**SATHYA CORPORATION**
69, ROYAPETTAH HIGH ROAD
MYLAPORE, MADRAS-4
PH:8547240/830994/8547630
FAX : 855 2929

Branch : 68 Purasawalkam High Road
Purasawalkam Madras - 600 007
PHONE: 6425299

ALSO BRANCHES AT

| TIRUCHI | COIMBATORE |
| --- | --- |
| Ph : 24414 | Ph : 217368 |



கொதிக்க வைத்து பின் வடிகட்டி அத்துடன் பால், பனங்கற்கண்டு கலந்து பருகலாம். இது சுவையாக மட்டுமல்ல மணமாகவும் இருக்கும். குளிர் காலங்களில் சூடாகவும், வெயில் காலங்களில் குளிர்சாதன பெட்டியில் வைத்து சில்லென்றும் பருகலாம்.

நன்னாரி நம் உடல் வெப்பத்தை நீக்கி உடலை குளிர்ச்சியாகவும், இரத்த ஓட்டத்தை சீராக்கவும் உதவுகிறது. தனியாவும் இரத்தத்தில் உள்ள மலினங்களை நீக்குகிறது. உடல் வெப்பத்தையும் அகற்ற உதவுகிறது. சுக்கு உடலில் உள்ள சீரண மண்டலத்தை சீராக இயக்க உதவுகிறது.

இப்பானத்தை சிறப்பாக அதிக குருதியழுத்தம் உடையவர்கள் வெள்ளை நோயால் துன்பப்படும் பெண்கள், மற்றும் நீர் எரிச்சல், நீர்சுருக்கு இவற்றால் கஷ்டப்படுபவர்களும், அதிக உடல் வியர்வை உடையவர்களும் இரு வேளை சாப்பிட சிறந்த பலன் கிடைக்கும்.

காப்பி, டீ போன்ற பானங்களுக்கு அடிமையானவர்கள் ஒரு வேளையாவது இப்பானத்தை பருக அதன் சுவையையும் மணத்தையும் விரும்பி இதைப் பருக ஆரம்பிப்பார்கள்.

— டாக்டர் இராம். பத்மப்ரியா, சென்னை.
(சித்த மருத்துவர்.)

***ஜீரணத்திற்கு உடனே ஒரு மாத்திரையை முழுங்காமல் இந்த உணவைச் சாப்பிட்டுப் பாருங்கள் —***

## பொரித்த ரசம்

*தேவையான பொருட்கள் :*

மிளகாய் வற்றல் - 4
மிளகு - 10
பெருங்காயம் - 5 மிளகு அளவு
கருவேப்பிலை - 3 கொத்து
கண்டந்திப்பிலி - 2 குச்சி

*செய்முறை :*

மிளகாய் வற்றல், மிளகு, பெருங்காயம் பாதி, கருவேப்பிலை கண்டந்திப்பிலியை வெறும் வாணலியில் வறுத்து மிக்சியில் தண்ணீர் விட்டு அரைத்துக் கொள்ள வேண்டும். ரசம் வைக்கும் ஈயச்செம்பு அல்லது வேறு பாத்திரத்தில் நைசாக அரைத்ததை இரண்டு டம்ளர் தண்ணீரில் கரைத்துத் தேவையான உப்பைப் போட்டு பொங்கி வரும் போது மீதி இருக்கும் கறிவேப்பிலையைப் போட்டு இறக்கி விடவும். இதற்கு தாளித்துக் கொட்ட வேண்டாம்.

ஜுரம், உடம்பு வலி தலை வலி எதுவாக இருந்தாலும் அல்லது எல்லாமே சேர்ந்து இருந்தாலும் சரி ஒரு கரண்டி குறைவான சாதத்தைக் கிண்ணத்தில் போட்டு இந்த ரசத்தை ஊற்றி நன்றாகக் கரைத்து நீர்க்க சூடாக குழந்தைகளுக்கும் மத்திய வயதினருக்கும் முதியோருக்கும் கொடுக்கலாம்.

சாப்பிட்டு ஒரு தூக்கம் போட்டால் எழுந்தவுடன் உடம்பு கலகல என்று ஆகி அடுத்து எந்த வேலையைச் செய்யலாம் என்று தோன்றும்.

கீழ் கண்ட பொருள்களை வறுத்து பொடி செய்து வைத்துக் கொண்டு வேண்டுமென்ற சமயத்தில் ஒரு டம்ளர் கொதிக்கும் வெந்நீரில் தேவையான உப்பையும் போட்டுக் குடிக்கலாம்.

**குழந்தைகளின் கொலுசு அழுக்காகி விட்டால் புளிக் கரைசலில் ½ மணி நேரம் ஊறவிட்டு பிரஷ் செய்தால் நகைக் கடையிலிருந்து அப்போதுதான் வாங்கி வந்த மாதிரி பளபளக்கும் கொலுசுகள்.**

**— கே. பாக்யலக்ஷ்மி**

## மருந்துப் பால்

*தேவையான பொருட்கள் :*

சித்தரத்தை - 10 கிராம்
அதிமதுரம் - 10 கிராம்
மிளகு - 10 கிராம்
சுக்கு - 10 கிராம்
மஞ்சள் பொடி அல்லது
குங்குமப்பூ - ¼ டீஸ்பூன்
விரளி மஞ்சள் - 2
பனங்கல்கண்டு - தேவையான அளவு

*செய்முறை :*

மேற்கண்ட பொருள்களை வெறும் வாணலியில் வறுக்க வேண்டும். சித்தரத்தை, அதிமதுரம், மஞ்சள், சுக்கை நசுக்கி விட்டு வறுக்க வேண்டும். பொடி செய்து வைத்துக் கொண்டால் தினமும் இரவு நல்ல சூடான பாலில் ஒரு டீஸ்பூன் பொடியைப் போட்டு பனங்கல்கண்டு ஒரு டீஸ்பூன் போட்டு ருசியாக குடிக்கலாம். நல்ல ஜலதோஷத்தில் திணறும் போது தினமும் இரவு இப்பாலைக் குடித்தால் இருமல் தொந்திரவு தூங்கும் நேரத்தில் இருக்காது. விடியற்காலையில் இருமலில் சளியெல்லாம் கரைந்து வெளியே வரும். 4 நாளில் நல்ல குணம் தெரியும். வயது வரம்பு இல்லாமல் கொடுக்கலாம்.

— ஆர். கனகதாரா, சென்னை - 33.

# வலிப்பு நோய் வருவது ஏன்?

'ஜன்னி', 'காக்காய் வலிப்பு' என்று நோய்களின் பெயரைக் கேட்டதுமே மனதில் திகில், படபடப்பு வந்து விடுகிறது. மூளை தொடர்புடைய இந்நோயை குணப்படுத்த நோயாளிகள் தொடர் முயற்சி செய்தும் வாழ்நாள் பூராவும் மாத்திரைகள் சாப்பிட வேண்டிய நிலை ஏற்படுகிறது.

ஜன்னி எனப்படும் வலிப்பு வகை நம் உடம்பை பாதிக்கும் நோய்களின் முடிவாக, குறிப்பாக வருகிறது. குழந்தைகளுக்கு அதிகமான காய்ச்சல், பல் முளைக்கும் போது, குடலில் பூச்சிகள் இருந்தால் பொதுவாக ஜன்னி ஏற்படுகிறது. இதோடு மட்டுமில்லாமல் மூளையை பாதிக்கக்கூடிய கட்டிகள், மூளைக்காய்ச்சல், மூளையின் வளர்ச்சிக் குறைவு போன்றவற்றாலும் ஜன்னி ஏற்படலாம். மூளையை பாதிக்கும் நோய்கள் சிறுவர், பெரியவர்களை பாதிக்கும். பொதுவாக பெரியவர்களுக்கு இரத்தக் கொதிப்பு, நரம்பு மண்டல பால்வினை நோயால் ஏற்படலாம். பிரசவ காலத்தில் பெண்களுக்கு 7 - 9 மாதத்தில் முகம், கை, கால்களில் வீக்கம் ஏற்பட்டால் நன்முறையில் சிகிச்சை பெற வேண்டும். இரண ஜன்னி காயம் பட்டால் ஏற்படும். இந்த வகை வலிப்பு நோயை நோயின் காரணம் அறிந்து சிகிச்சை அளித்தால் குணம் பெறுவார்கள்.

உண்மையில் வலிப்பு நோய் என்று கூறிவிட்டால் காக்காய் வலிப்புதான். இதற்கு "எபிலெப்சி" என்று மருத்துவ பெயர். இது சில குடும்பங்களில் பாரம் பரியமாக தொடர்கிறது. இந்த வகை நோயாளி களுக்கு உடம்பு கோளாறுகள் எதுவுமே இருக்காது. மூளையில் செயலாக்க படம், ஸ்கேன், போன்றவை நார்மலாக இருக்கும். இந்த வலிப்பு வகையால்தான் ஏராள மானோர் பாதிக்கப்பட்டு உள்ளார்கள்.

வலிப்பு உண்டாவதற்கு முன்பு ஒரு வித்தியாசமான உணர்வு, வாசனை, ருசி, சத்தம், சிலருக்குக் குமட்டல் ஏற்படும். குடும்பத்தில் பார்த்துப் பழகியவர்கள் எளிதில் கண்டு பிடித்து விடுவார்கள். நோயாளி திடீரென்று ஏதாவது ஒரு சத்தம் போட்டுக் கொண்டு கீழே விழுந்து விடுவார். சுயநினைவு அகன்று விடும். முகம் வெளுத்து, மூச்சு நின்றுவிடும். உடம்பு செயலற்று இருக்கும். சில சமயங்களில் நாக்கை கடித்துக் கொள்வார்கள்.

அடுத்தபடியாக தசைகள் வெட்டி வெட்டி இழுக்க ஆரம்பித்து விடும். வாயில் நுரை தள்ளலாம். சிலர் மல ஜலம் கழித்து விடுவார்கள். இந்நிலை வலிப்புத் தன்மையை பொறுத்து நீடிக்கும். பிறகு தானாக நின்றுவிடும். நோயாளி சுயநினைவின்றி ஆழ்ந்த உறக்கத்தில் இருப்பது போல இருப்பார். சில மணி நேரத்தில் மிகுந்த களைப்பு, குழப்பம் தலைவலியுடன் எழுந்திருப்பார். இந்நிலை சில நாட்கள் கழித்து தொடரும்.

வலிப்பு நோயில் ஒரு வித்தியாசமான வகையும் உண்டு. ஒரு சிலருக்கு உட்கார்ந்த இடத்தில் என்ன நடக்கிறது என்று தெரியாது. கவனமில்லாமல் உற்று பார்த்தபடி உட்கார்ந்து இருப்பார்கள். இது ஒரு சில வினாடிகள், நிமிடங்கள்தான். பிறகு என்ன நடந்தது என்று கேட்பார்கள். நிலைமையை புரியவைத்தால்



**டாக்டர் ஆர். ஞான சம்பந்தம்**



எறும்பு உட்புகக்கூடிய சர்க்கரை, பலகார, அடுக்கு - டப்பா, பாட்டில் போன்றவற்றை என்ன தான் இறுக்கமாக மூடி வைத்தாலும், பேப்பர் போன்றவற்றைக் கூட ஒட்டைப் போட்டு எறும்புகள் உட்புகுந்து விடும். தண்ணீரில் வைப்பது, எறும்பு மருந்து போடுவதென்பதெல்லாம் பல சமயங்களில் சரியாயிருக்காது. அப்படிப்பட்டதில்லாடி எறும்புகளுக்கு அல்வா கொடுக்க இதோ ஒரு எளிய வழி. ஒரு பூண்டுப் பல் எடுத்து கையினாலேயே நசுக்கி மூடிப் பகுதிக்கு சற்று கீழே வளையம் போல் சுற்றி தடவி விட்டால் எறும்புகள் அண்டவே அண்டாது.

— த. சாந்தி

❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖

வித்தியாசமான உணர்வுகளை கூறுவார்கள். சிலர் விசுக்கென்று தள்ளியது போல் இருந்தது என்பார்கள்.

வலிப்பு ஒரு சிலருக்கு பௌர்ணமியின் போது ஏற்படலாம். இரவு நேரங்களில் மட்டும் ஏற்படுவதும் உண்டு. வலிப்பு நோய் பயம், நேசபிரிவினால் துக்கம் போன்ற உணர்ச்சிகளாலும் சிலருக்கு சமயங்களில் உண்டாகலாம். ஒரு சிலருக்கு வாழ்க்கையில் ஏற்பட்ட கசப்பான மனதிற்குப் பிடிக்காத உணர்வுகள் திரும்பிப் பார்க்க நேர்ந்தால், மனத்தில் பழைய நினைவு உண்டாகி வலிப்பு உண்டாகி உள்ளன.

வலிப்பு நோய்க்கு உள்ள காரணத்தை அறிந்து சிகிச்சை பெறுதல் நலம். நோய்களால் ஏற்படும் வலிப்புகள் நோய்கள் மறைந்ததும் மீண்டும் ஏற்படாது. குழந்தைகளுக்குக் காய்ச்சல், வயிற்றுப் போக்கு போன்றவைகளை அதிகம் வளர விடாமல் உடனுக்குடன். சிகிச்சை செய்து கொள்ள வேண்டும்.

காய்ச்சல் அதிகமாகி ஜன்னி வந்து விடலாம். நான்கைந்து ஆண்டுகள் தொடர்ந்து காய்ச்சல் இல்லாத போதும் மருந்துகள் கொடுக்காதீர்கள். பல்வேறு தொந்தரவுகளை உண்டாக்கும். உடல் நலக்குறைவு அதிகமானால் மட்டுமே ஜன்னி வருகிறது.

வலிப்பு நோயாளிகள் வெளியில் செல்லும் போது மற்றவர் துணையுடன் செல்வது நல்லது. வாகனங்கள் ஓட்டுதல், நீச்சல் போன்றவைகளை தவிர்க்க வேண்டும். வலிப்பு நோய் வந்தவுடன் பதட்டப்படாமல் அருகில் உள்ள பொருள்களை எடுத்து விடுங்கள். ஏனென்றால், கூரிய பொருள்கள் வலிப்பின் போது காயப்படுத்திவிடும். வாயில் கர்சிப் அல்லது துணியை மடித்து வைக்கலாம். இது நாக்கைக் கடித்துக் கொள்வதைத் தடுக்கும்.

இறுக்கமான உடைகளை தளர்த்தி விடுங்கள். வலிப்பு நோயாளிகள் தங்கள் முழுவிலாசத்தை ஒரு அட்டையில் எழுதி வைத்துக் கொள்ளுதல் நல்லது.

வலிப்பு நின்றதும் வாயில் உள்ள நுரையை அகற்றி, ஒருக்களித்து படுக்க வைக்கலாம். நெருங்கிய இரத்த சம்பந்த திருமணங்களை தவிருங்கள். வலிப்பு உடனடி உத்தரவாத சிகிச்சை ஆங்கில மருந்துகளில்தான். ஆனால் மீண்டும் வராமல் குணப்படுத்த முடியாது. ஹோமியோபதி மருந்துகள் மனநல அடிப்படையில் கொடுக்கப்படுகின்றன. வலிப்பு நோயாளிகள் உணரும் வித்தியாசமான உணர்ச்சிகளின் அடிப்படையில் வார்த்தைகளால் விவரிக்க முடியாத கனவுகளின் அடிப்படையில் வழங்கப்படுவதால் முழுமையாகக் குணம் கிடைக்கிறது.

சிகிச்சை பெற்ற ஒருசில நாளில் குணம் பெற்றுவிட வேண்டும் என்பது அனைவரின் எதிர்பார்ப்பு. நீடித்த நோய்கள் சிலகாலம் சிகிச்சை பெற வேண்டும். அதுவும் பக்கவிளைவில்லாமல் சிகிச்சை பெறுதல் அவசியம். அது ஹோமியோபதி மருத்துவத்தால் நிச்சயம் முடியும்.

குழந்தைகளுக்கும், இளம் வயதினருக்கும் மிக எளிமையாக குணமாகிறது என்பது அனுபவத்தில் கண்ட உண்மை. உங்கள் சந்தேகங்களை அருகில் உள்ள ஹோமியோபதி மருத்துவரிடம் கேட்டு சிகிச்சை பெறுங்கள்.

# அக்காவின் ஆசி வந்த கூறைப் புடவை

நம்மில் பலருக்கு சின்னச் சின்ன (மூட) நம்பிக்கைகள் உண்டு. ராசியான ஷர்ட், பேண்ட், ராசியான பேனா, இதெல்லாம் ஒரு ஸெண்டிமெண்ட். எனக்கும் உண்டு. எஸ்.எஸ்.எல்.சி. பரீட்சை மொத்தம் பத்து நாட்கள். முதல் நாள் பரீட்சைக்குப் போட்டுக் கொண்டு போன வெள்ளை பேண்ட், நீல நிற ஷர்ட்... பரீட்சை நன்றாகப் போச்சு. அதே உடையை மாற்றாமல் மிச்ச ஒன்பது நாட்களும் அழுக்காகி விட்டதே என்று கூட பார்க்காமல், இடையில் ஒரு ஞாயிற்றுக்கிழமை மட்டும் காய்ந்து விடும் என்று தோய்த்து மற்ற நாட்களில் அழுக்குடனே, எல்லாரும் ஒரு மாதிரி பார்க்க ஆரம்பித்து, நான் அருகில் வந்தாலே மூக்கை மூடிக் கொள்ள... இப்ப நினைச்சால் சிரிப்பு வருகிறது. ஆனால் அப்ப 'ரிஸ்க்' எடுக்க நான் தயாராகவில்லை.

இதே போல ராசி

யான புடைவை என் அக்காவின் கூரைப் புடைவை. மிக ராசியான புடைவை. முப்பது கல்யாணம், இருபது பூணல் கல்யாணம், பத்து பதினைந்து சீமந்தம், ஆயுஷ்ய ஹோமம், கிரகப்பிரவேசம்... இப்படி பல நல்ல காரியங் களுக்கு பயன்பட்டிருந்த இந்தப் பட்டுப் புடைவை. அழுத்தமான மஞ்சள் உடல், பச்சைக் கரை... ஆங் காங்கே கிழிந்து போன கிழிசல்கள்... கரைந்து போனா லும் பளபளத்த கெட்டி சாணகல ஜரிகை. பழசாகிப் போனாலும் மெருகு குறையாமல்... ஆகி வந்த புடைவை.

அது ஆவி வந்த புடைவையா.. ஆகி வந்த புடை வையா என்ற ஆராய்ச்சி நமக்கு எதற்கு? அது எப்படி ராசியான புடைவையாக மாறியது என்பதுதான் முக்கியம்.

அந்தக் கதையைச் சொல்ல ஒரு அம்பது வருடம் பின்னே போக வேண்டும்.

அக்கா பதினாறு வயதில் திருமணமாகி புக்ககம் போன இரண்டு மாசத்திற்குள் அவள் மாமியாரின் கூரைப் புடைவை கிழிந்து போனது தற்செயல்தான். அக்கா வின் அடுத்த மச்சினர் கல்யாணம் நிச்சய மான போது...

"ரூபாயைக் கொட்டி இப்ப எனக்கு எதுக்கு ஒம்பது கஜப் பட்டுப் புடைவை. நான் பட்டு கட்டறதே அபூர்வம். நெனப்படிக்கு நூல் புடைவைதான். ப்பவாவது மணைக்கு நிக் றும்னா சின்ன விரல் ஜரிகை போட்டு ஏழெட்டுப் புடைவை இருக்கு. இல்லை எங்கம்மா காங்கலிப் பிரார்த்தனை பண்ணி தந்த சின்னாளப் பட்டு இருக்கே. பட்டை விட உசத்தியா பளபளன்னு இருக்கு. எல்லாம் கிடக்க கிழவியை தூக்கி மணையில வையுன்னு எனக்கு எதுக்கு பட்டுப் புடைவை..." என்று பிகு பண்ணிக் கொண்ட மாமியார்... கல்யாணத்தன்று கட்டிக் கொண்ட கொட்டை பாக்கு கலர் பட்டுப் புடைவையை தானே அதிருப்தியாகப் பார்த்து...

"இது என்னவோ பளிச்சுனு எடுப்பாவே இல்லை... உன் கூரைப் புடைவையை சித்த நாழி குடு..." என்று வாய்விட்டு கேட்க,

"நான் பிடி சுத்த மடிசார் கட்டணுமே... மன்னியாச்சே..." என்று அக்கா தயங்க,

"பத்து நிமிஷம் பிடி சுத்த... வேணும்னா என் புடைவைல ஒண்ணு கட்டிக்கோ... இல்லாட்டிதான் என்ன? நீ சிறிசுதானே மாம்பழக் கொடுக்கு போறும். ஓடியாடி வேலை செய்யணும் நீ. மடிசார்ல தடுக்கி விழுந்துடுவே..." என்று அடித்துப் பேசி அக்காவின் புத்தம்புது கூரைப் புடைவையை பிடுங்காத குறை யாக

பானு குமார்

# சுலபத் தவணையில் வீட்டு மனை

## காசி குரூப் ஹவுசிங் பிளாட் ஸ்கீமில்

மாதத் தவணைகளாக

**ரூ.300/- செலுத்தி 1,200 சதுர அடிகள்**

**ரூ.450/- செலுத்தி 1,800 சதுர அடிகள்**

**ரூ.600/- செலுத்தி 2,400 சதுர அடிகள்**

உள்ள வீட்டு மனையை குலுக்கல் மூலம் தேர்ந்தெடுத்து சொந்தமாக்கி கொள்ளலாம்

### சிறப்பு அம்சங்கள் :

- அரசு அங்கீகாரம் பெற்ற வீட்டு மனைகள்.
- சுவையான குடிநீர்.
- இரயில் நிலையம் மற்றும் நெடுஞ்சாலைக்கு அருகில் உள்ள மனைகள்.
- குறைந்த விலையில் நிறைந்த வசதிகள்.
- L.I.C., H.D.F.C., . CANFIN Homes போன்ற நிதி நிறுவனங்கள் மூலமாக ரூ.1 இலட்சம் முதல் ரூ.5 இலட்சம் வரை குறைந்த வட்டியில் வீடு கட்ட கடன் வசதி பெறலாம்.

## சிறப்பு சலுகை

எங்களிடம் வீட்டுமனை பதிவு செய்பவர்களுக்கு

**2,400 சதுர அடிகள் - 40 கிராம் வெள்ளி நாணயம்**

**1,800 சதுர அடிகள் - 30 கிராம் வெள்ளி நாணயம்**

**1,200 சதுர அடிகள் - 20 கிராம் வெள்ளி நாணயம்**

சிறப்பு சலுகையாக வழங்கப்படும்

எங்களிடம் வைப்பு நிதிக்கு

**18% முதல் 27%**

### வீட்டு மனை கிடைக்கும் இடங்கள் :

தாம்பரம், பெருங்களத்தூர், ஊரப்பாக்கம், வண்டலூர், கூடுவாஞ்சேரி, காட்டுப் பாக்கம், மறைமலை நகர், மன்னிவாக்கம், படப்பை, வில்லிவாக்கம், அம்பத்தூர், ஆவடி, பட்டாபிராம், திருநின்றவூர், செவ்வாய்பேட்டை, திருவள்ளூர், போரூர், குன்றத்தூர், மாங்காடு, மௌலிவாக்கம், பூந்தமல்லி, திருமழிசை, செங்குன்றம், எண்ணூர், மீஞ்சூர், பொன்னேரி

ஞாயிறு அலுவலகம் உண்டு

**காசி ஹவுசிங் & டெவலப்மெண்ட் லிமிடெட்,**
**காசி பைனான்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ்**

KGC

91-92, [illegible] சாலை, காசி [illegible], அசோக் நகர், சென்னை - 600 083. போன் 4822206, 4825506, 4821969, 4896373, 4896409. பேக்ஸ் 044-4825606 • [illegible] : 13, [illegible] சென்னை-600 015. போன் 456464 • மயிலாப்பூர் : 140, [illegible] மயிலாப்பூர், சென்னை - 600 004 • [illegible] : 10, [illegible] எண் 64, [illegible] சென்னை - 600 041 • அம்பத்தூர் : எண் 11, [illegible] அம்பத்தூர், சென்னை - 600 053. போன் 682592 • [illegible] : [illegible] சென்னை - 600 091 • கோவை : [illegible] 594/4, [illegible] கோவை - 641 002. போன் 439656 • கோவை : [illegible] 209/8, [illegible] கோவை - 641 012. • [illegible] : [illegible] - 631 213. போன் 86304 • திருச்சி : 5/B, 25, [illegible] திருச்சி - 620 001. போன் 466003 • திருச்சி : 32B/2, [illegible] திருச்சி - 620 001. போன் 466002. • மதுரை : 246A, [illegible] மதுரை - 625 001. போன் 741190 • பெங்களூர் : 33, [illegible] 400, [illegible] பெங்களூர் - 560 003. போன் 3363351 • பெங்களூர் : 1532, [illegible] பெங்களூர் - 560 041. போன் 6652480 • [illegible] : 20, [illegible] - 570 001. போன் 435997 • [illegible] : 4-8-14 [illegible] - 522 007. போன் 355257 • மும்பாய் : 203A, [illegible] மும்பாய் - 400 002. போன் 4062649 • புது டெல்லி : [illegible] 82E, POCKET -3, [illegible] புது டெல்லி.

Dubai : Nada Al Zuhoor Trading Est., P.Box No.27857, Dubai, U.A.E. Tel.: 00971 4 249354 Fax: 00971 4 221545

மறு மாதமே அக்காவின் தங்கை அதாவது சின்னக்கா கல்யாணத்தின் போது, போட்டிக் காகவே அக்கா எங்க அம்மாவிற்கு மணைக்கு நிற்க தன் கூரைப் புடைவையை நிர்ப்பந்தப் படுத்தி கட்டி விட்டாள். கூடவே பலர் காது பட "என் மாமியாரை விட இந்தக் கலர் உனக்குதான் பொருந்தியிருக்கு மஞ்சள் கட்டிக்க ஒரு தனி நிறம் வேணும்..." என்று வேண்டுமென்றே அக்கா கமெண்ட் அடிக்க; இரண்டு. அக்கா கல்யாணத்துடன் சேர்த்து மூன்று. கல்யாணம் பார்த்த அந்த மஞ்சள் கூரைப் புடைவை ஆகி வந்த புடைவையாக சரித்திரப் பெருமை கொண்டது.

அடுத்து வந்த மாதங்களில், வருடங்களில் அக்காவின் சீமந்தம், முதல் பிள்ளையின் ஆண்டு நிறைவு, இரண்டாவது பெண்ணின் ஆண்டு நிறைவு, மூன்றாவது பிள்ளையின் ஆண்டு நிறைவு, சில பல பூணல்கள், கிரகப்பிர வேசம் என்று அக்காவின் குடும்பத்து பல விசேஷங்களில் பங்கு கொண்டது மட்டு மல்லாமல் திருமங்கலத்திலிருந்து திருவான் மியூர் வரை கொப்பும் கிளையுமாய் பெருகிப் பரவியிருந்த எங்கள் உறவு சாம்ராஜ்யத்தின் எல்லார் வீட்டு விசேஷத்திலும் அக்காவின் ஆகி வந்த புடைவைதான்.

புதிதாகக் கல்யாணமாகி புத்தம்புது கூரைப் புடைவை உள்ளவர்கள் கூட அதை தன் கல் யாணத்திற்கு மட்டும் உபயோகித்து விட்டு புதுக் கருக்கு அழியாமல் இஸ்திரி செய்து கவிழ்த்து மடித்து பீரோவுக்குள் பத்திரமாக வைத்துவிட்டு அக்காவின் புடைவையை கடன் வாங்கிக் கட்டிக் கொள்வது வழக்கமாகி விட்டது. எல்லா குடும்பத்துப் பெண்களும் மஞ்சள் ப்ளவுஸ் பச்சை பைபிங் பார்டர் வைத்து தைத்துக் கொண்டார்கள் என்று சொன்னால் மிகையாகாது. இப்படி எத்தனை விழாக்கள், எத்தனை போட்டோக்கள், எத் தனை விடியோக்கள்.

> தோசை என்று
> சொல்லும் போது, தொட்டுக்
> கொள்ள நமக்கு சட்னி, சாம்பார்
> இருந்தாக வேண்டும். பலருக்கு தயிர்
> சேர்த்துத் தொட்டுக் கொண்டால்
> அமிர்தமாக இருக்கும் என்று
> தெரியாது. இதுவரை சுவைக்காத
> வர்கள் சுவைத்துப் பாருங்கள்.
> — கமலம் அழகனார்.



ஒவ்வொரு தடவையும் ப்ளாஸ்டிக் கவரில் இஸ்திரி செய்த புடைவை, ஆட்டோவுக்கு தண்டம் அழுது, கொண்டு போய் கொடுத்து விட்டு ஃபங்ஷன் முடிந்து நாலு நாள் வரை காத்திருந்து புடைவை திரும்பி வரவில்லை என் றால் நாலு போன் பண்ணி,

"அடடா, களேபரத்தில் மறந்து விட்டேன்" என்று அவர்கள் புளுகுவதை புரிந்து கொண்டு, அவர்கள் "தோ அனுப்பறேன்" என்று ஒரு வாரம் வரை காத்திருந்து பின் "நம்ம புடைவை நாமதான் கவலைப்படணும்" என்று,

"இந்தப் பக்கம் வந்தேன், உன்னைப் பார்த்து நாளாச்சேன்னு வந்தேன்..." என்று அவர்கள் வீட்டுக்கு போய் ஒரு கப் காப்பி குடித்துவிட்டு....

"வந்ததுதான் வந்தேன், புடைவையை எடுத் துண்டு போறேன்" என்று அவளும் புளுகி விட்டு அந்தப் புடைவையை எடுத்துண்டு வரணும். அது நிச்சயம் கசங்கிதான் இருக்கும்.

"ட்ரை க்ளீன் பண்ணி தரணும்னு இருந் தேன்" என்று அவர்கள் சொல்வார்கள்.

ஆனா இன்னும் ஒரு மாசம் கழித்து போனாலும் ட்ரை க்ளீன் என்ன; இஸ்திரி கூட பண்ணியிருக்க மாட்டார்கள். ஏதோ இந்த மட்டும் மடித்தாவது தந்தார்களே என்று சந் தோஷப்பட வேண்டும். அந்தப் புடைவையை மெனக்கெட்டு ஈரத்துணியால் ஓரம் துடைத்து, கசங்கல் போக இஸ்திரி பண்ண வேண்டும். அடிக்கடி ட்ரை க்ளீன் பண்ணால் புடைவை வீணாகிவிடும் என்று நாலைந்து தடவைக்கு ஒரு தடவை ட்ரை க்ளீன் செய்து, ஆறு மாதத் திற்கு ஒரு தடவை சிறு கிழிசல்களை டார்ன் செய்வதும் எல்லாம் அக்காவின் கடமை. எப்போதாவது புடைவையில் எண்ணெய் இல்லை சந்தனக் கறை பட்டிருந்தால் அக்கா கண்களில் ஜலம் வந்துவிடும்.

ஒருத்தர் ஒழுங்கா திருப்பி தாரதில்லை என்று ஒவ்வொரு தடவையும் அக்கா புலம்பும் போதும் "பின்னே எதுக்காக கடன் தர்றே..." என்று அத்திம்பேர் சண்டை பிடிப்பார்.

"அதெப்படி கேட்டா இல்லைன்னு சொல்ல முடியும்" என்று அக்கா பரிந்துரைப் பாள். அவளுக்கு உள்ளூற ஒரு பெருமை இருந் தது தன் புடைவையின் ராசி பற்றி. இதில் என்ன சிறப்பு என்றால் அக்காவுக்கு இன்வி டேஷன் இல்லாத இடங்களுக்குக் கூட அக்கா வின் புடைவைக்கு அழைப்பு உண்டு. தான் சென்றாலாவது தன் புடைவையை பத்திரமாக உபயோகிக்கிறார்களா என்று பார்க்கும் ஆறு தல் கிடைக்கும். அக்காவை கூப்பிடாமல், "ஆத் தோட சிம்பிளா பண்றோம்" என்று சாக்கு சொல்லி புடைவையை மட்டும் வாங்கிச்

சென்று விட்டால், அவர்கள் புடைவையை திருப்பித் தரும்வரை அக்கா படும்பாடு இருக்கே அதைச் சொல்லால் விவரிக்க முடியாது.

ஏதோ வெளிப்படையாக "புடைவையைக் கொடுத்து விட்டு பலகை மணையை எடுத்துண்டு பின்னாடியே போக முடியுமா" என்று பேசினாலும் அவள் மனம் சஞ்சலப்படுவது புரியும். "இப்படி டென்ஷன் பண்ணிண்டு எதுக்கு தரணும்" என்று அக்கா பிள்ளை கேட்டான்.

"கேட்டா எப்படி முடியாதுன்னு சொல்றது. அதெல்லாம் நாங்க கத்துக்கலே...."

"அப்ப கவலையை விடு. என்ன மாக்சிமம் கிழிச்சு அனுப்புவா. விட்டுது சனின்னு புடைவையை தூக்கி எறி."

"தூக்கி எறிவானேன்?... அந்தக் காலத்து வெள்ளி ஜரிகை சாணகலம். ஆங்காங்கே கரைஞ்சாலும் உருப்படியா இருக்கு. பாத்திரக்காரனுக்கு போட்டா சலாம் போட்டுண்டு பெரிசா பாத்திரம் தருவான். உன் பொண் கல்யாணத்துக்காகும்" என்றாள் அக்கா.

"அதை முதல்லே செய். டென்ஷனாவது குறையும்" என்று அக்கா பையன் ப்ராக்டிகலாக ஜோக் அடிக்க குபுக்கென்று கண்களில் கண்ணீர் வந்துவிட்டது. பிள்ளை தன்னை மதிக்கவில்லை என்று பத்து நாள் புலம்பிக் கொண்டிருந்தாள்.

கோழை மனசு அவளுக்கு. கொடுத்து உதவவும் வேண்டும். அதே சமயம் அந்தப் புடைவைக்கு ஒரு கேடு வந்து விடவும் கூடாது என்று இருதலைக் கொள்ளி எறும்பின் தவிப்பு.

இந்தப் புடைவையில் பல பிரச்னை. இரண்டு மூன்று சிறு கிழிசல்கள் இருந்தன. மடிசார் புடைவை பக்கப் பதிவாக கட்டுவதே ஒரு கலை. அதில் கிழிசல் வெளியே தெரியாமல் மறைத்து கட்ட தனி சாமர்த்தியம் வேண்டும். அது முடியாதவர்கள் கமெண்ட் அடிப்பார்கள்.

"உக்காரச்சே பார்த்து உக்காரு. டர்ருனு பின்னாடி கிழிஞ்சு மானத்தை வாங்கிடப் போறது" என்பார்கள்.

இதில் கனத்த சரீரமுடைய சில பெண்டிருக்குக் குறை வேறு.

"புடைவை நீள அகலம் போதாது. தலைப்பு இழுத்து பிடிச்சுண்டு குட்டையா வர்றது. கொசுவம் பத்தலை. கால் தெரியறது..." தங்கள் சரீரம் பெரிசு என்று ஒப்புக் கொள்ள மாட்டார்கள். இத்தனை குண்டுகள் கட்டிக் கொள்ள நேரிடும் என்று முக்காலும் உணராத அக்காவின் மாமனார் அக்காவின் சிடுக்கு போன்ற உடம்புக்கு ஏற்ற ஒம்பது கஜமாக எடுத்திருந்தார்.

"பத்து கஜம்னா தாராளமா இருக்கும்." புடைவையை வாங்கி உபயோகிப்பவர்கள்



அரிசி உப்புமா செய்யும் போது, அரிசி நொய்யில் சிறிது நல்லெண்ணெயை விட்டுக் கலந்து பின் செய்தால் வாசனையாக உப்புமா கட்டித் தட்டாமல் இருக்கும்.

— லக்ஷ்மி தியாகராஜன்

அடுத்த விசேஷத்திற்கு நாமே இதை கட்ட நேரிடும் என்ற தத்துவத்தை உணராமல் புடைவையை அலட்சியமாக மடித்து உருட்டி கவரில் திணித்து திருப்பித் தரும் மனிதர்களின் மடமையை எப்படிச் சொல்வது?

இப்படி பல கை மாறி புடைவை ஒரு மாதிரி பரிதாபமாக பாழாகிவிட்டது. பெருமை தான் மிஞ்சியது. இப்ப யாரும் அதை கட்டுவதில்லை. கடன் கேட்பதில்லை. அக்கா அத்திம்பேரின் அறுபதாம் கல்யாணத்தின் போது அந்தப் புடைவையை அக்கா மணைக்குக் கட்டிக் கொண்டாள். புதிதாக அதே நிறத்தில் அதே பார்டருடன் பட்டுப் புடைவை வாங்கலாம் என்று பிள்ளைகள் பிடிவாதம் பிடிக்க, அக்கா "பரமாச்சாரியாள் சொல்லியிருக்கார், பட்டு கட்டறதை நான் விட்டுடப் போறேன்... இத்தனை நாள் கட்டிண்டது போறும். இதே கலர்ல நூல் புடைவையோ பாலியெஸ்டர் புடைவையோ வாங்கினா போதும்" என்று பேச்சுக்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்தாள். இது நடந்து பத்து வருஷமாச்சு.

இப்போது அக்கா எங்கள் மத்தியில் இல்லை. "நான் போயிட்டேன்னா என் பொணத்துக்கு இந்தப் புடைவையை கட்டி அனுப்பா நீங்கோ. சாதாரண நூல் புடைவை போதும். இது உங்ககிட்ட இருக்கட்டும். நீங்கல்லாம் ஷேமமா இருக்கணும்" என்ற அக்காவின் ஆசைப்படி அந்தப் புடைவையை பத்திரமாக பீரோவுக்குள் வைத்திருக்கிறார்கள் நாட்டுப் பெண்கள். அதைப் பார்க்கும் போதெல்லாம் அக்கா ஞாபகம் வருகிறது.

அந்தப் புடைவையை இனி யாரும் கட்ட முடியாது. ஆனால் எங்கள் வீட்டில் பிறக்கும் ஒவ்வொரு குழந்தை தொட்டிலுக்கும் கிழிந்த சரிகை மங்கிப் போன அந்த ஆகி வந்த மஞ்சள் புடைவைதான் பட்டு மெத்தை.

Regd. No. 18/18747/90 Phone : 583341

# AISWARYA BENEFIT FUND LTD.

44-A, Malayaperumal Street, Chennai - 600 001.

Pensioners, Widows, Minor Children, Ex Service Men, Charitable Institutions, and Physically handicapped Persons and Trusts will be allowed 1% Extra Special Incentive on all deposits.

## I-AISWARYA FIXED DEPOSIT SCHEME

| Period | 46 Days | 3 Months | 6 Months | 1 Year | 2 Years | 3 Years |
|---|---|---|---|---|---|---|
| Rate of Interest | 15% | 16% | 18% | 19% | 20% | 21% |

Minimum Deposit Rs. 3000/- and in multiples of Rs. 1,000/- Interest payable monthly

## II-AISWARYA RECURRING DEPOSIT SCHEME

| Monthly Instalment | Maturity Value | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | 12 Months | 24 Months | 36 Months | 48 Months | 60 Months | 72 Months |
| Rs. 100 | 1, 345 | 3,000 | 5,040 | 7,560 | 10,650 | 14,460 |

Minimum Deposit Rs. 100/- and in multiples of Rs. 100/-

## III-AISWARYA CUMULATIVE DEPOSIT SCHEME

| Deposit Amount Rs. | Maturity Amount | | | |
|---|---|---|---|---|
| | 12 Months Rs. | 24 Months Rs. | 36 Months Rs. | 42 Months Rs. |
| 3,000 | 3,630 | 4,410 | 5,430 | 6,000 |
| 5,000 | 6,050 | 7,350 | 9,050 | 10,000 |
| 10,000 | 12,100 | 14,700 | 18,100 | 22,400 |

Minimum Deposit Rs. 1,000/- and in multiples of Rs. 1000/-

## IV-AISWARYA MARRIAGE SCHEME

| Deposit Amount | Period | Maturity Value |
|---|---|---|
| Rs. 9000 | 15 Years | Rs. 1,50,000 |

Minimum Amount Rs. 9000/- Minimum Period 15 Years

## V-AISWARYA BOND

| Deposit Amount Rs. | Amount Payable on Maturity | | |
|---|---|---|---|
| | 42 Months Rs. | 63 Months Rs. | 84 Months Rs. |
| 1,000 | 2,000 | 3,000 | 4,000 |
| 5,000 | 10,000 | 15,000 | 20,000 |
| 10,000 | 20,000 | 30,000 | 40,000 |

Minimum Deposit Rs. 1000/- and multiples of Rs. 1000/-

## VI-MONEY MULTIPLIER SCHEME

| Deposit Amount | Period | Amount Payable on Maturity |
|---|---|---|
| Rs. 900 | 21 Years | 50,000 |
| Rs. 1,800 | 21 Years | 1,00,000 |
| Rs. 7,500 | 15 Years | 1,25,000 |

## VII-AISWARYA BIRTHDAY GIFT SCHEME

Deposit Rs. 1000/- on the Birthday of your Near and Dear continuously for 4 years. Rs. 1,000/- will be paid on Every Birth Day from the 5th Year onwards till the life time of the depositor

**LOANS** 1. Jewel Loan Rs. 3,250/- per 10 grams. interest 23%

**Loan against Deposits :** 2. Loans against deposits can be availed upto 75% after six months. 3% interest will be charged over and above the deposit rate. 3. Loans against Government securities. 4. Loans on House/Land Properties.

**TRANSACTION WITH SHAREHOLDERS ONLY**

**Working Hours : 10.00 a.m. to 5.00 p.m. SUNDAY HOLIDAY**

**இன்றைய குடும்பங்களைப் பற்றி மிக அழகாக எழுதியிருக்கிறார் இந்த வயதான இல்லத்தரசி. இயல்பான ஓட்டத்துடன் சுவாரஸ்யமாக அமைந்திருக்கும் இந்த அனுபவ தோரணங்கள் ஆங்காங்கே நம்மை சிந்திக்க வைக்கிறது. — (ஆர்.)**



# அனுபவ

## பொன்னம்மாள்

'டும், டும், டும்' "கெட்டி மேளம், கெட்டி மேளம்....." எவரோ குரல் கொடுக்க, மங்கல வாத்தியங்கள் முழங்க திருமாங்கல்ய தாரணம் நடக்கிறது. அக்னி முன் ஒரு ஆணும் பெண்ணும் தம்பதிகளாகின்றனர்.

"சீக்கிரம் வா.... டின்னர் வாசனை ஆளைத் தூக்குகிறது. அடுத்த பந்தின்னா பாதி இருக்காது... எச்சல் பருக்கையெல்லாம் சரியா க்ளீன் பண்ணி இருக்கமாட்டாங்க."

"இந்தப் புடைவை எப்ப வாங்கினே? தீபாவளிக்கா... டபுள் பேட்... ரொம்ப நல்லா இருக்கு... என்ன வெலை?"

"ஹூம், என் பொண்ணுக்கும் நாலு வருஷமா ஜாதகத்தைத் தூக்கிண்டு அலையறேன்... ஒண்ணும் தெகையமாட்டேங்கறதே... நல்ல எடமாயிருந்தா சொல்லேன்."

"ரமாபிள்ளை ஸ்டேட் போயிட்டானாமே! இத்துனூண்டு இருந்தான்."

வம்புகளும், அவரவர் கவலைகளும், புடைவை, நகைகளும், விருந்தும் அலசப்படுகின்றன.

தம்பதிகள் ஹோமப்புகையுடன் தனித்து நிற்கின்றனர். ஏதோ சடங்குகள், மந்திரங்கள். சாஸ்திரிகள் கடமையாற்றுகிறார். அங்கொன்றும், இங்கொன்றுமாக மனிதர்கள். இன்று மட்டுமல்ல... திருமணம் முடிந்து, தேனிலவு போய் இயல்பான வாழ்க்கைக்கு வரும் போதும் அவர்கள் தனிதான். ஆணும், பெண்ணும் தேனிலவுக் காலத்திலேயே கலந்து பேசி நன்கு சிந்திக்க வேண்டும்.

"என்னங்க மாட்டுப் பெண்ணைப் பார்த்தீங்களா? கர்வத்திலே மண்டை சகஸ்ரபத்தலா வெடிச்சுடும் போலிருக்கு... பூமிலே கால் பதியலையே... என்னத்தை சாதிச்சுட்டாள்னு இப்படி நடக்கறா... இவனும் ஜானு... ஜானு...ன்னு முந்தானைத் தலைப்பை பிடிச்சுக்கிட்டு அலையறான்." இது மாமனாரிடம் மாமியாரின் குற்றச்சாட்டு.

"முகேஷ், உங்கம்மா ஏன் இப்படி மட்டமா 'பிஹேவ்' பண்றா.. கல்யாணத்துக்கு முன்னாலே உங்களுக்கு செய்யலே...? பண்ணி வைச்ச டிபனை பாக்ஸிலே எடுத்து வைக்க முடியாதபடிக்கு பதினைஞ்சு நாள்லே கிழவியாயிட்டாளாமா?" இது தன் கணவனிடம் மருமகளின் முறையீடு.

மாமியார், மருமகள் என்றால் ஏன் இப்படி எலியும், பூனையுமாகத்தான் இருக்க வேண்டுமா?

என் தோழியின் மாமியாரை சந்திக்க நேர்ந்த போது இந்தக் கேள்வியைக் கேட்டேன். ஏனெனில் அந்த அம்மையாருக்கு ஆறு பிள்ளைகள், இரண்டு பெண்கள். (குடும்பக் கட்டுப்பாடு இல்லாத காலம் அது) இரண்டை பெற்றுவிட்டு இத்தனை திண்டாடும் மனிதர்களுக்கிடையில் எட்டை சமாளித்த ரகசியத்தை தெரிந்து கொள்ள ஆவல்! அவர் சொன்னார் -

"எல்லாரும் மனிதர்கள். எல்லோருக்கும் ஒரே மாதிரி கண், காது, மூக்கு, வாய், கை, கால்கள்தான். கொஞ்சம் சிறுத்து, நீண்டு வேணா வித்தியாசப்படலாமே தவிர செய்முறை ஒரே மாதிரி



(சினிமா 'ஸ்டில்கள்' சும்மா சுவாரஸ்யத்திற்காக!)



தானே! அதே மாதிரி மனசும், மூளையும்.

தப்பு பண்ணினா நம்ம மனசு உறுத் தலையா? மாட்டுப்பெண்ணும் மனுஷிதானே! இந்தக் காலத்திலே பெண்ணும் வேலை பார்க் கறா.

மூத்த பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொடுத்தேன். ஏக ப்ராப்ளம். வீடு கிடைக்கும்

# தோரணங்கள்

வரை இருக்கட்டும் என்று வீட்டோடு வைச் சிக்கிட்டிருந்தேன். வீட்டோடு மாப்பிள்ளை இருந்தா எட்டு பேர் இருக்கிற வீட்டிலே எத் தனை சிக்கல் வரும்!



அதுவும் ஆண் பிள்ளைகள் அதிகமுள்ள என் வீட்டில் தலைக்குத் தலை ஈகோ. இரண்டாவது பிள்ளை சொல்லுவான், "ஏம்மா, மாப் பிள்ளைக்குப் பண்ணின பொங்கலா...? வேண்டான் னுட்டாரா?'' அவன் கேள்வியில் பொதிந் துள்ள கிண்டல் எனக்குப் புரியாமலில்லை!

இங்கே தேவை பொறுமை. சிரித்து விட்டுப் போனேன். கோப மில்லை என்று காட்ட!

என் தலை மறைவதற்குள்

மாட்டுப்பெண் வெடித்தாள். கனத்த குரல். ஏழரைக்கட்டை ஸ்ருதி!

"அழுக்குன்னா... உங்கம்மா அழுக்கு... உள்ள அத்தனையும் விஷம்!"

உடனே போய் சண்டை போட எனக்கும் ரோஷம் வரத்தான் செய்தது. உப்பில்லாமலா சாப்பிடுகிறேன்.

கொஞ்சம் கழித்து சண்டை போடுகிறேன் என்று கொதிக்கிற மனசுக்கு சமாதானம் சொன்னேன்!

வேடிக்கை பார்க்கிறவர்களுக்கு இந்த சண்டை அவல்... பிள்ளைக்கு தர்ம சங்கடம். எனக்குப் பரிந்து பேசினால் மருமகள் இடிப் பாள். வேலை நிறுத்தம் செய்வாள். நான் இறந்த பிறகு கூட 'உங்கம்மாவுக்குத்தானே பரிஞ்சு கிட்டு வந்தீங்க. என் கஷ்டம் என்னிக்குப் புரிஞ் சுது' என்று புலம்புவாள். இதற்கா அவனுக்குக் கல்யாணம் செய்து வைத்தேன்!

நான் பழுத்த இலை. எத்தனை மழை, வெயில், பனி, காற்று எல்லாம் பார்த்திருக் கிறேன்.



இங்கே தேவை விட்டுக் கொடுத்தல். யார் முதலில் கை நீட்டுவது என்ற தயக்கமே கூடாது. எப்போதும் நீட்டும் கரம் நம்முடையதாகவே இருக்கட் டுமே!

போட்டிகளில் முதல் பரிசு வாங்க ஆசைப் படுகிறோம். முதல் பந்தி சாப்பாடுக்கு முந்துகி றோம். இதுவும் ஒரு போட்டிதான். இதற்கும் பரிசு உண்டு. நீண்ட போட்டி. வாழ்க்கை என் னும் போட்டியில் நான் இறந்தால் அம்மா, அம்மா என்று அழ எத்தனை இதயங்களைச் சேர்த்திருக்கிறேன்! இது எத்தனை பெரிய பரிசு!

பொங்கிய பாலில் நீர் தெளித்தாற்போல் மனம் சமாதானமாகி விட்டது.

'அத்தனையும் விஷம் என்றாளே!' என்று கொஞ்சம் பொறுமிற்று மனம்.

"நீலகண்டன் தேவர்கள் வாழ நஞ்சையே உண்டாரே... பாற்கடலில் பள்ளி கொண்ட பரந்தாமனுக்கு மேல் விஷமுள்ள ஆதிசேஷன் தானே குடைபிடித்திருக்கிறது? எப்போது



**இரண்டு ஆழாக்கு அரிசியுடன் (ஒவ்வொன்றும்) 200 கிராம் துவரம் பருப்பு, உளுத்தம் பருப்பு, கடலைப் பருப்பினை ஒன்றாகக் கலந்து மெஷினில் நைஸாக அரைத்து வைத்துக் கொண்டு பஜ்ஜி செய்யத் தோனும் பொழுது இதனுடன் தேவையான அளவு மிளகாய்ப் பொடி மற்றும் உப்பையும் சேர்த்து கரைத்து பஜ்ஜி போடலாம்.**

**— ஆர். வித்யா பிரசன்னா**

விஷத்தைக் கக்கும் என்று பயந்து கொண்டா தூங்குகிறார்? மீரா அருந்திய விஷம் அவளைக் கொல்லவில்லையே! நஞ்சுகண்ட நாகங்கள் பூஜைக்குரியதாக இருக்கிறதே! நாகம்மா, நாக லட்சுமி, நாக சதுர்த்தி இப்படி..."

இங்கே தேவை சகிப்புத்தன்மை. பக்தி, தியானம். அலைபாயும் மனதுக்கு பக்தி அணை. புண்பட்ட மனதுக்கு தியானம் மருந்து.

"மாப்பிள்ளை குளிக்கிராராம்மா...? பெண்டாட்டியோடு சாயந்தரம் சாவகாசமாகப் பேசக் கூடாதோ? பாத்ரூம் வாசலிலே டிஸ்கஷன் நடத்தினா மத்தவங்களும் குளிக்க முடியலையே?" இது அடுத்த கணை.

பீஷ்மரும், துரோணரும் யுத்த களத்தில் துரியோதனனிடம் கேட்காத பேச்சுக்களா? ஒருவர் பாட்டனார். துரோணர் குரு. துரியோதனன் அவர்களை விட எந்தவிதத்தில் உயர்ந்தவன்? அப்படியானால் ஏன் பொறுத்துக் கொண்டார்கள்? கடமை, தலைமைஸ்தானம். இங்கேயும் அதுதான்! தலைமைஸ்தானம் உதறிவிட்டு ஓடக் கூடியதல்ல... அக்னிமுன் ஒப்புக் கொண்ட கடமை. கழுத்திலே கட்டப்பட்டது வெறும் கயிறல்ல! மூன்று முடிச்சுக்கள்...

முதல் முடிச்சு அவள் கற்புக்காக்க, 2-ம் முடிச்சு கணவனைக் கடைசி வரை காக்க; அவன் காரியம் யாவிலும் கைகொடுக்க... தளர்ந்த நேரம் ஆறுதல் சொல்ல; தப்பு செய்யும் போது தட்டிக் கேட்க. மூன்றாம் முடிச்சை நாத்தி போடுகிறாள். ஏன், மாமியார் போட்டிருக்கக் கூடாதா? இல்லை. அவள் வயதானவள். அவள் காலம் முதுமையின் வாசலில். என் பெற்றோரை, என் உடன் பிறந்தாரை, எங்கள் குடும்பத்தின் மானம், மரியாதைகளை லாப நஷ்டங்களை கடைசி வரை நீ காக்கத் தான் இந்த முடிச்சு.

ஆம். முடிச்சுகளில் இத்தனை அர்த்தம் உண்டு. சில கோவில்களில் தொட்டில் கட்டுவார்கள் பிள்ளை வரம் வேண்டி. பிறந்த பின் அவிழ்த்து ஆற்றில் விட்டுவிடுவார்கள். மஞ்சள் துணி முடிகிறோம். பிரார்த்தனை நிறைவேறினால் (சுமங்கலிப் பிரார்த்தனை சாமான்கள் வாங்க; சுமங்கலிக்கு தட்சணை கொடுக்க) அந்தப் பணம் அவிழ்த்து செலவிடப்பட வேண்டும். கோவில் வேண்டுதல் என்றால் உண்டியலில் சேர்க்கப்பட வேண்டும். இப்படி முடிச்சுகளில் ஏகப்பட்ட அர்த்தங்கள் உண்டு.

மாமனார், மாமியார், மச்சினன், ஓரகத்தி, நாத்தி, மாப்பிள்ளை என்று மங்கை பலவிதமாய் வாழ்க்கையில் அடிபட்டு, புடம் போடப்படுகிறாள். பெற்ற குழந்தைகளை விட்டு விட முடியுமா? கோபித்துக் கொண்டு போனால் பெற்ற குழந்தைகளைப் பார்க்காமலிருக்க முடியுமா? ரோஷப்பட்டு, சண்டைபிட்டுக் கொண்டு பிரிந்து போன பின் மறுபடி பார்க்க வந்தால் மரியாதை இருக்குமா?

இங்கே தேவை கொஞ்சம் தியாகம்; கொஞ்சம் சமயோஜிதம். நீ சொல்லும் பொய்யால் பிறர் நன்மை அடைவாராயின், எவருக்கும் துன்பமோ, நஷ்டமோ வராத பட்சத்தில் சந்தர்ப்பத்திற்கேற்ப பொய் சொல்லலாம் என்கிறது குறள்.

"ரொம்ப நேரம் தண்ணியிலே நின்னா ஜுரம் வரும்" மழைக்காலமானால், "சனி பிடிக்கும்; சேத்துப் புண் வரும்" ஏதாவதொன்று சொல்வேன். "மாப்பிள்ளை ஆபீஸ் போக வேண்டாமா? நேரம், காலமே தெரியாது உனக்கு" மகளை கடிந்து கொள்வேன்.

நவராத்திரி கோவிலுக்குப் போய் அம்மன் அலங்காரம் பார்க்க வேண்டும். பஜனை, ஹோமங்களில் கலந்து கொள்ள வேண்டும். எந்த நேரத்தில் யார் மூலம் பூசல் கிளம்புமோ என்ற பயம்தான். பாலும் வீணாகாமல் பூனையையும், வளர்க்க வேண்டுமே, ஒண்ணுமில்லே ஒரு தடவை நெருங்கிய சினேகிதி வீட்டிலே பெண் பார்க்கிற படலம். நானும், பெண்ணும் போயிருந்தோம். திரும்பி வந்தா வீடே நவக்கிரகமாயிருக்கு. ஏக அமைதி.

கடைசிப் பெண்தான் சமயம் பார்த்து விஷயத்தைச் சொன்னாள். என் கணவரோ துர்வாசருக்கு அண்ணா. எந்தச் சானலில் எந்த சீரியல் நடந்தாலும் செய்தி நேரம்னா செய்திதான் ஓடணும்.

மாப்பிள்ளை படம் பார்த்துக் கொண்டிருக்கும் போது இவர் செய்திக்குத்

# திருமுருகா பைனான்ஸ் பிரைவேட் லிமிடெட்

(கம்பெனிகள் சட்டம், 1956ன் படி பதிவு செய்யப்பட்டது. பதிவு எண் 18-34128 ஆப் 1996)

(திருமுருகா தொகுப்பு நிறுவனத்தை சார்ந்தது)



வி.கே.கே.டிரேட்
சென் டர், (2-வது மாடி)
73, ரங்கநாதன் தெரு
தி.நகர், சென்னை - 17
போன் : 434 7833

**கிளை :**
H-58/59, சௌத் எக்ஸ்டன்ஸன்
பகுதி I, பி.எஸ்.அவுஸ்,
புது டெல்லி - 110 049,
போன் : 464 4179

# "அமுத சுரபி"
## டிபாசிட் திட்டம்

**குறைந்த பட்ச டிபாசிட் - ரூ.1,000/-**

**(ஆண்டு வட்டி 15% முதல் 20% வரை + ஊக்கத்தொகை**

***என்ன சார்! சௌக்கியமா? புரியவில்லையா? வழக்கமாக தமாஷாக பேச 'திருமுருகா' உரிமையாளன்தான் சார்***

பொது ஜனம் : உனக்கு ஒன்றும் வேலையில்லையா? இப்போது தான் எல்லாக் கம்பெனிய 'டிபாசிட் வாங்கக் கூடாது' என்று 'தடை' விதித்துவிட்டார்களே! பின்னே எதுச் "Bore" அடிக்கிறே?

திருமுருகா : சார் இப்படி ஏதாவது ஆகும் என்று ஒரு வருடத்திற்கு முன்பே யூகித் "திருமுருகா பைனான்ஸ் பிரைவேட் லிமிடெட்" என்கிற ரிசர்வ் வங் கட்டுப்பாட்டிற்கு உட்பட்ட கம்பெனியை நெ.18.34128/96ல் ரிஜிஸ்டர் செய் வைத்தேன். அது இப்போது பயனுள்ளதாக இருக்கிறது.

பொது ஜனம் : மத்தவங்களைப் போல இந்தக் கம்பெனியில் வட்டி குறைவாய் கொடுப்பாய்? எவ உன்கிட்ட போடுவான் போய்யா!.

திருமுருகா : சட்டப்படி 15% முதல் 20% வட்டியும், + ஊக்க தொகையும் நான் கொடுக்க முடியு

நேரில் வந்தால் 'சட்டப்படி சில உதவிகள் பற்றி கூறுகிறேன்.

எங்களுக்கு வந்த டிபாசிட்டில் இதுவரை 2 கோடிக்கு மேல் திருப் கொடுத்துவிட்டோம். இது நாள் வரை ஒரு "Cheque" ஐயும் காசு இல்லாம திருப்பியதில்லை. மற்ற வியாபாரத்தில் வரும் வருமானத்தை வைத்து திருப் கொடுக்கிறோம்.

பொது ஜனம் : ஏய்யா, உயிரை வாங்குகிறாய்? நீ வாங்கினே திருப்பி கொடுக்கிறே!

திருமுருகா : எங்கள் கம்பெனி நியாயமானது "Solvent" என்று சொல்லத்தான் இை சொல்லுகின்றேன். உங்கள் பணத்திற்கு பாதுகாப்பானது. உங்களுக் வேறுமுறையாலும் பயனடைய வழி உள்ளது. தயவு செய்து ரிசர்வ் வங் கட்டுப்பாட்டில் உள்ள எங்கள் திருமுருகா பைனான்ஸ் பிரைவே லிமிடெட் கம்பெனியில் டிபாசிட் செய்யுங்கள் சார்!

திருப்பி இருக்கிறார்.

மாப்பிள்ளைக்குக் கோபம் வந்து வெளியே போயிருக்கிறார். திரும்பி வந்த பிறகும் நாங்கள் வரவில்லை. மாமா நட்ட நடுவிலே படுக்கை போட்டுப் படுத்துவிட்டார். மாப்பிள்ளை அறை, ஹாலைத் தாண்டி இருக்கு.

"இதென்ன சத்திரமா... நினைச்சப்ப வரவும், போகவும்... சொந்தமா டீ.வி. வீடு எல்லாம் வெச்சுண்டு தோரணை காட்டணும்" மாமா முணுமுணுத்திருக்கிறார்.

வார்த்தை தடிப்புதான்! ஆனாலும் வந்து விட்டதே! மறுநாள் மாமா இல்லாத நேரம் மாப்பிள்ளைக்கு சமாதானம் சொன்னேன். "அவ அப்பா மனசு தங்கம்... மனசுலே ஒண்ணுமே கிடையாது. மூல உபத்திரவம் மூணு நாளா அவஸ்தை... இப்படிப் பேசிட்டேனேன்னு குழந்தை மாதிரி அழறார்" இங்கே நான் சொன்னது பொய்.

மாமாவைக் கூட்டிக் கொண்டு கோவிலுக்குப் போனேன்.

"இப்படிச் சொல்லலாமா?" பெண்ணைக் கொடுத்தியோ, கண்ணைக் கொடுத்தியோ' என்பார்கள். அவள் மனது கஷ்டப்பட்டால்...." இப்படி நான் போதிக்க,

"அப்ப எனக்கு எந்த ஆசையுமே இருக்கப்படாதுங்கிறயா?" மாமா கீழ்குரலில் கேட்க,

என் மூன்றாவது பிள்ளை கல்யாணத்தில் எனக்குப் புடைவை வேண்டாம் என்று அடம் பிடித்து கறுப்பு வெள்ளை டீ.வி வாங்கிக் கொண்டேன். இப்போ டீ.வியால் பிரச்னை இல்லை இல்லையா?

ஒருதடவை பெரிய பிள்ளை வீட்டிற்குப் போயிருந்தேன். திடீரென்றுதான்! அங்கே எனக்கு அதிர்ச்சி.

மருமகளின் பெற்றோர் தம்பி, தங்கை என்று வீடு ஜேஜே என்றிருந்தது.

'போன வாரம் வந்த லெட்டரில் கூட எழுதவில்லையே... நாம் என்ன வேண்டாமென்றா சொல்லப் போகிறோம்' என்ற கோபங்கள் எழத்தான் செய்தன.

என்னைப் பார்த்ததும் சம்பந்தி முகத்தில் அசடு வழிந்தது. தம்பியும், தங்கையும் பார்க்கக் கூடாததை பார்த்து விட்டாற் போல் முகத்தைக் கடுத்துக் கொண்டு ஆளுக்கொரு பக்கமாகச் சென்றனர்.

"என்னம்மா, வரேன்னு ஒருவரி எழுதி இருந்தா ஸ்டேஷனுக்கு வந்திருப்பேனே" பிள்ளையின் குரலில் ஏகதயக்கம்.

சம்பந்திகளிடம் நலம் விசாரித்துவிட்டு குளிக்கப் போனேன். இந்த மாதிரி நேரங்களில் வார்த்தைச் சிக்கனம் தேவை. அனாவசியமாக பேசும் ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு பிரச்னையைக் கிளப்பலாம்.

இங்கே தேவை நிதானம்.

பெண்ணும், பிள்ளையும் சமம் என்கிறோம். 'நான் என் பிள்ளை வீடு என்று வந்திருப்பது போல அவர்கள் தன் பெண் வீடு என்று வந்திருக்கிறார்கள். இதிலென்ன தப்பு? போன வருஷம் என் சின்னப் பிள்ளைகள் மூவர், என் கணவர் எல்லாருமாக வந்து ஒரு மாதம் டேரா போட்டார்களே! அது எனக்குப் பாந்தமாகப் பட்டதே! நாம் சின்ன வயதிலிருந்து பார்த்து, பழகிப் போன நிகழ்ச்சிகள்தான் காரணம் என்று புரிந்தது. பெண்ணையும் படிக்க வைத்து வேலை பார்த்து அனுப்புகிறார்கள். சும்மா அல்ல. தன் சக்திக்குத் தகுந்தபடி நகை போட்டு, புடைவை எடுத்து, கல்யாணம் செய்து.... அப்போ அவர்களுக்குத்தானே உரிமை அதிகம். இது ஏன் புரியவில்லை நமக்கு!

பிறகு அடுப்பு சௌகரியமில்லை என்று ஒதுக்கி விட்டோம்! ப்ரிஜ்ஜுக்குள் குழம்பும், சட்னியும் வைத்திருந்தால் தேவலை என்கிறோம். டீ.வி. நிகழ்ச்சிகளுக்கு ஏற்றவாறு வீட்டு வேலைகளை சரி செய்து கொள்கிறோம். எந்திரத்தில் அரைப்பதையும், உரலில் இடிப்பதையும் மிக்ஸி செய்கிறது. திருப்தி அடைகிறோம். 'சந்தியா காலம் விளக்கேற்ற வேண்டாமோ மருமகள்' என்ற காலம் போய் 'மீட்டிங்; ஏழுமணியாகும்னு காலேலே சொல்லிட்டா" விருந்தினர்களுக்கு சமாதானம் சொல்கிறோம். ஆனால் பெண்ணைப் பெற்றவர்கள் வந்து தங்கினால் மட்டும் அறிவு பழம் பஞ்சாங்கம் பார்க்கிறதே! நிச்சயமாய் நான் மாற வேண்டும்' உள் அழுக்குகளையும் போக்கிக் கொண்டே வந்தேன்.

அப்புறம் என்ன? ஒரே கோலாகலம்தான்! கூத்துதான்! இரண்டு நாளில் நான் புறப்பட்டு

**கூம்புவடிவில் கிடைக்கும் ஊதுபத்தி வில்லைகளை ஏற்றும் போது உண்டாகும் நெருப்பில் பொடித்த சாம்பிராணி (மிகவும் நைஸாக)யை தூவிக் கொண்டே இருந்தால் சுகந்த மணத்துடன் வீடே கமகமக்கும். கிட்டத் தட்ட அரை மணி நேரம் வரையில் கூட விட்டு விட்டுத் தூவிக் கொண்டே இருக்கலாம். முயன்று பாருங்களேன்!**

**— கஸ்தூரி**



விட்டேன் இருந்து விருந்து சாப்பிட்டு போகும்படி அவர்களிடம் சொல்லிவிட்டு!

நாங்கள் வசிக்கும் பிளாட்டின் எதிர்ப்புறம் ஒரு வயதான தம்பதியர். இடதுபுறம் இளம் தம்பதியர்.

அந்தப் பெண் "மாமி கேஸ் வந்தா வாங்கி வைச்சுடுங்க, இந்தாங்க பணம்" என்று கொடுத்து விட்டுப் போவாள்.

"மாமி, பால்கார்டு வாங்கப் போறேன். உங்க பழைய கார்டையும், பணத்தையும் கொடுங்க," அந்த இளைஞன் கேட்டு வாங்கிப் போவான்.

"எலக்ட்ரிக் பில் கட்டப் போறேன்! நீயும் தரயாம்மா". "இன்னிக்கு வடாம் பிழியப் போறேன். உனக்கும் சேர்த்து போட்டுடவா" இரண்டு பேரும் வடாம் பிழிந்து பகிர்ந்து கொண்டு... என் கண்ணே பட்டுவிடுமோன்னு பயமா இருந்தது.

"தங்கமான பெண்... எவ்வளவு ஒத்தாசை பண்றா தெரியுமா? ராட்சசி மாதிரி மாமியார் அமைஞ்சிருக்கா" மாமி அங்கலாய்த்தார் மாமாவிடம்.

"அந்தப் பையனும் உபகாரி! அதிர்ந்து பேசறதில்லே... இவனோட இருக்க பெத்தவங்களுக்கு அதிர்ஷ்டம் இல்லியே! நமக்கும் ஒண்ணு பொறந்திருக்கே மண்ணாந்தை மாதிரி!" மாமா சொல்லி கேட்டிருக்கிறேன்.

"அந்த மாமியும், மாமாவும் புடம் போட்ட தங்கம்... வயசான காலத்திலே அவங்களைத் தனியா தவிக்க விட எப்படித்தான் மனசு வந்ததோ?" அந்தப் பெண் புலம்புகிறாள்.

"கடவுள் ஏறுக்குமாறா கொடுத்து விளையாடறார்" வாலிபன் பெருமூச்சு விடுகிறான்.

தன் முதுகு ஏன் யாருக்கும் தெரிவதில்லை? முன்னும், பின்னும் கண்ணாடி வைத்தால்? முன்பார்வை கொண்டு பின்னால் பார்க்கிற மாதிரி தவறு யாருடையதென்று யோசிக்க வேண்டும்!

இங்கே இந்த நால்வர் புலம்புவதைப் போல் வேறு இடத்தில் வேறு வேறு நபர்கள் அங்கலாய்த்துக் கொண்டு, ஏக்கப்பட்டுக் கொண்டு நாட்களைக் கடத்துவர். இந்நிலைக்குக் காரணம் யார்?

இந்த மாமியும், மாமாவும் (அவர்களே பல நாள் சொன்ன செய்திகளிலிருந்து) பிள்ளை, மருமகளிடம் எப்படி நடந்து கொண்டனர்?

இன்று பக்கத்து வீட்டுப் பெண்ணுக்கும் சேர்த்து அடுப்பில் காய்ந்து கூழ் கிளறி, வெயிலில் வேர்த்து, அடுத்த நாள் காக்காய் விரட்டி....! அன்று....?

"என்னைக் கேட்டா வடகம் போட்டா உங்கம்மா? ஞாயிற்றுக் கிழமை ஒரு நாள் லீவு. அது கண்ணை உறுத்தறது. எங்கம்மாவுக்கு உடம்பு சரியில்லை. நான் இன்னிக்கு அங்கே போகப் போறேன்" மருமகள் தன் கணவனிடம் வெடித்து விட்டுப் புறப்பட்டு விட்டாள்.



**'கபோர்டில்' எறும்புத் தொல்லையா? சிறிது வேப்ப எண்ணெயில் தோய்த்து ஒரு துணியால் வாரம் ஒருமுறை 'கபோர்டில்' துடைத்துப் பாருங்களேன். வாசனைக்கு ஒரு எறும்பு கூட திரும்பிப் பார்க்காதே!**

**— ஆர். சீதா**

"என்ன ராங்கி பாருடா.... நான் வந்து இவள் தலையைப் பிடித்து 'அம்மா, தாயே, நாளைக்கு உனக்கு லீவுதானே! வடகம் பிழியலாமா? சௌகரியப்படுமான்னு உத்தரவு கேட்கணுமாமா!

ரத்தத்துக்கு பதில் திமிர் ஓடறதுடா... நீ அத்தனை எடம் கொடுத்திருக்கே... நறுக்கி வைக்கணும்" தாயார் கொதிக்கிறாள்.

நெருப்பும் சூடு. மேலேயிருக்கும் நீரும் கொதித்தால் பொங்கி வழிந்து நெருப்பு அணைந்து விடும்.

இன்றைக்குப் பக்கத்து வீட்டுப் பெண்ணை யோஜனை கேட்கும் மாமி அன்றைக்கு ஏன் மருமகளைக் கேட்கவில்லை? அது, நீ அடிமை என்ற எண்ணம். இது, அயலார் வீட்டுப் பெண் எனக்கு வடகம் தேவை; உனக்கும் சேர்த்துப் போட்டால் நீ உதவுவாய். நன்றிக்கடன் பட்டவளாயிருப்பாய் என்ற சுய நலம்.

யாருக்கு யார் அடிமை? நீ தாயாய் சுமந்தாய்; அவள் தோழியாய் மந்திரியாய், தாதியாய் வந்திருக்கிறாள். சம உரிமை கொடு. அவளிடம் கலந்தாலோசிப்பதில் தப்பில்லை... அவளுக்குப் பொறுப்பு கூடும்.

இன்றைக்குக் கேஸ் வாங்கி வைக்கும் மாமா அன்று...?

"நாம இந்த வீட்டைக் காவல் காக்கிற நாய்னு நெனெச்சின்டிருக்காங்கடி அவங்க... பால்கார்டு வாங்க, எலக்ட்ரிக் பில் கட்ட..... இவங்க வந்தவுடனே.. 'அப்பா, இன்னிக்கு ஒரு ரிசப்ஷனுக்குப் போறோம்... நீங்க சாப்பிட்டுட்டு படுத்துக்கங்க.. எங்க கிட்டேதான் சாவி இருக்கே'ன்னுட்டு டக்டக்னு கௌம்பிடறாங்க. ஏதுடா, வயதானவங்க... என்னத்தை சமைச்சு, தானே பறிமாறிண்டு... ஹூம், அதிர்ஷ்டமே

# வாழ்வில் முடிவெடுத்த அந்தத் தருணம் என்றும் பசுமையானது...



## அதற்கு ஈடான மற்றொரு தருணம் நீங்கள் யெஸ்டி அஸோஸியேடட் பில்டர்ஸிடம் இல்லம் வாங்கும் இனிய தருணம்தான்!

அண்ணா நகர், தி. நகர், நங்கநல்லூர், வேளச்சேரி
மற்றும் பிற இடங்களில் அழகிய தரமான
டீலக்ஸ் ஃபிளாட்டுகள் மற்றும்
தனி வீடுகள் வாங்க

அணுகுங்கள்




**YESDE ASSOCIATED BUILDERS LTD.**
FLAT PROMOTERS & PROPERTY DEVELOPERS
26, Ranganathan Street, IInd Floor, T. Nagar, Madras - 600 017.
Phone : 4340224/4340210/4342667. Fax : 044-2344333

HITECH 9604

இல்லாதவடி நீ... அந்த நாளில் எங்கம்மா, அப்பா, தங்கை, தம்பி.... இப்ப பிள்ளை, மாட்டுப் பொண்.... பேத்தி... இதுக்கு சாதம் ஊட்டி தூங்க வைக்கறதுக்குள்ளே..." அடுத்த அறையில் புடைவை மாற்றிக் கொண்டிருந்த மாட்டுப் பெண் காதில் அத்தனையும் விழ ஒரே அழுகை, ஏக ரகளை. குழந்தை முதுகில் மொத்தல்!

தேவையா? இத்தனையும் தேவையா?

இன்று யாருக்கோ உழைக்கும் நீங்கள் உங்கள் பிள்ளை குடும்பத்துக்கு உழைத்தால்..! பேத்தி உங்கள் ரத்தமல்லவா? இன்றைக்கு அடுத்த வீட்டுப் பெண்ணிடம் "முதல் ஆட்டம் தானே! மத்யானம் தூங்கியாச்சு... பதினோரு மணி வரை தூக்கம் வராது... குழந்தையை விட்டுட்டுப் போ... நிதின், பாட்டி கிட்டே சமர்த்தா சாப்பிட்டுட்டு தூங்குவானே" என்று கொஞ்சு கிறவர்கள் அன்றைக்கு ஏன் அப்படி நடந்து கொள்ள வேண்டும்.

விளைவுகளை எண்ணிப் பாராமல்தான்?

இத்தனை விச்ராந்திகளும், முதியோர் இல்லங்களும் முளைத்ததற்கு நீங்களும் ஒரு காரணம்!

பெண்ணுக்கு அன்று அதிகம் படிப்பில்லை. ஆணை, அவன் குடும்பத்தை சார்ந்து இருந் தாள். அனுசரித்துப் போனாள். இன்று படித்து வேலைக்குப் போய் பக்குவப்பட்டபின் ஆடவன் கை பிடிக்கிறாள்.

பொருளாதார நிறைவு தைரியத்தைக் கொடுக்கும். கல்வி அறிவு விழிப்புணர்ச்சியைத் தரும்.

"நாம் அடிமைகளா, வாழ வந்தவர்களா" என்று யோசிக்க ஆரம்பித்து விட்டனர். இதற்கு....

டீ.வியும் பத்திரிகைகளும் ஒரு காரணம். விவேகத்தைப் புகட்டும் புராண, இதிகாசங் களை கேட்க, படிக்க நேரமில்லை. ராமன் சீதையை வில்லொடித்து மணந்ததும், பஞ்ச பாண்டவர் வனவாசம் போனதும், திரௌபதி துகிலுரியப்பட்டதும் மட்டும் தொலைக் காட்சியில் பார்த்தால் போதாது.

பாவம் செய்ய பயப்பட வேண்டும். பக்தி யோடு நல்ல கருத்துக்களையும், வாழ்வியல் நீதி களையும் தேனில் குழைத்துத்தரும் ஔடதம் போல் விதுரநீதி, யட்ச-தர்ம சம்வாதம் போன்ற வைகளை புராண இதிகாசங்கள் கலந்து தரு கின்றன.

மூன்று வயதிலிருந்து புத்தக மூட்டை தூக்கும் குழந்தைகள் பொறுமை, விட்டுக் கொடுத்தல், தர்மம், அடக்கம், அன்பு இவற்றை மறந்து, அறிவாளிகளாய், பலசாலியாய், சிறந்த விளையாட்டு வீரர்களாய், சம்பாதிக்கும் யந்திரங்களாய் வளர்கிறார்கள்! அவர்களுக்குப் புராண, இதிகாசங்களைப் படிக்க நேரமில்லை.

இன்றைக்கு யாருக்கோ உதவும் அந்த இளம் தம்பதிகள் அவனைப் பெற்றவர்களுக்கு அனு சரணையாக இருக்க மறந்தது அவர்களை இந்த ஓடும் சமுதாயம் உருவாக்கிய விதம்தான்!

தன் குழந்தைகள் விளையாட்டை ரசிக்க நேரமில்லை. பள்ளிவிட்டு வந்த செல்வங்களின் பெருமைகளை, குறைகளை செவிமடுக்கும் பெற்றோர் ஆயிரத்தில் ஒருவர் இருந்தால் அதிசயம்.

குழந்தை உங்களை விட்டு விலகி விடுவான். நீங்கள் பெரியவர்களைப் புறக்கணித்ததை பார்த்துக் கொண்டே வளர்ந்தவனாயிற்றே! "சட்டியை உடைத்து விடாதே தாத்தா! அதே சட்டியில்தான் என் தகப்பனுக்கும் கஞ்சி ஊற்ற வேண்டும்" என்பது போன்ற கதைகளை எத்தனை முறை படித்தும் நாம் மறந்து விடு கிறோம்.

'அம்மா' என்று மரியாதைக்காகக் கூப் பிடாமல் இதயத்திலிருந்து பாசத்தோடு மாமி யாரை அழைக்கும் மருமகள்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள்?

குழந்தையை அடிப்பதற்கும், சண்டை போடுவதற்கும் பதிலாக அந்தப் பெண் "ஆபீஸிலே இன்னிக்கு வேலை அதிகம்.

**நான்காகக் கீறி ஒவ்வொரு எலுமிச்சம் பழத் திலும் சிறிது கல் உப்பு வைத்து அடைத்து மண்பாத்திரத்திலோ அல்லது பீங்கான் ஜாடியிலோ வைத்து விட்டால் உப்புக் கரிந்து ஜீராவில் ஊறின குலோப் ஜாமூன்கள் போல எலுமிச்சைகள் காட்சியளிக்கும். வருடக் கணக்கில் கெடாது. தேவைப்படும் போது காரம் சேர்த்து எண்ணெய் சேர்த்துத் தாளிக்க லாம்.**

**— கஸ்தூரி**





பல வீடுகளில் தலையணை உறைகள், போர்வைகள் குறைவாக இருக்கும். தீபாவளி, பொங்கல் போன்ற பண்டிகை சமயங்களில் புது தலையணை உறைகள், போர்வைகள் வாங்கலாமே. பண்டிகை நாளில் நாம் புத்தாடை அணிவது போல் நம் வீட்டுத் தலையணையும் புது உறையை உடுத்தட்டுமே!

— லலிதா முரளிதரன்

தலைவலி மண்டையைப் பிளக்கிறது" இப்படி நாசுக்காக ஏதேனும் சாக்கு சொல்லி புன்னகையுடன் பயணத்தைத் தவிர்த்திருக்கலாம். இன்னொரு நாள் மாமனார் மருமகள் காது கேட்க பேச அருகலார்.

"எங்கள் மாமியார் வீட்டில் வேலை ஓய்வ தேயில்லை மாமி... சாகரம்... சாப்பாடு, டிபன், காப்பி, வருவோர்கள், விருந்தினர் இப்படி... பரட்டைத் தலையும், எண்ணெய் வடியும் முகமுமாக, எப்பவும் கரண்டியும் கையுமாக நின்னாலும் திருப்தியில்லை... கறுகறுப்புப் போதாது என்ற பட்டம்வேறே" அந்தப் பெண்ணின் வாதம் இது.

திடீரென்று குழந்தை நிகிலுக்கு வலிப்பு வந்துவிட்டது. பள்ளிக்கூடத்திலிருந்து ஆபீஸுக்குப் போன் செய்து, நிகிலின் அப்பா டூர் போயிருக்கிறார். அம்மா ஒரு கல்யாணத்துக்குப் போய்விட்டு பதினோரு மணிக்கு அலுவலகம் போய் சேர்ந்தால் அதிர்ச்சியான தகவல்... அடித்துப் பிடித்துக் கொண்டு பள்ளி வந்தால்... ஏழெட்டு முறை மாந்தம் வந்து குழந்தை மரணத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தது.

நிகிலின் தாய் எமனோடு போராடி. 'வேளைக்கு சோறில்லை.. நேரத்தில் உறக்கமில்லை.. முடிவு தெரியாத அலுவலக விடுப்பு..' இதெல்லாம் கஷ்டமாக இவர்களுக்குத் தெரிவதில்லையே!

கூட்டாயிருக்கும் தென்னங்குச்சிகளை உடைக்க முடியாது. தனித்தனியான குச்சிகள் கலபத்தில் உடைபடும்.

வீட்டில் ஆள் இருந்தால் நிகிலின் மாந்தம் உடனே களையப்பட்டிருக்கும். வியாதியின் கோரப் பிடியில் குழந்தை இத்தனை சிக்கிச் சீரழிந்திருக்காது.

எல்.கே.ஜி. படிக்கும் நிகில் மதியம் வந்து விடுகிறான். சாதம் ஊட்டி பிஸ்கட் கொடுத்து விட்டு பார்த்துக் கொள்கிறவர்கள் அயர்ந்த சமயம் பாத்ரூம் குழாயில் குளியல். அவர்கள் கவனிக்கிற வரை தொப்பலான சட்டை... சுபம் எளிதில் கட்டிக் கொள்கிறது. பலவீனப்பட்ட குழந்தை; மாந்தம் வந்து விட்டது.

க்ரீச்சை நம்புபவர்கள் தாத்தா பாட்டியை நம்புவதில்லை! சிறு குழந்தை வைத்திருக்கும் பெண்கள் சந்திக்கும் இடங்களில் 'க்ரீச்'சைப் பற்றித்தானே அலைகிறார்கள்.

'குழந்தைக்கான உணவு, மாற்று உடையுடன் இவ்வளவு ரூபாய்.'

'குழந்தைக்கு அவங்களே சாப்பாடு கொடுத்துடறாங்க... மாதம் ஒரு தடவை மெடிகல் செக்கப்... நேரம் காலை 9 மணி சாயங்காலம் ஆறு மணி.'

'நான் ஆபீஸிலிருந்தே ஆறு மணிக்குத்தான் கிளம்புவேன். ஏழு மணின்னா தேவலை...'

'வீட்டுக்கு ரொம்பத் தள்ளி இருக்கே... கிட்ட இருக்கறதாச் சொல்லேன்' இப்படி பல ரகம்!

'ஒன்றுக்கொன்று சண்டையிட்டு உங்கள் குழந்தைக்குக் கன்னத்தில் காயம்.'

நீங்கள் போய் வாதிடலாம். க்ரீச்சை மாற்றலாம்.

அங்கேயும் அதே நிலை என்றால்.....!

ஓரகத்தியுடனும், நாத்தியுடனும் சண்டையிட்ட காட்சியினை ஒரு நிமிடம் நினைத்துப் பாருங்கள்.

"இருந்தாலும் உங்க தங்கை பிள்ளைக்குக் கை நீளம். கையை ஒடிச்சு அடுப்பிலே வைக்க... எப்படி கிள்ளியிருக்கான் பாருங்கள்." நீங்கள் உங்கள் கணவரிடம் புலம்ப, "உன் பிள்ளையும் லேசுப்பட்டவனில்லே.. மொதல்லே சண்டைக் கிழுத்தவனே அவன்தான்! அவங்கப்பா வாங்கித் தந்த கம்ப்யூட்டர் பொம்மையைப் பிடுங்கி ஒடைச்சுட்டான்....!"

"பார்த்தீங்களா? அவ எப்படிப் பேசறா... எங்கப்பா வாங்கித் தந்த ஆடும் ஊஞ்சலை, ஹெலிகாப்டர், தாளம் போடும் குரங்கு எல்லா 'கீ' கொடுக்கற பொம்மைகளையும் ரிப்பேர் பண்ணினதே ஒன் பசங்கதான்! நான் வாயைத் தெறந்தேனா? அல்பக் கம்ப்யூட்டருக்கு அலட்டிக்கறியே..."

"ஆமாண்டியம்மா! நாங்க அல்பம்தான். உங்கப்பா வாங்கித் தந்த பொம்மைகளுக்கெல்லாம் வெலையைச் சொல்லு... வீசி எறியறேன். பொறுக்கிக்கோ..."

"ஐயோ.. ரெண்டு பேரும் கொஞ்சம் பேசாம இருக்கீங்களா? மனுஷனுக்கு நிம்மதியே



# P. R. ஜுவல்லரியில்



ராசிக்கேற்ற கல் மோதிரம் வாங்கி அணிந்து பயன்பெறுங்கள்

. மேஷ ராசி பவழம்
. ரிஷப ராசி வைரம்
. மிதுன ராசி மரகதபச்சை
. கடக ராசி முத்து
. சிம்ம ராசி மாணிக்கம்
. கன்னி ராசி மரகதபச்சை
7. துலாம் ராசி வைரம்
8. விருச்சிக ராசி பவழம்
9. தனுசு ராசி புஷ்பராகம்
10. மகர ராசி நீலம்
11. கும்ப ராசி நீலம்
12. மீன ராசி புஷ்பராகம்

எங்களிடம் ராசிக்கேற்ற கல் வாங்கி பயன் பெறும் அனைவருக்கும் எங்களது வாழ்த்துக்கள்.

எங்களது **11 வது ஆண்டு விழாச் சலுகை** வாடிக்கையாளர்களின் வேண்டுகோளுக்கிணங்கி 15.2.97 வரை நீடிக்கப்பட்டுள்ளது. தங்க நகைகள், வெள்ளி பாத்திரங்கள், கொலுசுகள் செய்கூலி இல்லை. ரூ. 250க்கு கார்னெட் மோதிரம் வாங்கி அணிந்தால் செல்வ வளம் பெருகும்.

**P.R. JEWELLERY**
GOLD • SILVER • DIAMOND & BIRTH STONES
102, USMAN ROAD, T. NAGAR, MADRAS 600 017
TUESDAY HOLIDAY. PH: 434 4442

• தபால் எழுதினால் முழுவிபர பாம்லட் இலவசமாக அனுப்புகிறோம்.

தரத்திற்கு உத்திரவாதம்

**நியூமராலஜிபடி கல் மோதிரங்கள்**

| | |
|---|---|
| **March 21 to April 20** | Diamond (or) Ruby |
| **April 21 to May 21** | Emarald (or) Moonstone |
| **May 22 to June 21** | Pusparagam (or) Topaz |
| **June 22 to July 23** | Ruby (or) Pearl |
| **July 24 to August 23** | Diamond (or) Ruby |
| **August 24 to September 23** | Sapphire (or) Coral |
| **September 24 to October 23** | OPAL (or) Sapphire |
| **October 24 to November 22** | Topaz (or) Pusparagam |
| **November 23 to December 21** | Amethyst (or) Tarquise |
| **December 22 to January 20** | Garnet (or) Gomeydhagam |
| **January 21 to February 19** | Amethyst (or) Pearl |
| **February 20 to March 20** | Emarald (or) Aquamarine |

**ஒவ்வொரு ராசிக்கும் மோதிரம் ரூ 400**
**ஹைதராபாத் முத்து 10 கிராம், ஒரு மாலைக்கு ரூ 200**

வைரம் தவிர அனைத்து கல் வைத்த வெள்ளி மோதிரம் ஒன்று ரூ. 400/-க்கு கிடைக்கும். தபால் செலவு ரூ. 25 சேர்த்து ரூ. **425** க்கு D.D. (or) M.O அனுப்பினால் பதிவு தபாலில் அனுப்புகிறோம். **செப்புகம்பியில் அளவு எடுத்து அனுப்பவும்.**

## உண்ணுவதற்கோ ருசியானது...
## உடல்நலனுக்கு சிறப்பானது

# அஸ்வினி

## கருவேப்பிலைப் பொடி



நேரடியாக உபயோகிக்கலாம்!

- சுலபமாக, நேரடியாக உபயோகித்திடலாம் "கொலஸ்டிரால்" லை குறைக்கிறது.
- சிற்றுண்டிகளுக்கு, இட்லி, தோசை, உப்புமா, பொங்கல் போன்றவற்றுடன் சேர்த்து சாப்பிடலாம்.
- சாதத்துடன் கலந்து சுவையாக சாப்பிடலாம்.
- ஜீரண சக்தியை அதிகரிக்கிறது.
- புளியேப்பத்தை நீக்குகிறது.

அனைத்து பிரபல கடைகளிலும் கிடைக்கும்.

**அஸ்வினி** ஹேர் ஆயிலின் மற்றுமொரு வெற்றிகரமான தயாரிப்பு. தொடர்புகொள்ள வேண்டிய முகவரி :
10, காதர் நவாஸ் கான் ரோடு, சென்னை - 600 006. போன் : 828 4521.

போச்சு... குழந்தைங்களைப் பாருங்க... அவங்க பாட்டிலே விளையாடுறாங்க."

இதற்குள் அவனுடைய தாயார் வர, "பாரும்மா, அண்ணா என்னாலே நிம்மதி போச்சுங்கறான். அந்த ராங்கிக்காரி என்னடான்னா என் பிள்ளை கையை ஒடிச்சு அடுப்பிலே வைக்கணுங்கறா..." என பெண் அழ, அப்போது பிரிந்து வந்தவள்தான் நிகிலின் தாயார்.

இது யார் குற்றம்?

கோபம் கண்ணை மறைக்க என்ன பேசுகிறோம் என்ற சுய கண்டிப்பு இல்லாமல் வார்த்தைகளை அள்ளி வீசுதல். பாசி பிடித்த இடம் என்றால் ஜாக்கிரதையாகத்தான் நடக்க வேண்டும். குழப்பம் மிகுந்த சந்தர்ப்பங்களும் அப்படித்தான்!

முப்பத்திரண்டு பற்களுக்குக்கிடையே உள்ள நாக்கு. இதை எச்சரிக்கையாகத்தான் கையாள வேண்டும். பொம்மைகள் உடைந்து போகலாம். மனங்களை ஒடிய விடலாமா?

இரண்டு குழந்தைகளையும் யாராவது ஒருவர் அரவணைத்து கதை சொல்லி விளையாட்டுக் காட்டி இருக்கலாம். இருவருக்கும் பொறுமையில்லை...! இரு கத்தி உரசினால் தீப்பொறி பறக்கும். அவை மனங்களில் உரசினால் ரணகாயம்தான்!

கெட்டிப்பட்ட பூமி பிளப்பதில்லை... கெட்டிப்பட்ட குடும்பங்களும் பிரிவதில்லை. கீதையில் கண்ணன் சொன்னது போல் 'நான்' அழிய வேண்டும். நாம், நம் குடும்பம், நம் மாமியார், நம் நாத்தி என பெண்கள் நினைக்க, அனுசரணையாக உதவி செய்ய ஆளா... இதுவல்லவா குடும்பம் என பார்த்தவர் வியக்க வாழ வேண்டாமா?

உங்கள் வாழ்க்கை உங்கள் கையில்... அதைச் சாத்தான் கையில் தராதீர்கள்!

மனோரஞ்சிதம், சண்பகம், சம்பங்கி, சாமந்தி, மகிழம்பூ, தாழம்பூ, அரளி, மரு, தவனம், மல்லிகை, முல்லை, மருதோன்றி ஒவ்வொரு மலரும் ஒவ்வொரு நிறம்; ஒவ்வொரு மணம்! எல்லாம் சேர்ந்தால் தானே கதம்பம்! கூட்டுக் குடும்பமும் அப்படித்தான்!

பாத்திரத்தில், தொட்டியில் உள்ள நீருக்கும் நதி நீருக்கும் வித்தியாசம் இல்லையா? சலசலவென்று ஓடும் நதியைப் பார்க்க எத்தனை அழகு... விட்டுப் பிரியவே மனம் வருவதில்லையே! அது கூட்டுக் குடும்பம். தொட்டி நீர்தான் தனிக் குடித்தனம்.

அதுவே கடலானால்...? சம்சாரம் சாகரம்தான்!

அலைகள் எழும்பத்தான் செய்யும்! ஆனாலும் எத்தனை அழகு! அதில் கப்பல் விடுகிறோம்; மீன் பிடிக்கிறோம்.

"மங்களம் ரொம்பக் கொடுத்து வைச்சவ... எல்லாப் பிள்ளைகள், மருமகள்கள், பேரன், பேத்திகள்னு கொழிக்கறா! நமக்கும் வாச்சிருக்கே...! வந்த மூணாம் மாசமே பிச்சுண்டு போயிடுத்து..." இது அந்தக் குடும்பத்தின் காதுக் கெட்டாத விமர்சனம். தூர நின்று கூட்டுக் குடும்பம் என்ற கடலின் அழகை ரசிப்பவர்களின் வெளிப்பாடு இது.

மாமியார்க்கு சரி... மருமகள்களுக்கு?

"மங்களத்தை மட்டும் சொல்லாதே! மாட்டுப் பெண்களும் தங்கம்... எத்தனை அனுசரிச்சுண்டு போறாங்க. என்னுன்னா என்னெயாய் நிக்கறாங்களே!"

இதுதான் பரிசு! இதைவிட வேறென்ன வேண்டும்?

மங்களம் மாமி பேசி முடித்தபோது நான் யோசனையில் ஆழ்ந்து போனேன்.



**வீட்டிற்கு வந்த விருந்தினர் வாங்கி வந்த கால்கிலோ மிக்சர் பாக்கெட்டை உபயோகத்தில் இல்லாத ஹாட்பேக்கில் அவசரத்துக்கு போட்டு வைத்தேன். கிட்டத்தட்ட ஒரு வாரத்துக்கு பின் திடீரென்று திறந்து போது, ஹாட்பேக்கில் இருந்த மிக்ஸரை உபயோகிக்க மறந்ததற்கு வருந்திக் கொண்டே சிறிது எடுத்து சாப்பிட்டுப் பார்த்தேன். என்ன ஆச்சர்யம்! சிறிதும் கெடாமல் ருசி, சுவை, மணத்துடன் இருந்தது. அன்றிலிருந்து எல்லா ஸ்நாக்ஸ் ஐட்டங்களும் ஹாட் பேக்குகளில் கப்சிப்!**

**— கஸ்தூரி**

**சங்கடமான நாட்கள்...**
**இனி இல்லை...**



# அறிமுகம்

## இந்தியாவில் முதன் முறையாக

# டெய்ண்டி கேர்.

**ஒவ்வொரு மங்கைக்கும் தேவையானது...**

சில சமயங்களில் உணர்ச்சிகள் வார்த்தைகளால் விவரித்திட முடியாத அளவு ஆழமானவை.



டெய்ண்டி கேர். மாத விலக்கு காலங்களில் உங்களின் உடல் தூய்மையைப் பாதுகாத்திடும் பாரெங்கும் ஒப்புதல் பெற்ற முழுமையான திரவமாகும்... அதன் பாதுகாப்பான திறன் வாய்ந்த ஆண்ட்டி செப்டிக் குணங்கள் அரிப்பு மற்றும் துர்நாற்றத்தை விளைவிக்கும் கிருமிகளினின்று ஓர் அரிய பாதுகாப்பு வளையத்தினை உங்களுக்கு அளிக்கிறது. அதன் நீடித்திருக்கும் மென்மையான நறுமணம் நாள் முழுவதும் புத்துணர்ச்சியூட்டும் தூய்மையை உங்களுக்கு அளித்திடும். அதனின் தினசரி உபயோகம் உங்கள் அந்தரங்கத்தின் தூய்மையை அன்றாடம் பாதுகாத்திடும்.

டெய்ண்டி கேர் மீது நம்பிக்கைக் கொள்ளுங்கள். வெளிப்படுத்த இயலாத உங்களது அந்தரங்க துன்பங்கள் கடந்தகால அனுபவங்களாக மாறிவிடுவதை உணர்ந்திடுங்கள்.






**ASTRO DRUG & PHARMA LTD.**
194, Purasawalkam High Road, 1st Floor, Chennai - 600 010. India.
Ph : 6415596, 6415597, 6415540 Fax : 91-44-6415596

பிரபல மருந்து கடைகளிலும், டிபார்ட்மெண்டல் ஸ்டோர்களிலும் கிடைக்கும்.

**DAINTY CARE. THE ULTIMATE GERMICIDAL SOLUTION FOR MENSTRUAL HYGIENE.**

ANEJA / MDS / 137 / 96

**குழந்தைகளுக்கு கேளிக்கையும்கொண்டாட்டமும்!**

**பெரியவர்களுக்கோ அறிவுக் களஞ்சியம்!**





# 23 வது

# இந்திய சுற்றுலா மற்றும் தொழில் பொருட்காட்சி

**தீவுத் திடல், சென்னை - 600 009**



தமிழகத்தின் தலையாய பொருட்காட்சி. கேளிக்கைகள் பலப்பல. அறிவியல் கண்காட்சிகளும் எண்ணிலா. டோரா டோரா, ஜெயன்ட் வீல், ரெயில் வண்டி, இன்னும்பல இன்பகரமான விளையாட்டு வசதிகள். மேலும் பொது அறிவு வளர்க்கும் கூடங்கள், தமிழக,

# வேண்டாம் ஒன்-வே டிராபிக்

கடிதம் வந்திருந்தது. 'புதனன்று எங்களை எதிர்பார்க்கலாம்.'

என் தங்கை குடும்பம்தான்.

'காலையா, மத்தியானமா, சாயங்காலமா எப்ப வரான்னே புரியலியே' - இது நான்.

'பால் எக்ஸ்ட்ரா வேண்டியிருக்கும்' - இது என் மனைவி.

'காலைல பால் வாங்கும் போது எக்ஸ்ட்ரா வாங்கிரு. எதிர் வீட்டு ஃப்ரிட்ஜ்ல வச்சிரு. எப்ப வந்தாலும் யூஸ் பண்ணிக்கலாம்."

பிரச்னைக்கு சுலப தீர்வுடன் நான்.

ஆனால் ஏன் அவளிடம் நான் எதிர்பார்த்த தெளிவு இல்லை?

என் மகள் காதைக் கடித்தாள்.

'எதிர் வீட்டு மாமியோட நேத்து சண்டை. ஃப்ரிட்ஜில வைக்க முடியாது.'

ஆறு மாசமாய் இழைந்த நட்பு. ஏன் தடுமாறிப் போனது?

'ஏதோ அவசரத்திற்கு ஃபோன் நம்பர் கொடுத்தால் பரவாயில்லை. சும்மா எல்லா விஷயத்துக்கும் எங்க வீட்டு நம்பருக்கு ஃபோன் பண்ணச் சொல்லாதீங்க.'

சிடுசிடுப்பாய் பேசி விட்டுப் போகும் பக்கத்து வீட்டுக்காரர். இருக்காதா பின்னே. மதியம் வேலைகள் முடிந்து கண் அசருகிற நேரம் அல்லது இரவு சாப்பாட்டுத் தட்டில் கை வைத்த மறு நிமிடம் 'அடுத்த வீட்டு ரமேஷைக் கூப்பிடு' என்றால் எரிச்சல்தானே வரும்.

அடிப்படையில் நாம் எல்லோருமே நல்லவர்களாய்த்தான் இருக்கிறோம். பிறர்

கவலைகள் பகிர, தேவையான தருணங் களில் முடிந்தவரை உதவ, குறைந்த பட்சம் வார்த்தை அளவிலாவது தெம்பூட்ட என்று நம் முகங்களில் இனிமை தவழ்கிற சந்தர்ப்பங்கள் அநேகம்.

எப்போது மலர்ச்சி எரிச்சலாகிறது?

'எல்லை மீறும் போது' என்று ஒற்றை வரியில் சொல்லி விடலாம்.

'எது எல்லை' என்ற நிர்ணயம்தான் தலைக்குத் தலை மாறுகிறது.

ஒன்று நம் கையில் இருக்கிறது.

'ஒன் வே டிராபிக்'காய் எந்த உதவியும் இல்லாத வரை - எரிச்சல்களைச் சந்திக்க வேண்டிய அதிர்ச்சி நமக்கு வரவே வராது.

ஸ்பிரிட்டில் எப்போதும் வைத்து உதவும் பெண்மணி, ஏதோ ஒரு கவலையைச் சொல்லும் போது, 'அட, அவ்வளவுதானே.



ஜங்ஷன் பக்கம்தான் இவர் ஆபீஸ். வரும்போது டிக்கட் ரிஸர்வ் பண்ணிக் கிட்டு வரச் சொல்லிடறேன்' என்றால் அங்கே ஒன் வே டிராபிக் இல்லை.

எனக்குத் தெரிந்த ஒருவர், நம்மிடம் எப்படியாவது தன் வேலையை சாமர்த்தியமாய்க் கட்டி விடுவார்.

'எங்கேப்பா வெளியே போறே.'

'டவுனுக்கு.'

'அப்படியே எம்.ஆர்.ல இந்த டிடெய்ல் விசாரிச்சுட்டு வா.'

'நான் போஸ்ட் ஆபீஸ் பக்கந்தான் போறேன்.'

'நல்லதாப் போச்சு. இந்தத் தபாலை ரெஜிஸ்டர் பண்ணனும். இந்தா...'

'ஹைய்யோ' என்று மனத்தில் நொந்து...

'ரெஜிஸ்டர் மூணு மணியோட சரி'

என்று சால்ஜாப்பு சொன்னால்,

'போஸ்ட் ஆபீஸ் எதிர்ல நாட்டு மருந்துக் கடை இருக்கு பாரு... இந்த லிஸ்ட்ல இருக்கறதை வாங்கிக்கிட்டு வா.'

தப்பவே முடியாது அவரிடமிருந்து. இதுவே அவரிடம் நாம் ஒரு வேலையைக் கொடுக்கப் போனால்....

'என்ன... ஏன் பக்கத்து சீட் ராமகிருஷ்ணனுக்கு இந்தக் கவரைக் கொடுக்கணுமா... நான் இப்ப கம்ப்யூட்டர் ரூமுக்குத்தானே போறேன்...'

'பரவாயில்லே. ஆபீஸ் முடியறதுக்குள்ளே கொடுத்தாப் போதும்.'

'எதுக்கும் நீ ஒரு தடவை ஃபோன் பண்ணி ராமகிருஷ்ணனுக்கு சொல்லிரு. என்கிட்டேயிருந்து வாங்கிக்கச் சொல்லி. நான் மறந்து போனாலும் போயிருவேன்.'

இது எப்படி இருக்கு?

அலுவலகம் என்றில்லை. நாம் பழகுகிற எல்லா இடங் களிலுமே... 'முன் கை நீண்டால் முழங்கை நீளும்' என்று சொல்கிற மாதிரி உதவுகிற மனப்பான்மையை நாம் வளர்த்துக் கொண் டால், நம்மைத் தேடியும் உதவிகள் வரும்.

அதிலும் மிக முக்கியம், உதவியவருக்கு மனப்பூர்வ மாய் நாம் சொல்லுகிற 'நன்றி' வார்த்தையால் மட்டுமின்றி வேறு வழிகளாலும்.

எதிர் வீட்டுப் பெண்மணி ஏதோ அவசரத்திற்கு பால் வாங்கி வைக்கச் சொன்னார். கொடுத்த பால் பாத்திரம் மூன்றாவது நாள்தான் திரும்பியது. நெய் மணக்க சிறிது கேசரியுடன்.

'வெறும் பாத்திரமா திருப்பித் தர வேண்டாம்னு வச்சிருந்தேன். இன்னிக்கு ஸத்ய நாராயண பூஜை. பிரசாதம் வைச்சிருக்கேன்.'

மறுபடி வேறு உதவி அவர் கேட்கும் போது முந்திக் கொண்டு நம் மனசுக்குள் இனிமைதானே வரும்? எனவே... வேண்டாம் 'ஒன்.வே. டிராபிக்' நம் வாழ்வில். அதாவது பரஸ்பரம் நாம் உதவிகள் பெறுவதில். தருவதில். சரிதானே!

— ரிஷபன்




சாந்திக் இட்டதும் தங்கள் சருமம் 'பளிச்' ஆகிவிட்டதாக பலர் எழுதியுள்ளார்கள்.

# "சாந்திக் உண்மையிலேயே அற்புதமானது," என்கிறார் சுனிதா.

"நான் தங்களுடைய சாந்திக் ஹெர்பல் ஃபேசியல் டானிக்கைத் தவறாது உபயோகிப்பவள். என் முகத்தில் நிறைய பருக்கள் இருந்தன. ஆனால் இந்த ஃபேஸ் பேக் உபயோகித்ததும் அவை மறைந்துவிட்டன. நான் நல்ல சிகப்புதான் என்றாலும் சாந்திக் உபயோகித்தது முதல் என் நிறம் மேலும் கூடியுள்ளது. என் ஃப்ரெண்ட்ஸ் எல்லாரும் என் அழகின் ரகசியம் என்னவென்று கேட்கிறார்கள்.. நான் அவர்களைச் சாந்திக் இடுமாறுதான் ஆலோசனை சொல்கிறேன். என்னைப் பார்த்து கல்லூரியில் என்னோடு படிப்பவர்கள் நிறைய பேர் சாந்திக் உபயோகிக்கத் தொடங்கி விட்டார்கள்.

சாந்திக் உண்மையிலேயே அற்புதமானது. நான் இதைத் தவறாது உபயோகிப்பேன், மற்றவர்களையும் உபயோகிக்கச் சொல்வேன்."

நன்றி

**A. சுனிதா**
தியாகராய ரோடு, சென்னை*



சாந்திக் தமிழகம், கேரளா, மற்றும் பெங்களூர் நகரில் பல நல்ல கடைகளில் கிடைக்கிறது. விலை 50 கி. டப்பா ரூ.22, 100 கி. பேக் ரூ.39. கிடைக்குமிடம் அறிய கீழுள்ள முகவரிக்குத் தொடர்பு கொள்ளவும்.

* இக்கடிதம் ஆங்கிலத்தில் எழுதப்பட்டது

**தர்ஷணா ட்ரெடிஷனல் ப்ராடக்ட்ஸ்**
46, பகல்லா ரோடு, தி. நகர், சென்னை - 600 017 போன்: 8254790.

கிடைக்கும் இடம் சில: சென்னை: ஸ்பென்ஸர்ஸ், நீல்கிரிஸ், விடான், லக்ஷ்மி லாண்ட், புஷ்பா ஷாப், ஃபேமஸ் ஸ்டார், மஹாராஜா, காமதேனு மற்றும் சிந்தாமணி கிளைகள், ஆர்.ஆர். ஸ்டோர்ஸ், கிருஷ்ணா, லக்கஸ் & லக்கஸ், ஸ்பென்ஸர்ஸுப்பர், ஷாஜு, A to Z, கோல்ட் ஸ்ட் கோல்ட், மாலிக்ஸ்டீத் ஸ்டாக்கிஸ் மெடிக்கல்ஸ் கோவை: லக்ஷ்மி காம்ப்ளக்ஸ், செல்வசிஸ், நீல்கிரிஸ், ஸ்வராத் சேலம்: ரம்யா ஷாப்பிங் ப்ளாசா, சாமுண்டி காம்ப்ளக்ஸ், ஹரி ட்ரேடர்ஸ், சாய் கிரிதர், பாம்பே பேன்ஸி ஈரோடு: சங்கீதா ஷாப்பிங் சென்டர், ஸ்ரீ கண்ணன் ஸ்டோர், பாப்பா ஸ்டோர்ஸ், நீல்கிரிஸ் திருச்சி: பிக்-இன்-பாக், செல்வா ஸ்டோர்ஸ், மதுரை: தனலக்ஷ்மி ஏஜென்ஸீஸ், 20, வடக்கு சித்திரை வீதி, போன்: 621421 திருநெல்வேலி ஜங்ஷன்: பழனி ஆண்டவர் ஏஜென்ஸீஸ், 25L, பராசக்தி பில்டிங், போன்: 25313.
(சாந்திக் ஆயுர்வேத மருந்து)

Anugrah 2329/96 Tam



# அண்ணாவால் ஆராய்ச்சியில் இறங்கியவர்!...

"அலோபதி மருத்துவத்தால் முடியாது என்று கைவிடப்பட்ட ஏராளமான புற்று நோயாளிகளை சித்த வைத்தியம் காப்பாற்றி இருக்கிறது" என்கிறார் வைத்திய ரத்தினம் நீதிபதி வி. பலராமையாவின் மருமகன் டாக்டர் ரவிசங்கர்.

'ஜட்ஜ் வி. பலராமையா மறைந்த முதல்வர் பேரறிஞர் அண்ணாவின் நெருங்கிய நண்பர். பச்சையப்பன் கல்லூரியில் இருவரும் படிக்கும் போதே நண்பர்கள் ஆனார்கள்.

நீதிபதியாக இருந்த காலகட்டத்திலேயே பலராமையா புற்று நோய் பற்றி ஆராய்ந்து வந்தவர். முதல்வராக இருந்த போது அண்ணா புற்று நோய்க்கு பலியானது அவரை பெரிதும் பாதித்தது. உயிர் நண்பரை புற்றுநோய் வாரிக் கொண்டு போய்விட்டதில் மனம் உடைந்தார். அப்போதே புற்றுநோய்க்கு சித்த மருந்தை கண்டு பிடிப்பதில் தீவிர ஆராய்ச்சியில் இறங்கினார். சில ஆண்டுகளில் அவரது முயற்சி வெற்றி பெற்றது.

பல புற்றுநோயாளிகளை அவர் குணப்படுத்தினார். பலராமையாவிடம் புற்றுநோய்க்கு சிகிச்சை பெற்றவர்கள் பலர் இன்னமும் உயிரோடு வாழ்ந்து வருகிறார்கள்.

அவரது மறைவுக்குப் பிறகு அப்பணியை ஜட்ஜ் பலராமையின் மகள் அஞ்சனா தேவியும், மருமகன் ரவிசங்கரும் தொடர்ந்து மேற்கொண்டு வருகிறார்கள்.

சென்னை, அரும்பாக்கம் சஞ்சீவி நகர், 10 பாஞ்சாலி அம்மன் தெருவில் அமைந்துள்ள பலராமையாவின் 'ஜட்ஜ் பங்களா' (தொ. - 422521, 4849383) இன்று புற்றுநோய் சித்தவைத்திய சாலையாக திகழ்கிறது. அவர்களிடம் இது பற்றி விரிவாகக் கேட்டோம்.

**"புற்றுநோய் என்பது என்ன?"**

"உடற் கூறுகளின் ஒவ்வொரு பகுதியும் பாதித்து மரணம் வரை போய் விடக்கூடிய நோய், ஆண், பெண் குழந்தை என்று யாரையும் விட்டு வைக்காத நோய். இது குறிப்பாக வயது முதிர்ந்த நிலையில் உள்ளவர்களை அதிகம் பாதிக்கிறது.

நோயின் பரவுகிற தன்மையைக் கருதியோ என்னவோ அலோபதி மருத்துவ முறைப்படி இது புற்றுநோய் என குறிப்பிடப்படுகிறது. ஜோதிட முறைப்படி 12 ராசிகளுள் ஒன்றான கேன்சர் என்றழைக்கப்படும் கடக ராசிக்கு உரியது நண்டு. இது எல்லா திசைகளிலும் நகரும் தன்மையை இயற்கையாகக் கொண்டுள்ளது. எனவேதான் புற்றுநோய் (கேன்சர்) என்ற பெயர் நிலைத்து விட்டது.

**"ஒருவர் புற்றுநோய்க்கு ஆளானவர் என்பதை எப்படி தெரிந்து கொள்வது?"**

"இந்நோய் பாதிக்கப்பட்ட ஆணோ, பெண்ணோ தாங்கள் பலவீனமாக இருப்பதை உணர்வர். ரத்த சோகை, எடைக்குறைவு ஏற்படுதல் பசியில்லாத தன்மை, உடல்வலி இவையெல்லாம் ஏற்படும். மேற்சொன்ன உடல் உபாதை

களுக்கு மருத்துவ சிகிச்சை மேற்கொண்டும், குணம் கிடைக்காது போனால், வந்திருப்பது என்ன நோய் என்பதை பரிசோதனை மூலம் தெரிந்து கொள்ள வேண்டும். புற்றுநோய் என்று உறுதிப்பட்டால் தாமதமின்றி சிகிச்சை மேற்கொள்ள வேண்டும்."

**"இன்று அதிக அளவில் மக்களை பாதிக்கும் புற்று நோய் வகை எது?"**

"நுரையீரல் புற்றுநோய், வயிற்றுப் புற்று நோய், கல்லீரல் புற்றுநோய் மூன்றும் அதிக அளவில் மக்களை தாக்குகிறது."

**"இதற்குக் காரணம்?"**

"இன்றைய சுற்றுப்புற சூழல்தான் காரணம். காற்றில் பறந்து வரும் தொழிற்சாலையின் புகை, புகை பிடிக்கும் பழக்கம், நுரையீரலில் புற்றுநோய்க்கு வழி வகுக்கிறது.

நாம் உண்ணும் உணவில் ரசாயன உரம் கலந்து இருப்பதால் இன்றைய சூழலில் வயிறு மற்றும் கல்லீரலில் புற்றுநோய் ஏற்படுகிறது. பெண் களுக்கு மார்பகப் புற்றுநோய், கர்ப் பப்பை புற்றுநோய் அதிக அளவில் தாக்குகிறது.

**"உங்களிடம் வரும் ஒரு நோயாளிக்கு புற்றுநோய்தான் என்று எப்படி கண்டு பிடிப் பீர்கள்?"**

"இங்கே வருபவர்கள் பெரும்பாலும் நூற்றுக்கு 90 பேரும் ஏற்கெனவே பயாப்ஸி மற்ற டெஸ்டுகள் எல்லாம் முடித்து, கேன்சர் என்று உறுதி செய்யப்பட்டு கீமோ தெரபி, ரேடியேஷன் எல்லாம் முடிந்து குணமாகவில்லை என்ற நிலையில்தான் வருகிறார்கள். எனவே உடனுக்குடன் கேன்சர் சிகிச்சையை நாங்கள் ஆரம்பிக்கிறோம். அப்படி ஆரம்ப நிலையிலேயே எங்களிடம் வருபவர்களுக்கு ஆன்ட்டி கேன்சர் மருந்துகளைக் கொடுக்கிறோம். இந்த மருந்துகள் நோய் எதிர்ப்பு சக்தியை அதிகப்படுத்தக் கூடியவை. இந்த மருந்துகள் Malignant Tumour தவிர மற்ற எல்லா கட்டிகளையும் குணமாக்க வல்லவை."

**"தங்களிடம் சிகிச்சை பெறுவர்களின் குணமடையும் விகிதம் எப்படி?"**

"ஜட்ஜ் பலராமையா இருக்கும் பொழுது 70-75 சதவிகிதம் இருந்தது. நாங்கள் இப்போது மூன்றாண்டுகளாக சிகிச்சை செய்து கொண்டிருக்கிறோம். 50 சதவீதம் பேர் குணமடைகிறார்கள்."

**"50 சதவிகிதம் தோல்விக்குக் காரணம் என்ன?"**

"நோயாளிகளின் நம்பிக்கையின்மைதான். எங்கள் மருந்துகளை சாப்பிட்டு நோயின் தீவிரம் குறைந்தவுடன் குணமாகி விட்டது என்று அவர்களாகவே முடிவு செய்து மருந்தைத் தொடாமல் விட்டு விடுவது... மீண்டும் பயாப்ஸி ரேடியேஷன் என்று அலோபதியை நாடி விடுவது போன்ற அவசரம் தான் காரணம்."



• ஜட்ஜ் பலராமையா

**"புற்றுநோய்க்கு என்ன மாதிரி மருந்து கொடுத்து வருகிறீர்கள்?"**

"சூர்ணம், பஸ் பம், ஆயுர்வே அரிஷ்டம், லேகியம் வி.ஆர் பில்ஸ், எம் பில்ஸ், பலருக்கு தெரிந்த இடிவெல்லாதி மருந்து இவைகளை கொடுக்கிறோம். எம்டி பில்ஸ் என்பது மகான் திருவேங்கடாச்சாரி என்பவர் பெரியவர் பலரா மையாவுக்குச் சொல்லிக் கொடுத்த ஒரு அரிய மருந்து. லிவர், எலும்பு, கேன்சருக்கு வரப்பிர சாதம். வி.ஆர் பில்ஸ் என்பது பலராமையாவின் Cancer Pills. அவராகவே ஆராய்ச்சி செய்து கண்டு பிடித்த மருந்து. உடம்பில் எந்த இடத்தில் கேன்சர் வந்தாலும் குணமாக்கி விடக்கூடிய மருந்து."

**"புற்றுநோய் என்று தெரிந்த பிறகு என்ன முன்னெச்சரிக்கை தேவை?"**

"முதலில் பயம் கூடாது. பயமே நோய் குணமாக தடையாகி விடக்கூடும். சைவ, உணவை மட்டுமே சாப்பிட வேண்டும். ரொம்ப வெப்பமான சூழ்நிலை ஆகாது.

ஆரம்ப நிலையில் கண்டு பிடிக்கப்பட்டு சிகிச்சை மேற் கொள்ளும் புற்றுநோயாளிகள் முழு குணம் பெறுவார்கள். முற்றிய நிலையில் வந்தால் மட்டுமே ஏதும் செய்ய முடியாது. அப்போது கூட மரணத்தைத் தள்ளிப் போட முடியும். இருக்கிற காலம் வரை வேதனையில்லாமல் மருந்து மூலம் வைத்திருக்க முடியும்."

**"புற்றுநோய்க்கான உங்களது சித்த மருத்துவம் பற்றி என்ன கூற விரும்புகிறீர்கள்?"**

"சித்த மருத்துவத்தில் எல்லா வகையான நோய்களுக்கும் மருந்துகள் உண்டு. அகத்தியர், போகர், புலிப்பாணி ஆகிய சித்தர்கள் ஒவ்வொரு நோய்க்கும் தனித்தனி முறைகளை கை யாண்டு இருக்கிறார்கள். அவர்கள் எழுதி வைத்த ஏட்டுச் சுவடிகளில் இருந்து இன்றைக்கு ஏரான மான சித்த மருத்துவர்கள் உருவாகி இருக்கிறார்கள்.

ஒவ்வொரு சித்தர் முறைகளையும் எடுத்து கையாண்டு இன்றைக்கு இருக்கும் நோய்த் தன்மைக்கு ஏற்ப மருந்துகளை ஆராய்ச்சி செய்வதில் நீதிபதி பலராமையா வாழ்க்கையில் பெரும்பகுதியை செலவழித்தார். அதில் வெற்றியும் கண்டார். இதனால்தான் இன்றைக்கு புற்று நோய்களுக்கு மட்டும் அல்லாமல் நீரிழிவு, வயிற்றுப்புண், வாயுத் தொல்லை உள்பட அனைத்து நோய்களுக்கும் சிகிச்சையளித்து குணப்படுத்த முடிகிறது" என்கிறார் டாக்டர் ரவிசங்கர்.

பேட்டி : **அரசு கிருந்திகா**

# இந்த மாதம் எப்படி



## மேஷ ராசி :

*அசுவினி, பரணி, கிருத்திகை 1 ஆம் பாதம்.*

நல்லதொரு மாதம். மாத ஆரம்பத்தில் ஏதோ ஒரு விதத்தில் தன லாபம் வரும். இதுவரை சகோதரரிடமிருந்து வராத பூர்வீக சொத்துக்கள் இந்த மாதத்தில் உங்களுக்குக் கிடைக்கும் நிலை. எனவே முயற்சி செய்யுங்கள். கடன் தொல்லை குறையும். அதற்கான பணத்தைப் பெறுவதில் புதனும், சூரியனும் நன்கு உதவுவார்கள். ஆயினும் மாத ஆரம்பத்தில் பெண்ணொருத்தியால் அவமானம் வரலாம். எனவே பிற பெண்களுடன் பழகுவதில், பேசுவதில் சற்று எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. மாணவச் செல்வங்களுக்குக் கல்வியில் நல்லதொரு முன்னேற்றம் உண்டு. இதுவரை படிக்காமல் காலத்தை வீணாக்கிய மாணவர்கள் இந்த மாதம் முதல் கவனித்துப் படித்தால் கவலையின்றித் தேர்வுகளில் வெற்றி பெறலாம். எந்தச் செயலையும் செய்வதற்குமுன் கேதுவையும், விநாயகரையும் மானசிகமாக வணங்கிவிட்டே தொடங்குங்கள். சனீஸ்வரன் சற்று ஏதேனும் ஒரு விதத்தில் மனவேதனை தரலாம். அதைத் தாங்கிக் கொள்ள வேண்டியதுதான். நற்பவழம் ஒன்றை அணிந்து பாருங்களேன். சிவப்பு மலர்களால் ஸ்ரீ சுப்ரமணியருக்கு அர்ச்சனை செய்யலாம். இந்த இராசிக் குழந்தைகளும் சரி, பெரியவர்களும் சரி சனிக்கிழமை தோறும் சனீஸ்வர ஸ்தோத்திரம் கூறி எள் எண்ணெயினால் ஸ்நானம் செய்வது சாலச் சிறந்ததாகும்.





## ரிஷப ராசி :

*கிருத்திகை 2, 3, 4 ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2 ஆம் பாதங்கள்.*

மாத ஆரம்பத்தில் சூரியனும், புதனும் அனுகூலமான நிலை யில் இல்லாததால் சற்று மனக்குழப்பங்களும், எந்த விஷயத்திலும் எதிர்ப்பும் ஏமாற்றமும் ஏற்பட்டாலும் சுக்கிரன் அதற்குமாறாக உங்கள் செயல்களில் வெற்றியைப் பெற உதவுவதால் கவலை தேவையில்லை. பரிவர்த்தனை பெறும் நீச்ச குருவின் பார்வை உங்களுக்குச் சாதகமாகவே அமைந்திருப்பதால், இதுவரை தடைப்பட்டு வந்த திருமணமோ, பதவி உயர்வோ, வரவேண்டிய இடத்திலிருந்து பணமோ உங்களை நாடிவர இருக்கிறது. சனீஸ்வரனும் கேதுவும் உதவும் நிலையில் இருப்பதால் தொழிலில் ஒரு ஸ்திரத் தன்மை உண்டாகும். உங்கள் கணவருக்கு இருக்கும் கடன் தொல்லை, அல்லது மனைவிக்குள்ள டென்ஷன் இவை குறையும். 5-ல் உள்ள செவ்வாயும் ராகுவும் குழந்தை களினாலோ, தந்தை வழி உறவினர்களினாலோ சிறு தொல்லைகளை உண் டாக்கலாம். இதன் காரணமாக தாம்பத்ய உறவில் சிற்சில சமயங்களில் சிறு சச்சரவு தோன்றி மறையலாம். குருசனி பரிவர்த்தனை உங்கள் இருவருடைய மனச்சங்கடங்களை, வேற்றுமைகளைக் குறைக்க உதவும். பொதுவாக நமது மனநிலையை இடம், காலம், நேரம் இவைகளுக்கேற்ப நாம் மாற்றிக் கொள்ள வேண்டும். தட்சிணாமூர்த்தியை ஆராதித்தாலே போதும். எல்லாம் நல்லபடியே நடக்கும்.

**பிப்ரவரி 1997**



## மிதுன ராசி :

*மிருகசீரிஷம் 3, 4 ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம்*

*1, 2, 3 ஆம் பாதங்கள்.*

இராசிநாதன் உதவும் நிலை; எனவே மாணவ மாணவிகளாக உள்ளவர்களுக்கு புதனின் அருளால் கல்வியில், கலைகளில் நல்ல முன்னேற்றம் உண்டு. சுக்கிரனால் சுகமான வாழ்க்கையுண்டு. சுப நிகழ்ச்சியும் எதிர்பார்த்த படி நடக்கும். மற்றபடி வேறு எந்த கிரகமும் உதவும் நிலையில் இல்லை என்பதால் சிந்தனை யில் சொல்லில் செயலில் எச்சரிக்கை மிகவும் அவசியம். அவசியமில்லாத பிரச்னைகளில் தலையிட வேண்டாம். எதிலும் எப்பொழுதும் சற்று முன்ஜாக்கிரதை அவசியமே. உங்களது சிறு கவனக்குறைவு உங்களது எதிரிகளுக்குப் பெரும் மனநிறைவைத் தருமளவுக்குச் சம்பவங் கள் அமையலாம். அஷ்டமத்துக் குரு பலவீனம் பெற்றாலும் சனியுடன் பரிவர்த்தனைப் பெறுவதால் மிகப் பெரிய அளவில் பாதிப்பு ஏதும் ஏற்படாது, கவலை வேண்டாம். ஸ்ரீ ஆஞ்சநேயரையும், விநாயகரையும் விடாப்பிடி யாகப் பிடித்துக் கொள்ளுங்கள். அலுவலகம் செல்லும் பெண்கள் தங்கள் பையைக் கையிலே கவனமாக வைத்துக் கொள்ளுங்கள். இல்லை யேல் பொருளிழப்பு நேரலாம்.

## கடக ராசி :



*புனர்பூசம் 4 ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.*

சனியுடன் பரிவர்த் தனைப் பெற்ற குருவின் பார்வை இராசிக்கு இருப்ப தால் இதுவரை இருந்த குழப் பங்கள் குறையலாம். நிலம் அல்லது வீட்டு மனை வாங் கவும், கடன் தொல்லைகள் தீரவும் செவ்வாய் உதவுகிறார். எதிர்பாராத தனலாபத் திற்கு ராகு வழி கோலுவார். குருவின் பார்வை சுப நிகழ்ச்சிக்கு உதவலாம். தொழில் அபி விருத்தி ஏற்படும். குழந்தைகளின் கல்வி நலன் நன்கு அமையும். அரசாங்கத்திடமிருந்து உதவி யைப் பெறக் காலம் கனிந்து வந்துள்ளது. முயற்சி செய்யலாமே. மாத ஆரம்பத்தில் வீட்டில் சில்லறைத் தகராறுகள் ஏற்படலாம். அலுவலகப் பெண் டிருக்கும் மேலதிகாரிகளின் கெடுபிடி அதிக மாக இருக்கலாம். கண்ணில் கோளாறு வந்து நீங்கும். ஒற்றைப் பக்கத் தலைவலி சிலருக்கு மருத்துவச் செலவைத் தரும். ஆயினும் மாதத் தின் பிற்பகுதியில் புதனும் சுக்கிரனும் உதவும் நிலை. அதனால் கலைஞர்களுக்கும், காவல் துறையினர்க்கும் நல்லதொரு நிலைமை உருவாகும். தனித் தேர்வுகள் குறிப்பாக கணக்காயர்கள் சம்பந்த மான தேர்வுகளை எழுதுபவர்களுக்கு வெற்றி உண்டு. ஒரு வெளிநாட்டுப் பிரயாணம் ஏற் படும். சந்திரன் ஆட்சி, உச்சம் பெற்ற ஜாதகர் களுக்கும், ராகு திசை நடப்பவர்களுக்கும் நற் பயன்கள் அதிகம் ஏற்படும். சனீஸ்வரன் ரோகஸ்தானமான தனுசு ராசியைப் பார்ப்ப தால் எதிர்பாராத விதமாக உடல் நிலை பாதிக் கப்பட்டுச் சரியாகும்.

## சிம்ம ராசி :



*மகம், பூரம், உத்திரம் 1 ஆம் பாதம்.*

மாத ஆரம்பத்தில் சூரி யனும் புதனும் அனுகூல மான நிலையில் உள்ளதால் வழக்கு, வியாஜ்ஜியங்களில் வெற்றி ஏற்படும். எதிரிகள் உங்கள் வெற்றி யைக் கண்டு வேதனைப்படுவார்கள். அந்த அளவிற்கு சூரியனும் சரி, புதனும் சரி உங்க ளுக்குக் கவசமாக நிற்கிறார்கள். ஆனால் மாதத்தின் பிற்பகுதியில் ஏறுமாறான நிலை ஏற்பட்டு உங்களுக்கே மனோவேதனை ஏற் படும் நிலைக்குத் தள்ளப்படலாம். ஆறில் உள்ள குரு ஆரோக்கியத்தைக் குறைக்கலாம். எட்டாமிடத்தில் உள்ள சனி உங்கள் முயற்சி களைப் பலவீனமாக்கலாம். எனவே சனிக் கிழமைகளில் நல்லெண்ணெய் ஸ்நானம் செய் யும் போது, அந்தந்த அங்கத்தில் எண்ணெய் தேய்க்கும் போதும் சனீஸ்வர பகவானை நினைத்து பூசிக் கொண்டு, பின் ஸ்நானம் செய்

**சில் நகைகளின் ஓரங்கள் நம்மை அவ்வப்போது 'சுருக்' என்று பதம் பார்க்குமல்லவா? நகங்களுக்குப் போடும் 'வார்னிஷை' நகையின் கூர் மையான பாகத்தில் தேய்த்து விட்டால் குத்தலில் இருந்து விடு தலை.**

**— ஆர். கீதா**



# இம்மாத இல்லத்தரசி

**சமையல் கூப்பன்**

பொருள் : காலை நேர உணவு/கடைசி தேதி : 15.2.97

என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இதனுடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

வது நல்லது. ஆத்மார்த்தமான பக்தியுடன் நவக்கிரகங்களை நினையுங்கள். நல்லது நடக்காவிட்டாலும் கஷ்ட நஷ்டங்கள் ஏற்படாது என நம்பலாம். காலையில் எழுந்ததும் இராசிநாதனாகிய சூரியனைப் பார்த்து நமஸ்கரித்துவிட்டு உங்கள் அன்றாடப் பணியைத் தொடங்குவதே சரியான பரிகாரம் ஆகும். அத்துடன் சிறந்த வேதவித்து ஒருவரைக் கொண்டு ஸ்ரீ நாராயணப் பட்டத்ரி எழுதியுள்ள நாராயணீயத்தை வீட்டில் படிக்கச் சொல்லி கேட்பதால் சகல கஷ்டங்களும் நீங்கும். குறைந்தபட்சமாகக் கடைசியில் எழுதியுள்ள ஸ்லோகத்தை உச்சரித்தாலே போதும்.

## கன்னி ராசி :

*உத்திரம் 2, 3, 4 ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2 ஆம் பாதங்கள்.*

நல்லதொரு மாதமாக இருக்கும். குருவின் பார்வையும், சனியின் பார்வையும் ஜோதிட ரீதியாகப் பரிவர்த்தனை பெற்று இராசியைப் பார்ப்பதால் நல்லவை அதிகமாக நடக்க வேண்டும். மாதத்தின் பிற்பகுதியில் சுக்கிரன் ஒரு



பெண்ணின் மூலம் குடும்பத்தில் சஞ்சலத்தை ஏற்படுத்தலாம். எனினும், அதே கால கட்டத்தில் சூரியனும் புதனும் உதவும் நிலையில் உள்ளதால் பிரச்னைகள் பிசுபிசுத்துவிடும். கவலை வேண்டாம். குழந்தைகளின் கல்வி விஷயமாக முன்னேற்றம் காண்பார்கள். பரிசுகளும் பாராட்டுகளும்கூட பெறுவார்கள். படத்துறை, நாடகத்துறைகளில் ஒரு சிலருக்கு வாய்ப்பு கிடைத்து நன்கு பரிமளிக்கலாம். திருமாலின் திவ்ய பிரபந்தத்திலிருந்து சில பாடல்களையோ, அல்லது அவனது ஆயிரம் நாமங்களையோ கூறுவதன் மூலம் சிரமங்களைக் குறைக்க முடியும். பிரச்னைகளை அது எந்த வடிவத்திலிருந்தாலும், யாரிடமிருந்து ஏற்பட்டாலும் சுலபமாகத் தீர்த்துவிட முடியும். விவசாயிகளுக்கு ஏற்றதொரு நல்ல நிலை உண்டாகும். அரசினால் ஏதேனும் மானியம் அல்லது நீண்ட காலத் தவணையில் கடன் பெற முடியும். காலையிலும் மாலையிலும் துளசி மாடத்திற்கு விளக்கு வைத்து, துளசிச் செடிக்கு நீர் ஊற்றுங்கள். துளசி துளிர்விட விட உங்களது வாழ்க்கையிலும் சுபிட்சம் துளிர் விட ஆரம்பிக்கும். துளசிப் பாத்தியில் தேங்கிய நீரை சற்றே எடுத்து தலையின் மேல் தெளித்துக் கொள்ளுவதால் பாவம் கழியும். இதை அனைவருமே செய்யலாம்.

# துலா ராசி :



*சித்திரை 3, 4, ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1, 2, 3 ஆம் பாதங்கள்.*

ராகுவும், சனியும் மாதம் பூராவும் நல்ல நிலையில் சஞ்சரிக்கிறார்கள். சூரியனால் சுகமில்லை. அரசாங்கத்திலிருந்து வரவேண்டிய வரவினங்கள் குறிப்பிட்ட காலத்திற்குள் வராமல் அவசியமற்ற காலதாமதம் ஏற்பட வாய்ப்பு உண்டு. பித்த மயக்கம், இரத்த அழுத்தத்தில் ஏற்ற இறக்கம், தந்தை வழி உறவினர் ஒருவருக்கு உடல்நிலை பாதிப்பு என ஏதேனும் ஒரு விதத்தில் மன அமைதியும் ஆரோக்கியமும் பாதிக்கப்படலாம். எனினும் சுக்கிரனும் புதனும் எல்லாவற்றையும் சமாளித்து வெற்றி பெறும் ஆற்றலைத் தர இருக்கிறார்கள். மாத இறுதியில் தாய் மாமன் வகையில் உறவு பாதிக்கப்படலாம். சுகஸ்தானம் எனும் 4ம் இடத்தில் குரு நீச்சம் பெறுவதுடன், சனியுடன் பரிவர்த்தனை பெறுவதால் தொழில் ரீதியாக பாதகம் இல்லை. இரும்புத் தொழில், கனிமத்துறை, கல்வித்துறையில் உள்ளவர்களுக்கு நல்லதொரு காலகட்டம். விவசாயிகளுக்கு ஏற்றமானதொரு சூழ்நிலை உண்டு. பயன்படுத்திக் கொள்ளுங்கள். நிலவள வங்கியிலிருந்து உதவ சுக்கிரன் உதவலாம். மாத ஆரம்பத்தில் புதனும் இது விஷயத்தில் உங்களுக்குச் சாதகமாக உள்ளார். பழைய பாக்கி ஒன்று வசூலாகலாம். நடந்து முடிந்த குரு பெயர்ச்சி உங்களுக்கு அதிகமான பாதிப்பை ஏற்படுத்தியிருக்க நியாயமில்லை. கவலை வேண்டாம். ஸ்ரீ சத்தியநாராயண பூஜை செய்வது நல்லது.



**பொதுவாக எந்த ஊறுகாய்க்குமே கடுகு எண்ணெய் ஊற்றி விட்டால் கெட்டுப் போவதைத் தவிர்க்கலாம். ஆனால் நம்மவர்களுக்குக் கடுகு எண்ணெய் பழக்கம் இல்லை என்பதால் ஒரு துண்டு வெல்லம் சேர்த்துக் கொள்ளலாம்.**

**— பூர்ணிமா**



# விருச்சிக ராசி :



*விசாகம் 4-ம் பாதம், அனுஷம், கேட்டை.*

இராசிநாதனாகிய அங்காரகன் இலாப நிலையில் இராகுவுடன் சேர்ந்திருப்பதால் தனலாபமும், தானிய லாபமும், தாம்பத்திய உறவில் நெருக்கமும் ஏற்பட்டு குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும். சுப நிகழ்ச்சியும் நடக்கும். பதவி ஒன்று கிடைக்கும். நண்பர் ஒருவரால் நீங்கள் நினைக்கும் ஒரு செயலில் கட்டாயம் வெற்றி உண்டு. குரு 3ல் இருந்தால் பதவி நீக்கம் என்பர். ஆனால் குரு நீச்சமடைந்து, சனியுடன் பரிவர்த்தனம் பெறுவது விசேஷம். எனவே கவலை வேண்டாம். 5ல் உள்ள சனியும், கேதுவும் உடல் நிலையைச் சற்றே பாதித்தாலும், இராசிநாதனாகிய செவ்வாயைக் குரு பார்ப்பதால் பாதகம் அதிகம் ஏற்படாது. அரசு அலுவலகம் சென்று பணியாற்றுபவர்களுக்கு இடமாற்றம் உண்டு. அது நன்மை தருவதாகவே அமையும். சூரியனால் மாத ஆரம்பத்தில் ஒரு மாற்றம் ஏற்பட்டு, மாத இறுதியில் அது மீண்டும் அமல் செய்ய முடியாத அளவிற்கு நின்று விடலாம். எனவே ஆதித்யஹிருதய ஸ்தோத்திரம் படியுங்கள். ஸ்ரீ குருவாயூரப்பனைப் பார்த்துவிட்டு வரலாம். அல்லது வீட்டில் நாராயணீயத்தைப் படிக்கச் செய்யலாம். இது மிகவும் அவசியமானது ஒன்றாகும். முழுவதும் படிக்காவிட்டாலும் ஏதேனும் சிலவற்றைப் படித்தாலும் போதும்.

# தனுசு ராசி :



*மூலம், பூராடம், உத்திராடம் 1 ஆம் பாதம்.*

மாதத்தின் முற்பகுதியில் தொழிலில் இருந்த தொய்வு நீங்கும். தடைப்பட்ட பதவி உயர்வு உங்களுக்குக் கிடைக்கும். கலைஞர்களுக்குக் கீர்த்தியும் பண வரவும் உண்டு. தோல் சம்பந்தமான நோய் உள்ளவர்கள், ஒவ்வாமை எனும் தன்மையை (அலர்ஜி) உடையவர்கள் ஆகார விஷயத்தில் எச்சரிக்கையுடன் இருங்கள். உங்க[illegible] சிறு கவனக்குறைவும், உங்களை ஏமாற்ற எண்ணுபவர்களுக்கு ஏற்றதொரு தருணமாக ஆகிவிடும். அலுவலகப் பணிகளில் கூட அலட்சியமாக இருந்துவிட

அறிமுகம்

# வசதிக்கு ஒரு புது வடிவம்

ULTRA
MIXER GRINDER




மேஜை மீது வைத்துக் கொள்ளும் வகையில், எங்களது அல்ட்ரா கிரைண்ட் + என்ற இந்தியாவின் முதலாவது டேபிள்-டாப் வெட் கிரைண்டர் இல்லத்தரசிகளிடையே பெரும் வரவேற்பை பெற்றுள்ளது.

இப்போது ஒரு புதிய வடிவிலே அறிமுகப்படுத்துகிறோம் - அல்ட்ரா மிக்ஸர் கிரைண்டர். மிகவும் அடக்கமான, ஆனால் ஆற்றல் நிறைந்த கிச்சன் மெஷின்! உங்கள் வசதிக்கு ஒரு புதிய வடிவம், பயன்படுத்த மிக எளிதாக இருப்பதோடு, ஆற்றல் திறன் மிக்க வகையிலும் இது வடிவமைக்கப்பட்டுள்ளது. இங்கும் அங்கும் இடம் மாற்ற வசதியாக, இதன் எடை மிகக் குறைவானது. நம்பகமான செயல்பாட்டுக்கு உறுதியான அமைப்பு. நல்ல தரம் மற்றும் சிறந்த திறன். இந்தப் புதுமையான வடிவத்திற்குச் சிறிது இடமே போதும்!

அருகிலுள்ள விற்பனையாளரிடம் இன்றே செல்லுங்கள். இந்த புதிய வடிவம் உங்களுக்குப் புதிய வசதிகளைத் தந்து, புதிய மாற்றத்தை ஏற்படுத்தும் என்பதை நன்றாக புரிந்து கொள்ளலாம்.

மகத்தான வசதி.
மகத்தான அனுபவம்.

Design Regd. No.: 169864 & 169865

எல்ஜி
தயாரிப்பு

எல்ஜி அல்ட்ரா இண்டஸ்டிரீஸ் லிமிடெட்: எல்ஜி ஹவுஸ், திருச்சி ரோடு, கோயம்புத்தூர்–641 045. போன்: 314571, 314589, 316132, 313984 பேக்ஸ்: 311740
மண்டல அலுவலகம்: 45/1, கிரி ரோடு, சென்னை–600 017. போன்:8225735

தமிழ்நாட்டில் முக்கிய விற்பனை நிலையங்கள் எல்லாவற்றிலும் கிடைக்கும்.

Anugrah 2312/96 R



விருந்தினர் குழந்தை தக்காளி சூப் வேண்டும் என ஒரே அழுகை. நான் உடனே ஒரு கப் சூடான நீர் எடுத்து அதில் வீட்டில் இருக்கும் தக்காளி சாஸ் 2 ஸ்பூன் விட்டு சிறிது உப்புத் தூள், மிளகுத்தூள், வெண்ணெய் சேர்த்து, வீட்டிலிருக்கும் ரஸ்க்கில் ஒரு துண்டு ஒடித்துப் போட்டு அக் குழந்தையிடம் கொடுத்தேன்! 'சூப் சூப்பர்' என்றது அந்த வாண்டு.

— ஆர். பாலா

வேண்டாம். குறிப்பாக நிதி நிறுவனங்களில் நீதியைக் கையாளும் பொறுப்பில் உள்ளவர்களுக்கு இது பொருந்தும். மற்றபடி நீச்சம் பெறும் உங்கள் இராசி நாதனால், சனியுடன் பரிவர்த்தனை பெறும் காரணத்தால் நல்லவையே நடக்கும் வாய்ப்பு அதிகம் உண்டு. புதனால் புகழுக்கு இழுக்கு ஏற்படலாம். எனவே தகாததும் தகுதிக்குக் குறைவானதுமான பழக்க வழக்கத்திற்கு ஒரு முழுக்குப் போடுவது நல்லது எனத் தெரிகிறது. பரிகாரம் எனப் பார்க்கும் போது மனம் திருந்துவதும், தீங்கிழைக்கும் பழக்கத்தை விடுவதும் ஒரு பரிகாரமே. சிவ வழிபாடு சிறந்தது.

## மகர ராசி :



*உத்திராடம் 2, 3, 4 ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 ஆம் பாதங்கள்.*

சுக்கிரனால் சுபநிகழ்ச்சிக்கு இடமுண்டு. சனியினால் சகல காரியங்களிலும் வெற்றி உண்டு. தனலாபமும் உண்டு. உடல் நிலையும் நன்கு இருக்கும். ஆயினும் மற்ற எந்த கிரகமும் உதவும் நிலையில் இல்லை. எனவே உடல் தெம்பு இருக்கிறது என வம்புக்குப் போய் விடாதீர்கள். அன்றாடப் பணிகளைத் திட்டமிட்டுச் செய்யுங்கள். 9ல் உள்ள செவ்வாயும் இராகுவும் உகந்த நிலையில் சஞ்சரிக்கவில்லை. இதுவரை நன்கு பழகிவந்தவர்கள் கூட விலக நினைப்பார்கள். அது அவர்கள் குற்றமல்ல. கோட்சாரத்தினால் ஏற்படும் கோளாறு அப்படி. நெருங்கிப் பழகிவந்த உறவினர்கள் கூட உதவ வரமுடியாத நிலை. குறிப்பாகத் தாய்மாமன் வகை உறவு கெடுவதற்கு வாய்ப்பு உண்டு. சூரியனால் செல்வாக்குக் குறையலாம். அரசு பணியாளர்களுக்கும், வங்கி அலுவலர்க்கும் அவசியமற்ற விசாரணைகள், விளக்கம் கேட்டு அறிக்கைகள் என மன அமைதியைக் குலைக்கும் நிலையில் இராசியில் உள்ள கிரகங்கள் உங்களை அலைக்கழிக்கப் பார்க்கும். மந்தமான, வீரக்தியுடன் கூடிய சூழ்நிலைதான். சுப நிகழ்ச்சிக்கு இடமுண்டு என எழுதிவிட்டு இப்படி எழுதுவது ஏன் என எண்ணலாம். மற்ற கிரகங்கள் அப்படி இருக்கிறதே! என்ன பண்ணலாம். பேசாமல் விநாயகரிடம் சரணடையுங்கள்.

## கும்ப ராசி :



*அவிட்டம் 3, 4 ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3 ஆம் பாதங்கள்.*

சுக்கிரன் ஒருவனே சுகமளிப்பவன். எல்லாத் தடைகளையும் தகர்த்தெறிந்து தக்க சமயத்தில் உதவும் ஆற்றல் அவனுக்கு மட்டுமே உண்டு. எனவே எதிலும், எப்பொழுதும் எவரிடமும் எச்சரிக்கையுடன் நடந்து கொள்ளுதலே சிறந்த பரிகாரம். நிதிப் பொறுப்பில் உள்ளவர்கள், காவல் துறையினர், பாதுகாப்புப் பணியில் உள்ள காவலர்கள் ஆகியவர்கள் கவனமுடன் பணியாற்ற வேண்டிய மாதம். நெருப்பினால், நோயினால் கூட சற்று பாதிக்கப்படலாம். எனவே கோளறு பதிகத்தைப் பொருளுணர்ந்து படித்தல். சிவமானஸ ஸ்தோத்திரத்தைச் சிரத்தையுடன் படித்தல், ஜாதிமத வேறுபாடின்றிக் கோயில்களுக்கும், மசூதிகளுக்கும், கிருத்துவ தேவாலயங்களுக்கும் சென்று வருதல், பக்திப் பிரசங்கங்களை மத வேறுபாடின்றிக் கேட்டல் ஆகியவை உங்களது சிரமங்களைக் குறைத்து விடும். குறிப்பாக மனோ தைரியமும், சுத்தமான வாக்கும் இருத்தல் அவசியம். தசாபுத்தி நன்கு அமைந்தவர்களுக்குச் சிரமங்கள் குறையும். கவலை வேண்டாம்.

## மீன ராசி :



*பூரட்டாதி 4 ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.*

மாத ஆரம்பத்தில் சூரியன், சுக்கிரன், புதன், குரு என சதுர்க்கிரகங்கள் உங்களுக்கு நன்மை தர இருக்கிறார்கள். எந்தத் துறையாளர்க்கும் ஏற்றம் தரும் கால கட்டம். ஆனால் மாதத்தில் பிற் பகுதியில் சுக்கிரன் குரு தவிர ஏனையவை உத வாத நிலையில் உள்ளன. எனவே எந்த ஒரு முயற்சியையும் மாத ஆரம்பத்தில் செய்யுங்க ளேன். தடைபட்டு வந்த திருமண நிகழ்ச்சி திடீரென நிச்சயமாகி நடந்துவிடும். உத்தி யோகமும் கிடைக்கும். அலுவலகர்களுக்குப் பதவி உயர்வும் உண்டு. வம்பு வழக்குகள் பல மிழந்து போகும் நிலை. இழந்த கௌரவம் மீளும் நிலை, நலிவடைந்த தொழிலைச் சீர்திருத்தப் போதுமான நிதி உதவியைப் பெற முயற்சி செய்யுங்கள். குருவின் அருள் உண்டு. சனியின் ஆசியும் உண்டு, கவலை வேண்டாம். உங்கள் ஊரில் இருக்கும் விநாயகனையும் வேலவனையும், போய்த் தரிசியுங்கள். அவற்றை அடுத்து மாரியம்மனையும், காளியையும், துர்க்கையையும் வணங்குங்கள். எல்லாம் நல்ல முறையிலேயே நடக்கும்.

**மாதம் ஒரு மந்திரம் — துன்பங்களைப் போக்கும் அற்புத ரூபம்**

நாராயணீயத்தைத் தந்த ஸ்ரீநாராயண பட்டதிரி, அருள்மிகு குருவாயூரப்பனைத் தரிசித்துச் சரணடைவதால் ஏற்படுகின்ற பயனைப் கீழ்க்காணும் ஸ்லோகத்தின் மூலம் அழகாக விளக்குகிறார்.

கேயூராங்கத கங்கணோத்தம மஹா
ரத்னாங்குலீயாங்கித
ஸ்ரீமத் பாஹு சதுஷ்க ஸங்கத கதா
சங்காரீ பங்கேருஹாம்!
காஞ்சித் காஞ்சன காஞ்சிலாஞ்சிதலஸத்
பீதாம்பரலம்பினீ
மாலம்பே விமலாம்புஜத் யுதிபதாம்
மூர்த்திம் தவார்த்திச் சிதம்!!

'மின்னும் தோள்வளைகள், குலுங்கும் கைவண்ணவளையல்கள், கண்ணைப் பறிக் கும் இரத்தினங்கள் இழைக்கப்பட்ட மோதி ரங்கள் ஆகியவைகளால் அலங் கரிக்கப் பட்ட நான்கு கைகளிலும் இருக்கின்ற சங்கு, சக்கரம், கதாயுதம், தாமரை மலர், இவைகளைக் கொண்டதும், பொன் னால் செய்யப்பட்ட அரை ஞாணால் அலங் கரிக்கப்பட்டு ஒளிவிடும் பீதாம் பரத்தை யுடையதும், நிர்மலமான தாமரை மலரை யொத்தச் சீரடிகளையுடையதும் அடியார் களின் அனைத்து துக்கங்களையும் போக்க வல்லதுமான வர்ணிக்க இயலாத அற்புத மான தங்களுடைய திவ்ய ரூபத்தைச் சரணமடைகிறேன்' எனும் கருத்தினைக் கொண்ட மேற்கண்ட ஸ்லோகத்தைக் காலையிலும் மாலையிலும் உச்சரிப்பதின் மூலம் கிரங்களினால் ஏற்படுகின்ற கோளாறுகளிலிருந்து விடுபடலாம். இது அனைத்து இராசிக்காரர்களுக்கும் பொருந் தும்.

— ஜெயலட்சுமி கிருஷ்ணன்,
(70/15, ராம்ஸ், 2 வது மெயின் ரோட், காந்தி நகர், அடையாறு, சென்னை - 20.)



**இப்படியும் 'கடல் மணல் ஓவியம்' செய்யலாம்!**

நாம் விரும்பும் பிரிண்ட் செய்யப் பட்ட எந்த ஒரு படத்தையும் எடுத்துக் கொண்டு அதற்கு மேலுள்ள பரப்பை (அவுட்லைனை விட்டு) மட்டும் பிளேடால் சுரண்டிக் கொள்ளவும். விரும்பும் கலரில் "ரங்கோலி" பவுடரை கடல் மணலில் நீருடன் கலந்து கொண்டு வெயிலில் சிறிது உலர வைக்க வேண்டும். பின் பெவிகாலைத் தடவி அந்தக் கலவையை நம் ரசனைக்கு ஏற்ப படத்தில் தூவலாம். அலங்காரங்களுக்கு ஸ்டிக்கர் பொட்டு, ஜமிக்கி போன்றவற்றை யும் பயன்படுத்தலாம்.

— லதா முரளிதரன்

# ஏம்யா


கூட்டரிலிருந்து இறங்கி வரும் ஜோடியைக் கண்டு ரம்யா திடுக்கிட்டாள். வனஜா ஆபீசில் வேலை பார்த்துக் கொண்டிருக்க வேண்டிய வனஜா -- இங்கே எப்படி, இந்த நேரத்தில் ஸ்கூட்டரில் ஒரு அன்னிய வாலிபனுடன்?

வனஜா கீழே இறங்கி நிற்க, அவன் ஸ்கூட்டரை ஸ்டாண்டில் நிறுத்திப் பூட்டிவிட்டு, சாவியைச் சுழற்றியபடி அருகில் வந்தான்.

"ஹாய் வனி! நீ வந்ததும் நா ஸ்டன் ஆயிட்டேன். ஹௌ டிட் யூ மானேஜ் இம், டார்லிங்! அரைநாள் ஆபீஸ் லீவா?"

கண்ணைச் சிமிட்டியபடி கேட்டான். அவன் நீட்டிய கரங்களில் தன் கைகளைக் கோத்துக் கொண்டு ஒயிலாக நடந்த வனஜா, "இதுக்கே இப்படி அசந்துட்டா எப்படி? ஆபீஸ் டூர்னு சொல்லி கொடைக்கானல் போகப் போறோம், பாருங்க. அப்ப சொல்லுங்க, என் சாமர்த்தியம் பற்றி!"

பெருமையாய்ப் பேசியவள் அவன் தோளில் சாய்ந்து அவனோடு ஒட்டிக் கொண்டு போவதைப் பார்த்தால் ரொம்ப நாள் பழக்கம் என்று தெரிகிறது. அவர்கள் உள்ளே நுழைந்து விட்டதால் மேற் கொண்டு பேசியது அவளுக்குக் கேட்கவில்லை.

நகரில் மிகப் பிரபலமான ஹோட்டல் அது.

அவள் ஆபீஸ் ஆண்டு விழாவுக்காக, ஒரு பார்ட்டிக்கு ஏற்பாடு பண்ண அவள் அங்கு வந்திருந்தாள், எம்.டி.யின் பி.ஏ என்ற முறையில்.

மானேஜரின் ரூமிலிருந்து உள்ளே நுழைபவர்களைப் பார்க்கும்படி ஜன்னல் இருந்தது. உட்புறம் சாப்பிடுபவர்களையும் ரூமுக்கு உள்ளே நுழையும் கதவின் மேல்புறம் இருக்கும் கண்ணாடி வழியாகப் பார்க்கலாம்.

லாபியைத் தாண்டி அவர்கள் உள்ளே வருவதையும், குடும்ப அறைக்குள் நுழைந்து கதவைச் சாத்திக் கொண்டதையும் பார்த்தாள்.

இந்த வாலிபனுடன் வனஜாவை ஏற்கெனவே இரண்டு முறை ரம்யா பார்த்து இருக்கிறாள். அப்போது கூட இன்னும் சில பெண்கள் இருந்ததால் அவர்கள் அண்ணனாக இருக்கும் என நினைத்தாள்.

இப்போது பட்டப்பகலில் பழகிய

**கோதா பார்த்தசாரதி**

9



**நீங்கள் 'சூப்' விரும்பிப் பருகுபவர் என்றால் அதில் பார்லி வாட்டர் அல்லது சாதம் வடித்த கஞ்சி இரண்டு ஸ்பூன் சேர்த்துப் பருகுங்கள். ஜீரணத்திற்கு மிக நல்லது.**

**— மஞ்களா கிருஷ்ணன்**

ளரில் யாரும் பார்ப்பரோ என்ற பயம் இல்லாமல், ஆபீசுக்கு லீவு போட்டு விட்டு இங்கு வந்து இருப்பதைப் பார்த்தால், கடவுளே! மங்களம் இந்த இரண்டு பெண்களின் வாழ்க்கையைப் பற்றி பெரிய பெரிய கனவுகளை வளர்த்து வருகிறாள்.

வந்த வேலை முடிந்தவுடன் தலையைக் குனிந்தபடி, வனஜா இருந்த பேமிலி ரூம் பக்கம் திரும்பாமலே, வந்து விட்டாள். ஆனால் போர் உள்ளே காப்பி கொண்டு போன போதும் வரும் போதும் வனஜா தன்னைப் பார்த்து விட்டது அவளுக்குத் தெரியாது.

இன்னும் பார்ட்டி சம்பந்தமான சில வேலைகளை முடித்துக் கொண்டு அவள் வீடு திரும்பும் போது மணி எட்டாகி விட்டது. நேரமாகி விட்டதே, இன்று கண்டிப்பாக டோஸ் வாங்கப் போகிறோம் என்று பயந்து கொண்டே உள்ளே நுழைந்தாள்.

வீடு அமைதியாக இருந்தது. சைக்கிளும் ஸ்கூட்டரும் நின்றது. சங்கர் கூட இன்று சீக்கிரம் வந்திருக்கிறான். கோபி, ரமணி, வனி, கிரி எல்லாரும் வந்தாயிற்று. டீவி கூட ஓடவில்லை. மங்களம் சோபாவிலும் சங்கர் ஈசி சேரிலும் உட்கார்ந்திருக்க, வனியும், கிரியும் ஏதோ புத்தகம் படிப்பது போல் பாவனை செய்து கொண்டிருந்தார்கள்.

'கண்டிப்பாக கோபம்தான் அதான் இவ்வளவு அமைதி!' எதுவும் பேசாமல் நேரே பாத்ரூமுக்குள் புகுந்து கொண்டவள் மனதை கொஞ்சம் தைரியப்படுத்திக் கொண்டு கால், கை, முகம் கழுவி விட்டு வெளியே வந்தாள்.

சமையலறைக்குள் நுழையுமுன், மங்களம் கையில் காப்பியுடன் எதிரே வந்தாள்.

"சூடாக் கலந்துண்டு வந்தேன். தலைவலிக்கு இதமா இருக்கும். டைனிங் டேபிள் மேலே ஹாட்பேக்கில் சூடா தோசை வார்த்து வெச்சிருக்கேன். எவ்வளவு நேரமாச்சு. பசிவந்திருக்குமே!"

பேசுவது மங்களம் தானா? காண்பது

கனவா - நினைவா? திடீரென்று ஒரு மாயத் தேவதை வந்து மந்திரக் கோலால் தட்டி இவனை மாற்றி விட்டாளா?

மங்களத்தின் குரலில் இருந்த நையாண்டியை அவளே காப்பி கொண்டு வந்த ஆச்சரியத்தில் ரம்யா கவனிக்கத் தவறிவிட்டாள்.

"டிபனெல்லாம் வேண்டாம்மா. காப்பி டிபன் சாப்பிட்டுட்டேன். நீங்களே பாவம் கலந்துண்டு வந்தீங்களே. காப்பி மட்டும் எடுத்துக்கறேன்" என்று காப்பியை வாங்கிக் கொண்டாள்.

"நான்தான் அப்பவே சொன்னேனேம்மா! நீதான் என்னமோ மாட்டுப் பெண் ஆபீஸிலிருந்து களைச்சுப் போய் வரான்னு ஓடினே. அவ ஹோட்டல்லே காப்பி டிபன் என்ன, சாப்பாடே ஒரு பிடி பிடிச்சுட்டு வந்திருப்பா. சும்மாவா, ஹோட்டல் மானேஜரோட சாப்பிடறதுன்னா" என்றான் சங்கர் கிண்டலாக.

"ஆபீசிலே வேலை அதிகமா இருந்திருக்கும். இல்லைன்னா ஏன் இவ்வளவு லேட்டா வரா? இல்லையா ரம்யா. என்னடா ஏதோ ஹோட்டல் மானேஜர்னு குழப்பறே?" என்றாள் மங்களம் ஒன்றும் புரியாதவள் போல்.

"நான் ஒண்ணும் குழப்பல்லை. ஹோட்டலுக்கு போனாளா இல்லையா. அவளையே கேளேன்." என்றான் சங்கர் சாதாரணமாக.

எல்லாரும் சமுகமாகப் பேசினதில் தைரியம் கொண்ட ரம்யா, "ஆபீசிலே வேலை அதிகம் இல்லை. பார்க்கப் போனா இன்னிக்கு ஆபீசை விட்டு சீக்கிரமே கிளம்பிட்டேன். வெளியிலேதான் கொஞ்சம் வேலை இருந்தது. ஆபீஸ்லேயே எம்.டி தன்னுடன் டிபன் வர அழைத்துக் கொடுத்தார். தட்ட முடியவில்லை. வேலை நிறைய இருந்ததால் காரிலேயே அனுப்பினார். வேலை முடிய இவ்வளவு நேரம் ஆகிவிட்டது." என்றாள் சகஜமாக.

"அஞ்சு மணிக்கு ஆபீசை விட்டுக் கிளம்பினவ எட்டு மணிக்கு காரிலே வந்து இறங்கறா. கேட்டா வெளியிலே வேலை இருந்ததுங்கிறா. இதெல்லாம் நல்லா இருக்கோ. இந்தத் தெருவுலே ரெண்டு வருஷமா நாங்க மானம் மரியாதையோடு குடித்தனம் பண்ணிகிட்டிருக்கோம்.

அதையெல்லாம் அழிச்சுக் காத்திலே பறக்க விடறதுன்னு தீர்மானம் பண்ணிட்டயா? பாவி! காரிலே வந்து இறங்கினேன்னு எவ்வளவு தைரியமா எங்கிட்டயே சொல்றா பாருடா, சங்கர்! அவ்வளவு நெஞ்சழுத்தம்!"

மங்களம் வெடித்தாள். ரம்யா திகைத்தாள். இந்தப் புலி பதுங்கியது பாயத்தானா?

"அம்மா. நீங்க ஏதோ தப்பா நினைச்சுண்டு பேசறீங்க. எம்.டியோட பி.ஏங்கிற முறையிலே 'நீ போற வழியிலதானே ஹோட்டல் இருக்கு. பார்ட்டிக்கு அரேஞ்ச் பண்ணிட்டு

| | | |
|---|---|---|
| பதவி | : | குடும்பத் தலைவி (திருமதி. பத்மா பரமசிவம்) |
| பொறுப்பு | : | குடும்ப நிர்வாகம், குழந்தை படிப்பு மற்றும் நலன், குடும்ப சேமிப்பு |

## சிறந்த சேமிப்பிற்கு இவர் சிபாரிசு TDFC.

குடும்பப் பொறுப்புகளில் சேமிப்பினையும் முக்கியமானதாகக் கருதி அதற்கான முடிவை எடுக்கும் குடும்பத் தலைவிகளுக்கு திருமதி பத்மா பரமசிவம் அவர்கள் ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. அபரிமிதமான ஈட்டுத்தொகையைத் தருவதாகக் கூறும் நிதி நிறுவனங்களை அவர் என்றைக்குமே நம்பியதில்லை. முதலீட்டிற்கு முழுபாதுகாப்பு, நிலையான, நல்ல ஈட்டுத்தொகை இவற்றிற்கும் மேல், சிறந்த சேவை அளிக்கும் உறுதியான நிறுவனம் இவைதான் ஒரு நம்பகமான நிதி நிறுவனத்தின் அடிப்படைத் தேவைகள் என்று கருதுகின்றார், திருமதி. பத்மா பரமசிவம்.

"முதலீட்டுக்கு நியாயமான வட்டியும் நிலையான பாதுகாப்பையும் தர அரசுத்துறை நிதி நிறுவனமான TDFC இருக்கும்போது பணத்தை முதலீடு செய்ய நான் ஏன் வேறு ஒரு நிதி நிறுவனத்தை நாட வேண்டும்" என கூறுகின்றார்.

குறிப்பு : P.T. Consultancy Service நடத்திய ஆய்வின் படி இந் நிறுவனத்தில் முதலீடு செய்தவர்களில் 32% இல்லத்தரசிகள்.

### திட்டம் - 1 - தவணை முறையில் வட்டி அளிக்கும் திட்டம்

(குறைந்தபட்ச வைப்புத் தொகை - ரூ. 5,000/-)

* 15 சதவிகிதம் வருட வட்டி மாதந்தோறும் கூட்டு வட்டி முறையில் கணக்கிடப்பட்டுள்ளது. குறிப்பிட்ட காலத்தில் வட்டி வழங்கும் திட்டத்தின் கீழ் குறைந்த பட்ச டெபாசிட் தொகை 12 மாதம் ஒரு நாளுக்கு ரூ.10,000-ம் மற்றவைகளுக்கு வழக்கம் போல் ரூ.5,000 ஆகும்.

**15%** ஒரு வருடத்திற்கு

வட்டி மாதந்தோறும் வழங்கப்படும்.

### திட்டம்-2 - முதலீடு பெருகிடும் திட்டம்

(குறைந்தபட்ச வைப்புத் தொகை - ரூ.3,000/-)

மேற்கண்ட உங்கள் முதலீட்டுப் பெருக்கம் 15% வருட வட்டியில் கூட்டு வட்டி முறையில் பிரதி மாதம் கணக்கிடப்பட்டுள்ளது. மேற்கொண்டு வைப்புத் தொகை இரண்டு திட்டத்திலும் ரூ. 1000-ன் மடங்குகளில் மட்டும் ஏற்கப்படும்.

**22.16%** ஐந்து வருடத்திற்கு திட்டம் 2-ல்




## தமிழ்நாடு போக்குவரத்து வளர்ச்சி நிதி நிறுவனம் லிமிடெட்.

(தமிழ்நாடு அரசு நிறுவனம்)

பதிவு அலுவலகம் : 99, கிரீம்ஸ் சாலை, அலுவலக வளாகம், சென்னை-600 006.

தொலைபேசி : 8278351/8272917/8276059, தந்தி : TAFCON. P.B.No.719.

கிளைகள் * மத்திய பேருந்து நிலையம், காந்திபுரம், கோயம்புத்தூர்-641 044. தொலைபேசி : 437102 * மத்திய பேருந்து நிலைய வளாகம், திருச்சி-620 001. தொலைபேசி:464188 * ராணி மங்கம்மாள் சத்திரம், மதுரை-625 001. தொலைபேசி:741686 * முனிசிபல் அலுவலக வளாகம், காமராஜர் சாலை, ஈரோடு-638 001. தொலைபேசி : 78204

இந்த விளம்பரம் கம்பெனியால் 6.10.96 தினமணியில் வெளியிடப்பட்ட சட்டபூர்வ விளம்பரத்தின் தொடர்ச்சியாகும்.

**உங்களது முதலீடு "டிடிஎப்சி" யில் பாதுகாப்பானது - பத்திரமானது**

போறயா?' என்றார். அப்படியே டேபிள், சேர், ஷாமியானா என்று இன்னும் கொஞ்சம் வேலை இருந்தது.

காரிலேயே போயிடுன்னார். இதுலே தப்பு ஏதும் இருக்கிறதா...." மேலே பேசுவதற்கு முன், பொறி கலங்குவது போல் ஒரு அடி கன்னத்தில் விழுந்தது. அடித்தவன் சங்கர்!

"உனக்கு எதுவுமே தப்பா தோணாதுடி! சம்பாதிக்கிற திமிர்! ஆனா ஊர் சிரிக்குமே! சங்கர் பெண்டாட்டி எட்டு மணிக்கு இன்னொருத்தனோட காரிலே இறங்கினான்னு தான் சொல்லும். நாக்கைப் பிடுங்கிண்டு சாகறதா, நாங்க?" என்று கர்ஜித்தான் சங்கர்.

சப்தம் கேட்டு கோபியும் ரமணியும் கூட மாடியில் இருந்து எட்டிப் பார்த்தனர். அவர்கள் எதிரில், வனஜா, கிரிஜா இவர்கள் எதிரில் தன்னை மங்களம் கேவலமாகப் பேசியதும், அதைக் கேட்டுக் கொண்டு கம்மா இருந்ததுடன் நில்லாமல், சங்கர் அடித்ததையும் அவளால் தாள முடியவில்லை.

எதுவும் பேசாமல் கூடத்து அறைக்குள் புகுந்து கொண்டாள். மடை திறந்தது போல், கண்ணீர் வெள்ளமாய்ப் பெருகியது.

எதுவுமே நடக்காதது போல் அனைவரும் உட்கார்ந்து சந்தோஷமாக பேசிச் சிரித்துக் கொண்டு சாப்பிட்டனர். அவளை யாரும் சாப்பிடு என்று பேச்சுக்குக் கூட கூப்பிடவில்லை. அவளுக்கும் நெஞ்சு கனத்துக் கிடந்ததால் சாப்பாடு வேண்டியிருக்கவில்லை. ஒரு ஓரமாகத் தரையில் படுத்துக் கண்ணீர் விட்டபடி கிடந்தாள்.

எப்போது கண்ணயர்ந்தாளோ, தெரியாது. திடுக்கிட்டு கண் விழித்தாள் ரம்யா. சங்கர் அவள் அருகில் நின்றிருந்தான். விடி விளக்கின் மெல்லிய வெளிச்சத்தில் சுவரில் அவன் நிழல் பயங்கரமாகத் தெரிந்தது.

"ஏண்டி ரொம்பக் களைப்போ? எம்.டியோடும் ஹோட்டல் மனேஜரோடும் பேசறதுன்னா பிடிக்கும். புருஷன் கூப்பிட்டா உடம்பு வலிக்குதா?" என்றான் கேலியாக.

"சிவ சிவா!" என்று காதைப் பொத்திக் கொண்டு அழுதாள் ரம்யா.

"நா உங்க பெண்டாட்டி. அவ்வளவு பேர் எதிரிலும் சந்தேகப்படற மாதிரி அம்மா பேசினா, நீங்களும் கேட்டுண்டு அடிச்சீங்களே? இந்த நாலு சுவத்துக்கு நடுவிலே என்னை என்ன வேணுமானா செய்யுங்க. சின்னப் பசங்க எதிரே இவ்வளவு கேவலமா நடத்தினா அவங்க எப்படி என்னை மதிப்பா? இப்படியெல்லாம் சந்தேகப்படறதா இருந்தா, என்னை ஏன் வேலைக்கு அனுப்பணும்?"

அழுதபடி கூறினாள் ரம்யா.

"வேலையை விட்டுட்டு வீட்டோட உட்கார்ந்துடலாம்னு பாக்கறியா? தலைக்கு மேல் கடன் இருக்கு. இன்னும் வனஜா, கிரிஜா கல்யாணம் ஆகணும். ஒழுங்கா போயிட்டு வாடின்னா வேலையை விடறேங்கறியா? சின்னப் பசங்க எதிரே, அடிச்சது ரோசமாப் போச்சா?

அப்பப் பழகின ஊர்லே, நாலு பேர் தெரிஞ்சவா இருப்பாளேனு உனக்குப் பயம் வேண்டாம்? சின்னப் பசங்கங்கறியே வனஜா தன் பிரண்டோட ஹோட்டலுக்கு வந்தாளாம். மானேஜர் ரூமிலே உன்னை சாப்பிடும் போது பார்த்தாளாம்.

'நல்லவேளை, என் பிரண்ட் மன்னியைப் பார்க்கலை. பார்த்திருந்தா நம்ப மானமே கப்பலேறி இருக்கும்னா" என்றான்.

ரம்யாவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. என்ன சாமர்த்தியமாக, ஒரு வேளை நான் பார்த்திருப்பேனோ என்ற பயத்தில் என் மேல் பழியைத் திருப்பி விட்டிருக்கிறாள். இனியும் இதை இப்படியே விடக் கூடாது. இந்தக் குடும்பத்தின் கெளரவத்தில் அவளுக்கும் அக்கறை உண்டுதானே?

எப்படியும் இரவு சங்கரிடம் இதைப் பற்றி பேச வேண்டும் என எண்ணியிருந்ததுதான். உள்ளே நுழையும் போதே வனஜாவின் சாகசத்தால் அது வேறு விதமாக முடிந்துவிட்டது.

"உங்க தங்கையோட வந்தது, பாய்பிரண்டா, கேர்ள் பிரண்டானு கேட்டீங்களா?"

சங்கருக்குக் கோபத்தில் முகம் சிவந்து விட்டது.

"என்னடி கொழுப்பா. மறுபடி அறை வாங்கணுமா? குனிஞ்சதலை நிமிராம, வேலைக்குப் போயிட்டு வர என் தங்கையைப் பத்தியா, இப்படி கேக்கறே? அதெல்லாம் உங்க மெட்ராஸ் நாகரிகம். என்ன திமிர் உனக்கு. நாக்கை அடக்கிப் பேசு!" என்று கத்தினான்.

"திமிர் இல்லை, கவலை வனி - கிரி, இரண்டு பேர் போக்கும் சரியில்லை. நா சொன்னா உங்கம்மா காதிலே ஏறாது. யமஹா

---



விசேஷ நாட்களில் மட்டும்தான் மாவிலை தோரணம் கட்ட வேண்டுமா என்ன? மாமரம் உள்ளவர்கள் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் கட்டினால் எப்போதும் வீடு மங்களகரமாக இருக்குமே!

— ஆர். பானுமதி

[illegible] ஒரு பையனோட வந்து இறங் [illegible] பண்டிலை பார்க் பண்ணும் போது, [illegible] மானேஜர் ரூமில் இருந்தேன்.

[illegible] உட்கார்ந்து இருந்த ஜன்னல் பக்கம் [illegible] பார்க்கிங் அதனாலே அவங்க பேசினது [illegible] விழுந்தது" என்று விவரித்தாள்.

"[illegible] உன்னைக் கையும் களவுமா பிடிச்ச [illegible] விட்டுதும் சொல்லிட்டானு இப்படி [illegible] பழிகமத்தறயாடி பாவி! என்ன [illegible]" என்று மீண்டும் கட்டிலில் [illegible] தள்ளினான்.

**ஹா** [illegible] பேகிலிருந்து இன்லண்ட் [illegible] எடுத்து அட்ரசை சரி பார்த்துக் கொண்டாள் கிரிஜா.

இக்கத் தெருதான். நம்பரைக் கண்டு பிடிக்க வேண்டும்.

கடிதத்தை உள்ளே போடுமுன், மீண்டும் ஒருமுறை படித்துப் பார்த்துக் கொண்டாள். கடிதத்தில் கண்ட வாசகங்கள் அவளை அப்படி ஒரு மயக்கத்தில் ஆழ்த்தி இருந்தது.

அன்புள்ள கிரிஜா.

[illegible] போட்டோவும் கடிதமும் எங்கள் [illegible] கிடைத்தது. உங்கள் போட் [illegible] பார்த்ததில் இருந்து எங்கள் [illegible] பித்துப் பிடித்தது போலாகி [illegible] இவளே நான் தேடின கதா நாயகி [illegible] இருந்தவள் கண்ணெதிரே வந்து [illegible] உடனே போய் அழைத்து வா!' [illegible] ஆர்ப்பாட்டம் செய்கிறார். எதற்கும் [illegible] ஒன்று இருக்கிறதல்லவா?

[illegible] உடனே கீழ்க்கண்ட விலாசத்தில் இருக்கும் [illegible] ஏஜண்டை நேரில் போய்ப் [illegible] அவர் விதிமுறைகளைச் சொல்லு [illegible] எல்லாம் சேகரித்துக் கொண்டு [illegible] இருந்தால், ஏஜண்டே உங்களை [illegible] அழைத்து வருவார்.

[illegible] நேரில் பார்க்கத் துடிக்கும்

(டைரக்டருக்காக)

கார்த்திக்

(அந்தரங்க காரியதரிசி)

[illegible] இந்த சான்ஸ் மட்டும் கிடைத்து [illegible] படத்தில் நடிக்க முடிந் [illegible] மேலே... மேலே போய் [illegible]!

இவ்வளவு [illegible] ஆர்வமாக எழுதியிருப்பவர் [illegible] அப்படி இப்படினு எழுதி [illegible] இருக்கும். எதுவானால் [illegible] துணிந்து வந்தாயிற்று. [illegible] வந்தாகிவிட்டது. நம்பரைக் கண்டு [illegible] போனால் தானே தெரிகிறது.

[illegible] பூட்டியிருந்தது. வாசலுக்கு [illegible] படிகள் உயர்ந்து மேலே



நாம் குழம்பு செய்யும் போது கொஞ்சம் நீர்க்க இருந்தால் மேலோடு எடுத்து மிளகு, சீரகத் தூள் போட்டு ரசமாகப் பயன்படுத்தலாம்.

— எஸ். விஜயா சீனிவாசன்

ஏறின. முன்பக்கக் கதவு சாத்தி இருந்தது. மாடியில் கூரை போட்ட தடுப்பு ஒன்று தெரிந்தது. உள்ளே போனால் காலிங்பெல் இருக்கானு பார்க்கலாம்.

முன் கேட்டே பூட்டி இருக்கே!

"சார்! சார்!" கதவைத் தட்டினாள். பதில் இல்லை.

"அய்யா.... அய்யா... யார் வீட்டிலே!" மறுபடி குரல் கொடுத்தாள். படீர் என்ற ஓசையுடன் கதவு திறந்தது.

"பகல்லே சித்த நேரம் தலையை சாய்க்க விடமாட்டீங்களே? இப்ப என்ன ஏதாவது டிக்கட் தலையில் கட்ட வந்தியா இல்லை யாசகமா?" என்று எரிந்து விழுந்தார் வெளியே வந்த கிழவர்.

"அப்படியெல்லாம் ஒண்ணும் இல்லை சார். நம்பர் 38 இதானே. இங்கே கதிர்னு ஒருத்தர்...."

"அந்த உதவாக்கரைப் பயலா? மாடி ரொம்ப நாளா காலியா இருக்கு. ஒரு மாசத்துக்குத்தான்னாலும் நிறைய வாடகை தரேன்னானேனு விட்டது தப்பா போச்சு. சினிமாக் கம்பெனிக்காரன்னு அப்புறம்தான் தெரிஞ்சது. ஒரே பொட்டைப் பசங்களா படையெடுக்கிறது. நான் சித்த நேரம் அப்பாடின்னு படுக்க முடியல்லை. நடிகன்கிறான். டைரக்டர்ங்கிறான். நடிகை, கவிஞன்னு இப்படி ஒரே காரா வந்து நிற்கும். மேலேதான் இருக்கான், நீயும் போ."

மேலே அந்தக் கூரைத் தடுப்பைத் தவிர வேறு ஏதும் இல்லை. ஆனால் அதுவே நன்றாக ஒரு பரணசாலை போல் கூரையால் வேயப்பட்டு அழகிய அறையாக இருந்தது.

செருப்பு சப்தம் கேட்டு வெளியே எட்டிப் பார்த்தான் ஒரு வாலிபன். "வாங்க வாங்க!" என்று அந்தக் குடிசையின் மூங்கில் கதவை அகலத் திறந்து முழங்கையை மடித்து மூன்று முறை குனிந்து வணக்கம் சொன்னான்.

"உட்காருங்க மேடம்! எங்க டைரக்டரோட தேடலுக்கு விடை கிடைச்சாச்சு. அவர் பட்ட

# செய்கூலி சேதாரம் இல்லாமல் தங்க நகைகள் விற்க முடியுமா?

தங்க நகைகள் செய்யும் பொழுது நிச்சயம் சேதாரம் இருக்கும். மற்றும் செய்கூலி கொடுக்காமல் எப்படி தங்க நகைகள் செய்ய முடியும்? இப்பொழுது தங்க நகைகள் விற்பனை செய்யும், கடைகள் பலவற்றில் செய்கூலி, சேதாரம் இல்லை (KDM நகைகள் நீங்கலாக) என அறிவிப்பு காணப்படுகிறது. இது எப்படி சாத்தியம் என்பது பலரது சந்தேகம் இது நியாயமான சந்தேகம் தானே!

இது போன்ற நகை கடைகளில் அசோசியேஷன் நிர்ணயிக்கும் விலையில்தான் தங்கம் விற்பார்கள். அசோசியேஷன் விலை மார்க்கெட் விலையை விட 1 கிராமுக்கு எப்பொழுதும் ரூ. 25 வரை அதிகமாகவே இருக்கும். இதனால் வியாபாரிக்கு அதிகமாக ரூ. 25-ந்தும். மற்றும் தங்கத்தை அதிக பொடி வைத்து இணைப்பதால் 1 கிராமுக்கு ரூ. 60-வதும் கிடைக்கும். ஆச்சாரிக்கு செய்கூலி, சேதாரம் கொடுத்தது போக 1 கிராமுக்கு இலாபம் ரூ. 40 வரை தாராளமாக கிடைக்கும். இதனால் செய்கூலி, சேதாரம் இல்லாமல் வருடம் முழுவதுமே கூட விற்பனை செய்ய முடியும்.

**கல், முத்து, பவளம் இலவசம் எப்படி?**

கல், முத்து, பவளம் இவைகளுக்கு தனியாக விலை இல்லை என்றாலும் அவைகளின் எடை தங்கத்தின் எடையுடன் கூடி தங்கத்தின் விலையை பெற்று விடுகிறதே!

**சரவணா ஸ்டோர்ஸ் பொருத்தவரையில்** : தங்கம் ஒரிஜினல் மார்க்கெட் விலையில் விற்கப்படுகிறது. 1 கிராமுக்கு ரூ. 25/- வரை குறைவுதான். தங்கத்தின் தரம் மற்ற கடைகளை விட 5% அதிகமாக தருகிறோம். இதனால் சேதாரம் இல்லாமல் எங்களால் விற்பனை செய்ய முடிவதில்லை. அதனால் கூடுதல் சேதாரம் 6% என்று விற்பனை செய்கிறோம். (KDM தங்க நகைகளுக்கு சேதாரம் தனி) செய்கூலி எப்போதும் வாங்குவதில்லை. அதிகமாக கல் வைத்த நகைகள் என்றால் நகைகளின் எடையில் (கல், முத்து, பவளம் எடைக்காக) 10% தள்ளுபடி செய்து செய்கூலி மற்றும் சேதாரம் இல்லாமல் விற்பனை செய்கிறோம்.

24ct - ல் (சுத்த தங்கத்தின் அளவு 100%) தங்க நகைகள் செய்தால் எளிதில் நசுங்கிவிடும். ஆகவே செம்பு கலந்து 22ct - ல் (சுத்த தங்கத்தின் அளவு 92%) தங்க நகைகள் செய்கிறார்கள். 22ct - ல் தங்க நகைகள் செய்யும் பொழுது தங்கத்தை பொடி வைத்து இணைப்பதால், உருக்கியபின் வரும் சுத்த தங்கத்தின் அளவு குறைகிறது. அதிக லாபம் வேண்டுபவர்கள் அதிக பொடி வைத்து அதன் தரத்தைக் குறைக்கிறார்கள்.

எனவே **சரவணா ஸ்டோரில்** ஒவ்வொரு தங்க நகை பிரிவிலும், தங்க நகைகளை உருக்கிய பின் வரும் சுத்த தங்கத்தின் அளவை அறிவிப்பு செய்துள்ளோம்.

குறிப்பாக :-

- மெஷின் செயின், மெஷின் கட்டிங் வளையல் மற்றும் தாலிசரடு - 92%
- கோபிகட்டிங் செயின், கல் வளையல், கல் நெக்லஸ் - 88%
- லாங் ஆரம், நெக்லஸ் மற்றும் தாலி உருப்படி அயிட்டங்கள் - 85%

நாங்கள் விற்கும் தங்க நகைகள் மற்ற எந்த கடைகளைவிட, உயர்வான தரம் என்று சவால் விட்டு உறுதி கூறுகிறோம்.

# சரவணா ஸ்டோர்ஸ்

**தங்க நகைகள், ஜவுளிகள், பாத்திரங்கள்.**

**ரெங்கநாதன் தெரு, தி. நகர், சென்னை - 600 017. போன் : 4347710**

L.R.SWAMI / PP

தள்ளுபடி - ஒரு ரூபாய் - தள்ளுபடி - ஒரு ரூபாய் - தள்ளுபடி - ஒரு ரூபாய் -



# ஒரு ரூபாய் தள்ளுபடி

ஒவ்வொரு காலி அகர்பத்தி பாக்கெட்டிற்கும்

**ஒரு ரூபாய்** தள்ளுபடி

## அம்பிகா




## சுபலக்னம்




## வார்தா




~~9.00~~
8.00

மேற்கண்ட அகர்பத்தி பாக்கெட் ஒன்று வாங்கும்போது,
வேறு எந்த அகர்பத்தியின் ஒரு காலி பாக்கெட்டை கொடுத்தாலும்

## ஒரு ரூபாய் தள்ளுபடி

அன்பார்ந்த டீலர்களே, உங்கள் வாடிக்கையாளர்கள் மேற்கண்ட அம்பிகா பிராண்ட் அகர்பத்தி பாக்கெட் ஒன்று வாங்கும் போது வேறு எந்த பிராண்ட் அகர்பத்தி காலிபாக்கட் ஒன்று பெற்றுக்கொண்டு ரூ.1/- தள்ளுபடி கொடுக்கவும்.

தள்ளுபடி தொகையை ஸ்டாக்கிஸ்ட்டிடம் உங்கள் சர்வீஸ்சார்ஜ் 0.25 சேர்த்து ஒரு பாக்கெட்டிற்கு ரூ.1.25 பெற்றுக்கொள்ளவும்.

**QUALITY PRODUCTS FROM THE MAKERS OF – AMBICA HEAVEN**

சிரமம் வீணாகல்லை. படத்தில் எழுதிய பாவையே உயிர் பெற்று நேரில் வந்தது போல், ஆகா... ஆகா!" என்று கண் மூடிப் புகழ்ந்தான்.

"அய்யோ, நீங்க என்னை ரொம்ப பிரெய்ஸ் பண்ணறீங்க. எத்தனையோ பேர் வந்திருப் பாங்க. அதுலே நானும் ஒருத்தி. இதோ இந்த லெட்டர் இன்னுதான் வந்தது. உடனே கிளம்பி வந்தேன். ஏதோ விதிமுறைனு எழுதியிருக்கார். ஒண்ணும் புரியல்லையே!" என்றாள் கிரிஜா தயக்கத்துடன்.

"என்ன அப்படிச் சொல்லிட்டீங்க. நீங்க தான் மேடம் ஹீரோயின்! கடவுள்தான் நம்ம டைரக்டர் உருவத்திலே வந்திருக்கார். படம் அந்த நாள் ஹரிதாஸ் மாதிரி வருஷக் கணக்கா ஓடப் போறது.

நீங்கதான் டாப் ஸ்டார் நம்பர் 1. எல்லா மொழியிலும் போடு, போடுனு போடப் போறீங்க. தங்கத்தாமரை படத்துக்கு, உங்க ளுக்கு இரண்டுக்கும் கிடைக்கப் போகிறது. ஒரே வருஷத்துலே ஓகோனு உசரத்துக்கு போயிடப் போறீங்க! அப்ப என்னை நினைவு வெச்சிண்டா சரி.

இனிமே எனக்கு இங்கே என்ன வேலை? மயிலைத் தேடிண்டு வந்த நான் வான்கோழி யெல்லாம் பேட்டி கண்டு காலத்தைக் கடத்தி னேன்.

உண்மையான மயிலே சிக்கின பிறகு இந்த செட்அப்பெல்லாம் எதுக்கு? நா மெட்றாஸ் கிளம்பறேன்!

நீங்களும் உடனே கிளம்பிட்டா பரவா யில்லை." என்றான் கதிர். "மிஸ்டர் கதிர் எனக்கு வீட்டை விட்டு வெளியில் போய்ப் பழக்கம் இல்லை. தனியா வர தைரியமில்லை. நீங்கதான் என்னை அழைத்துப் போகணும்!" என்றாள் கிரிஜா.

"கண்டிப்பா! அது என் கடமையாச்சே. ஆனா அதுக்கு முன்னாடி நீங்க கொஞ்சம் பணம் அட்ஜஸ்ட் பண்ணணுமே!"

"பணமா. நானா. எதுக்கு?" திகைத்துப் போய்க் கேட்டாள் கிரிஜா. "அது ஒண்ணும் இல்லீங்க, இவர் எடுக்கப் போறது ஆர்ட் பிலிம். சின்னபட்ஜெட் படம்தான். ஆனால் அந்த அளவுக்குக் கூட அவர் கையில் பணம் இல்லை. பேரும் புகழும் வந்த அளவு காசு சேத்துக்கல்லை.

எத்தனையோ படம் எவ்வளவோ பேருக் குப் பண்ணினார். அவரால கோடி கோடியா லாபம் அடைஞ்சவங்க, அவருக்குச் சேர வேண் டிய பணத்தைக் கூட தராமட்டேங்கறாங்க. இவரும் வாயை விட்டுக் கேட்க மாட்டாருங்க.

இந்தப்படம் அவருடைய நீண்ட நாள் கனவு. கதை, வசனம், இசை, டைரக்ஷன் எல் லாமே அவர்தான். இதை சுதந்திரமா எடுத்து முடிச்சிட்டா அவர் கலைத் தாகம் தணியும். அவர் கனவு கண்டபடி புதுக் கதாநாயகியும் கிடைச்சாச்சு. முதல்ல கொஞ்சம் பணம் வேணும்.

அதைத்தான் அவர் உங்களிடம் எதிர் பார்க்கிறார்!

"எத்தனை வேண்டியிருக்கும்?" என்றாள் கிரிஜா தீனமான குரலில்.

"இப்போதைக்கு ஒன் லாக் போதுங்க. அப் புறம் படம் எடுக்க எடுக்க, டிஸ்டிரிப்யூட்டர் களிடம் காட்டினா இம்பிரெஸ் ஆயிடுவாங்க. ஆரம்பத்துலே ஆர்ட் பிலிம்னா பயப்படுவான். அதான்... கொஞ்சம் பாத்துட்டா பணத்தை அள்ளி விடுவான்..."

கிரிஜா திகைத்துப் போய் நின்றாள். ஒரு லக்ஷமா. யம்மாடி. அவள் அத்தனை பணத் துக்கு எங்கு போவாள்? தான் சினிமாவில் நடித் தால் கருப்பும் வெள்ளையுமாக லட்ச லட்ச மாக தயாரிப்பாளர்கள் கொட்டிக் கொடுப் பார்கள், காரும் பங்களாவுமாக வசதியாக வாழப் போகிறோம் என்றுதானே இவர்கள் விளம்பரத்தைப் பார்த்து வந்தாள்.

"நா ஸ்கூல்ல படிக்கிற பொண். எனக்கு நடிக் கணும்னு ரொம்ப ஆசை. உங்க விளம்பரத் தைப் பார்த்துட்டு வீட்டுக்குத் தெரியாம எழுதிப் போட்டேன். பணம் எப்படி புரட்டற துன்னே தெரியல்லையே.

நா வேணுமின்னா சம்பளம் இல்லாம நடிச் சுத்தரேன்" என்றாள் கபடம் இல்லாமல்.

கதிர் சிரித்தான்.

"எப்படியோ போஸ்ட் பாக்ஸ் நம்பரி லிருந்து விலாசம் தெரிஞ்சுகிண்டு டைரக்டர் ஆர்ட் பிலிம் பண்ணப் போறார்னும் தெரிஞ் சுண்டு, கோமுல்லான் வீட்டுப் பொண்ணெல் லாம் இவர் டைரக்ஷனில் நடிக்க ஆசைப்பட் டுண்டு காரைப் போட்டுண்டு ஓடி வந்தாங்க –

இவர் இப்படி விரலைச் சொடுக்கினார்னா போதும், லட்சம் என்னாங்க, கோடி கோடியா பைனான்ஸ் பண்ணி நடிக்கவும் தயாரா இருக்

**கொசுவத்திச் சுருள் ஏற்றி வைத்தால் அலர்ஜியாக இருக்கிறதா? ஒரு அகல் விளக்கில் இரண்டு, மூன்று ஸ்பூன் வேப்ப எண்ணெய் விட்டு கெட்டியாக பஞ்சு திரி போட்டு, இரவில் விளக்கேற்றி வையுங்கள். கொசுவே வராது.**

— விமலா தியாகராஜன்



குழந்தைகள் காய்களை விரும்பி சாப்பிடுவதேயில்லையென்றால் அவற்றைப் பொடியாக அரிந்து வெங்காயம் தக்காளியுடன் உப்புப் போட்டு வதக்கி துவையலாக அரைத்து சாதத்தில் பிசைந்தோ, இட்லி தோசைக்குத் தொட்டுக் கொள்ளவோ கொடுத்தால் விரும்பி சாப்பிடுவார்கள்.

— உமா மாரியப்பன்



காங்க. ஆனா இவரு ரொம்பப் பிடிவாதக்காரருங்க.

உங்க போட்டோவைப் பார்த்ததுமே லொகேஷன் பார்க்கறேன்னு கிளம்பி விட்டார். இனிமே அரை நிமிஷம் கூட ஒக்க உட்கார மாட்டார்!...."

கிரிஜா யோசித்தாள். கதவைத் தட்டுகிறாள் அதிருஷ்ட தேவதை. இப்போது விட்டால் இனி இது மாதிரி ஒரு வாய்ப்புக் கிடைக்குமா? வீட்டில் கிடைத்ததை சுருட்ட வேண்டியதுதான். வீட்டில் எவ்வளவு தேறும்?

கடன் அடைக்க, அது இது என்று ஏதாவது சாக்குச் சொல்லி அண்ணா மன்னி இரண்டு பேர் சம்பளத்திலும் மிச்சம் பிடித்து அம்மா அமுக்குவது தெரியும். ஒரு அளவு சேர்ந்ததும் தெரிந்தவர்கள் மூலம் நகையாக வாங்கி உள்ளே பதுக்கிடுவாள் வனஜா கல்யாணத்துக்காக.

அம்மாவின் பழைய கால டிரங்குப் பெட்டிக்குள். அவைகளை ஒளித்து வைத்து இருப்பதை கிரிஜா ஒரு நாள் பார்த்திருக்கிறாள். ரம்யா சீமந்தம் இன்னும் இரண்டு நாளில் வருகிறது. லாக்கருக்குப் போய் மன்னி நகைகளை எடுத்து வாணும் என்று அம்மா கோபியிடம் சொல்லிக் கொண்டிருந்தாள்.

அவைகளும் வந்து சீமந்த அமளியும் முடியட்டும். மறுநாள் மன்னி ஊருக்குக் கிளம்புகிறாள். மன்னியை ஏமாற்ற முடியாது. மன்னியிடம் இருந்து தப்ப முடியாது. அவள் போன மறுநாள் நகைகளுடன் கிளம்பி விடலாம்.

ஒரு முடிவுக்கு வந்தவளாய் "கொஞ்சம் தேறும், மிஸ்டர் கதிர்! கொஞ்சம் பணமும் எப்படியாவது புரட்டிண்டு வரப் பார்க்கிறேன். அடுத்த ஞாயிறு இரவு ரெடி! நீங்க இருந்து அழைச்சிண்டு போறீங்களா?" என்றாள் கிரிஜா.

கதிருக்கு உள்ளுக்குள் சந்தோஷ அலைகள். இருந்தாலும் அதை மறைத்துக் கொண்டு கை யோட அழைச்சிகிட்டு வாதுக்கென்ன என்று டைரக்டர் திட்டுவார். உங்களை பத்திரமா கூட்டிகிட்டு வாணும்னா ஒண்ணும் சொல்ல மாட்டார்.

இப்பவே போன் போட்டுச் சொல்லிடறேன். முதல்லே இந்த இடத்தைக் காலி பண்ணிடணும். கூட்டம் தொந்தரவு தாங்கல்லை. நா ஹோட்டல்லே ரூம் போட்டுக்கறேன். ஏதாவது பேசணும்னா என் பேரைச் சொல்லி ரிசப்ஷனில் கேளுங்க மேடம்! கனெக்ஷன் கொடுப்பாங்க.

பத்திரம், யாரிட்டயும் உங்களை செலக்ட் பண்ணதையோ, நம்ப படக் கம்பெனி பேரையோ சொல்லிடாதீங்க. எல்லாம் பொறாமை பிடிச்ச ஜனங்க. விஷயம் தெரிஞ்சா, பணபலத்தாலே உங்களை ஒழிச்சுக் கட்டப் பார்ப்பாங்க."

நகரத்தின் புகழ் பெற்ற ஹோட்டலின் நம்பரைக் கொடுத்தான்.

"ஓகே அப்ப நான் வரேன். ஒன் திங்க். மிஸ்டர் கதிர்! வீட்டுக்குத் தெரியாம இருக்கணும்னு என் சிநேகிதி அட்ரஸ் கொடுத்திருந்தேனே, அவ எனக்கு ரொம்ப ஹெல்ப் பண்ணுவா. ரொம்ப டியரஸ்ட்.

அவகிட்ட மட்டும் செலக்ட் ஆன விஷயத்தைச் சொல்லலாமா? யாரிட்டயும் சொல்ல மாட்டா. ரொம்ப நல்லவ" என்றாள் கிரிஜா.

"ஓ... நோ... நோ... டைரக்டர் படம் முடியற வரைக்கும் விஷயம் லீக் ஆகப்படாது என்று ரொம்ப ஸ்டிரிக்ட்டாக இருக்கார். கவனம் இருக்கட்டும் புறப்படற தேதியை கன்ஃபர்ம் பண்ணி போன் பண்ணுங்க. ஓகே தென் டைபை!"

எழுந்து விட்டான் கதிர். இனி நிற்பதில் பயன் இல்லை.

தோழி கீதா வீட்டில் இருந்தாள். அவள் பேட்டி பற்றிக் கேட்ட போது உண்மையை மறைக்க மனம் வரவில்லை. பெருமையாய்ச் சொல்லிக் கொள்ள ஆசை. அவள் யாரிடம் சொல்லப் போகிறாள்? தான் தேர்ந்தெடுக்கப் பட்டதைச் சொன்னவள்,

"கூடிய சீக்கிரம் கிளம்பணும். ஆனா ஒண்ணு இந்த விஷயம் ரொம்ப ரகசியமாம். யாருக்கும் தெரியப்படாதாம். சொன்னா டைரக்டருக்குக் கோபம் வந்துடுமாம். யாரிட்டயும் சொல்லிடாதே கவனம்பா - நாப்பத்தஞ்சே நாளில படமே முடிஞ்சிடுமாம். வருஷக்கணக்கிலே ஓடும் பார் – நீ ஓகோன்னு எங்கேயோ போயிடுவ பார்ங்கறான்பா!"

தான் நகைகளுடன் போவதையோ, கதிர் பணம் கேட்டது எதையுமே சொல்லாமல் மறைத்து விட்டாள். பணம் கொடுத்து நடிப்பதென்றால் மட்டமாக நினைத்து விட்டால்....?

"ஜமாய்ப்பா. நா அப்பவே சொல்லல்லையா? உன் அழகுக்கு நீ பெரிய நடிகையா

இல்லதரசிகளுக்கு புதிய துணை
சமையல் கலையில் திருப்புமுனை
மில்க் பாய்லர், இட்லி குக்கர்,
வாட்டர் ஃபில்டர், குழிகரண்டி
எல்லாம் தந்திடும்

# Murugan

முருகன் மெட்டல் என்றாலே
முகம் மலரும் தன்னாலே


















## முருகன் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ்

21, பொன்னப்ப செட்டி தெரு, சென்னை-3.
போன் : 5350182, 5343412

வருவேன்னு! என்னமோ கிரி, நீ பெரிய ஸ்டார் ஆனப்புறமும் எங்களையெல்லாம் நினைவு இருக்குமா?"

கேலி செய்தாள் கீதா.

"போப்பா, முதலில் படம் வரட்டும், பாரேன்! அப்புறம் நூறாவது நாள் விழாவில் உன்னைக் கூட்டிப் போய், இவன்தான் என் திரையுலக பிரவேசத்துக்கு ரொம்ப உதவியா இருந்தவன்னு ஊர் ஊரா மேடையிலே அறிமுகப்படுத்தறேன்பா! ஓ.கே?"

கிரிஜா சொல்ல இருவரும் சிரித்தார்கள்.

சென்னை செல்லும் நெடுஞ்சாலையில் அந்தக் கார் விரைந்து கொண்டிருந்தது. பின் சீட்டில் கிரிஜாவும் டிரைவருக்குப் பக்கத்தில் முன் சீட்டில் கதிரும் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். கதிரின் கவனமெல்லாம் கிரிஜா பக்கத்தில் இருந்த பெட்டியின் மேலேயே இருந்தது....

சீமந்த வேளையில் எல்லாரும் மும்முரமாக இருந்தபோது மெதுவாக நழுவிப் போய்க் கதிர் தங்கி இருந்த ஹோட்டலுக்குப் போன் பண்ணினாள். தான் கண்டிப்பாக மறுநாள் கிளம்ப முடியும் என்றும், அவன் திட்டம் என்ன என்று கேட்டுத் தெரிந்து கொள்ளத்தான் போன் பண்ணதாகவும் சொன்னாள்.

"இரவு பிரயாணம் வேண்டாம், டிரெய்னும் வேண்டாம்னு டைரக்டர் சொல்லிட்டார் மேடம்! மெட்ராசிலிருந்து ஒரு காரே உங்களை அழைச்சிண்டு வர அனுப்பி வெச்சுட்டார் மேடம்! விடி காலையில் கிளம்பினால் அவர்கள் கண் விழிப்பதற்குள் வெகுதூரம் போயிடலாம்!"

"விடிகாலையிலா நாளைக்கு முடியாது. வீட்டில் விசேஷம். விருந்தாளிங்க இருக்காங்க. நாளைக்கு மறுநாள் என்னால் ஈசியா வர முடியும். ஓகேயா?"

"ஓகே தென்! சரியா மூணு மணிக்கு உங்க

**நவராத்திரியில் சுண்டல் கொடுக்க கடையில் விற்கும் ஐஸ்கிரீம் கோன்களை வாங்கி வைத்துக் கொண்டு அதில் சுண்டல் போட்டுக் கொடுத்தால் பொட்டலம் கட்டும் நேரமும் மிச்சம், புது மாதிரியாகவும் இருக்கும்.**

— மீரா ஸ்ரீபாதராமன்



தெரு முனையில் உள்ள மெயின் ரோடில் காத்திருப்பேன். அம்பாசிடர் வெள்ளை. நம்பர் எழுதிக்குங்க. வீட்லே எல்லாரும் நல்லாத் தூங்கறவங்களா? அப்பா அம்மா வயசானவங்கதானே? மாத்திரை போட்டுக்கறதுண்டா தூக்கத்துக்கு?

அந்த மாத்திரையையே மத்தவங்களுக்கும் பால்லே கலந்து கொடுங்க. நல்லாவே தூங்கட்டும். நாம பாதி வழி போயிருப்போம். ரொம்பக் கொடுத்துடாதீங்க மேடம். ஒரேயடியா தூங்கிடப் போறாங்க. அப்புறம் வம்பா யிடும். ஜாக்கிரதை. ஷார்ப்பாக மூணு மணிக்கு மறந்துடாதீங்க!" போனை வைத்து விட்டான்.

ரம்யாவும் விஜி மன்னியும்தான் நாளை கிளம்புகிறார்கள். மற்றவர்கள் இன்று இரவு கிளம்பி விடுகிறார்கள். ரம்யா ஸ்டேஷனுக்குக் கிளம்பிய உடன் தன்னுடன் படுத்துத் தூங்கும் அக்காவுக்கும் அம்மாவுக்கும் தூக்க மருந்தை கொடுத்து விட்டால் அவள் கிளம்புவது சுலபம். அம்மா தூக்கம் வராமல் இருக்கும் போது போட்டுக் கொள்ள மாத்திரைகள் வாங்கி வைத்திருப்பது அவளுக்கு சௌகர்யமாக இருந்தது.

கோபி - ரமணியுடன் அப்பாவும் அண்ணாவும் கூட மொட்டை மாடியில் படுத்துக் கொள்வார்கள்.

சீமந்தம் ஆன மறுநாள் இரவு விஜியும் ரம்யாவும் கிளம்பினார்கள். ராமநாதன் ஸ்டேஷனுக்கு ஏற்றிவிடப் போனார். சங்கர் ஸ்டேஷனுக்கு போகக் கூடாது என்று சம்பிரதாயம் என்கிற பெயரைச் சொல்லி தடுத்து விட்டாள். அதனால் அவர்கள் கிளம்பும் சமயத்துக்குத்தான் சங்கரே ஆபீசிலிருந்து வந்தான்.

"பாவம், மன்னி கூட இல்லை. நீ கஷ்டப்படாதேம்மா? நா சமையல் ரூமை கிளீன் பண்ணிட்டு பாலைக் காய்ச்சிண்டு வரேன். நீ ஹால்லே போய் உட்காரும்மா. வனி. நீயும்தான். தினம் இனிமே நா எல்லாம் பண்றேன்!" என்று இருவரையும் ஹாலுக்குத் தள்ளி விட்டாள்.

வனஜா கொஞ்ச நாளாகவே சரி இல்லை. அவள் கொடைக்கானல் போக, திட்டம் போட்ட வேளை, அது நடக்கவில்லை. ஹோட்டலில் அன்று ரம்யாவைத்தான் மட்டுமே பார்த்ததாகவும், அவள் தன்னைப் பார்த்திருக்க முடியாது என்று எண்ணிக் கொண்டதும் தவறோ?

'மன்னியை மாட்டிவிட வேண்டுமென்று ஹோட்டல் மானேஜர் ரூமில் அவளைப் பார்த்ததை யாருடனோ ஹோட்டலில் சாப்பிட்டுக் கொண்டிருந்ததாக கதை திரித்தான். அன்று அது பெரிய ரகளையாகி, அண்ணா கை நீட்டி மன்னியை அடித்தே விட்டான்.



**கடலைப்பருப்பை இலேசாக வாணலியில் வறுத்து பின் வேகவைத்து அதனை மிக்சியில் அரைத்து அதனுடன் வெல்லம், ஏலக்காய்த்தூள், முந்திரி, திராட்சை போட்டு பாயாசம் செய்தேன். மிகவும் ருசியாக இருந்தது.**

**— என். கமலா**

அன்றிலிருந்து இன்று ரம்யா ஊருக்குப் போகும் வரை ரம்யாவை நேருக்கு நேராகப் பார்க்கவே வெட்கமாக இருந்தது. ஆபீஸ் டூர் என்று ஆரம்பித்ததுமே சங்கர்,' ஒரு மண்ணும் வேண்டாம். கம்மா விட்லே இட'ன்னு எரிஞ்சு விழறான்.

அம்மாவைக் கேட்டால், அம்மாவும் திட்டறா. மனோவுக்கு ஒரே கோபம். அதை சமாதானப் பண்ண அவன் வீட்டுக்குப் போக முடியலை. ஒண்ணும் சரி இல்லை. ஒரே திகிலா இருக்கு எப்படி சமாளிக்கப் போறேனோ?' இப்படி வனஜா தன்னைப் பற்றிய கவலையில் இருந்ததால் கிரிஜாவின் பதட்டத்தைக் கவனிக்கவில்லை.

கிரிஜா திட்டமிட்டபடி பாலில் தூக்க மருந்தைக் கலந்து கோபி, ரமணி தவிர எல்லாருக்குமே கொடுத்து விட்டாள். ராமனாதன் ஸ்டேஷனிலிருந்து உள்ளே நுழையவும் கிரிஜா ஒரு டிரேயில் அங்கேயே உட்கார்ந்து டீ.வி. பார்த்துக் கொண்டிருந்த ரமணிக்கும், வனஜா. அம்மாவுக்கும் மூன்று கப்பில் பாலை நிரப்பிக் கொண்டு வரவும் சரியாக இருந்தது.

"என் கண்ணு. என்னமா பொறுப்பா வேலை செய்யறது, பாருங்க!" என்று நெட்டி முறித்துக் கொண்டாள் மங்களம்.

டீ.வி. பார்த்துக் கொண்டிருக்கும் போதே சங்கர் "தூக்கம் கண்ணைச் சுழட்டறது. நான் மாடிக்குப் போறேன்" என்று கிளம்பினான். ராமனாதன் அப்பவே மாடிக்குப் போய் விட்டார். மங்களம் படுத்த இடத்திலேயே தூங்கிவிட வனஜா சோபாவிலேயே சரிந்து விட்டாள்.

மணி 11 அடிக்கும் வரை அங்கேயே படுத்திருந்த கிரிஜா மெதுவாக எழுந்து அம்மாவின் சங்கிலியில் பின்னால் தொங்கிய சாவிக் கொத்தை எடுத்துக் கொண்டாள். கூடத்து அறைக்குள் நுழைந்து கதவைத் தாளிட்டுக் கொண்டாள். கைகள் நடுங்க மெதுவாக அம்மாவின் பெட்டியைத் திறந்தாள்.

மேலாக சில பழைய புடவைகள், படங்கள் எல்லாவற்றுக்கும் அடியில் சின்னச் சின்னப் பைகளாக என்ன இது....!

ஒரு பையைப் பிரித்தாள். ஐம்பதும் 20மாக நோட்டுக்கள். மற்றொரு பையில் சங்கிலி, நெக்லஸ், வளை, இன்னொரு பையில் அம்மாவின் பழங்கால நகைகள். அத்தனையும் தங்கச் சுரங்கம் மாதிரியல்லவா இருக்கிறது!

மங்களத்துக்கு லாக்கர், காட்ரெஜ் இதிலெல்லாம் நம்பிக்கை இல்லை. திருட வருபவர்கள் பீரோவைத்தான் முதலில் பார்ப்பார்கள். இந்தத் துருப் பிடித்த பெட்டி அவர்கள் கண்ணுக்குப் படாது என்பது அவள் எண்ணம்! சர்வ சாதாரணமாக பெருங்காயப் பையில் முடிந்து எத்தனை தங்க நகைகள்! பணம் நோட்டு நோட்டாக.

அத்தனையும் அண்ணா மன்னி உழைப்பில் அவர்களை ஏமாற்றிச் சேர்த்த பணம்! மன்னி விள்ளாமல், விரியாமல் சம்பளத்தை அப்படியே தந்து விட்டு, பஸ்சார்ஜுக்குக் கூட அம்மாவிடம் தொங்க வேண்டும். அண்ணாவும் அப்படியே, பாவம் அவனுக்கு ஒரு கெட்ட பழக்கம் கூட இல்லை.

சீ. பாவம்! அம்மா யாருக்காக இப்படியெல்லாம் செய்கிறாள்? வனஜாவுக்கும் எனக்கும்தானே? வனஜா கல்யாணத்துக்காக அம்மா இப்படி சேர்க்கும் நகைகளை நாம் எடுத்துப் போவதா?

இந்த ஒரு படம். இதில் நடித்துப் பேரும் புகழும் கிடைத்து விட்டால் பணத்துக்கு நானா பஞ்சம்? தயாரிப்பாளர்கள் அட்வான்சுடன் கியூவில் நிற்பார்கள். அப்புறம் இதெல்லாம் என்ன, சுண்டைக்காய்! இதைப் போல நூறு மடங்கு நகை வாங்கி வனஜா கல்யாணத்துக்குப் போட்டுவிடலாம். எல்லாவற்றையும் ஒன்றாக ஒரே பையில் போட்டு சின்ன ப்ரீஃப் கேசுக்குள் திணித்துக் கொண்டாள். கூடத்துப் பக்கம் எட்டிப் பார்த்தாள். அம்மா கும்பகர்ணனின் கூடப் பிறந்தவள் போல் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருக்க, வனஜாவும், அப்படியே.

மறுபடியும் உள்ளே வந்து பீரோவை திறந்து அதில் இருந்த ரம்யாவின் நகைகளையும் எடுத்துக் கொண்டாள். அம்மாவிடம் எல்லாம் பழைய நாளைய நகை. புதிதாக வாங்கி இருப்பதை பாவம், பூதம் காப்பது போல் பெண்ணுக்கென்று பொத்தி வைத்திருக்கிறாள். மன்னி ஊருக்குக் கிளம்பும் போது ஆசையாக "இந்த சிவப்புக் கல் அட்டிகையை எடுத்துப் போகட்டுமா?" என்று கேட்டாள்.

"இப்ப எதுக்கு அதெல்லாம்? காலம் கெட்டுக் கிடக்கு. பிரசவம் வரை திருஷ்டி

பட்டுடும். எங்கேயும் போகக் கூடாது. பெத்துப் பிழைச்சா, நாலுமாசம் எங்கும் போக முடியாது. போனா அம்மா, விஜியோடதைப் போட்டுக்கோ. நல்லபடி வந்தப்புறம் நகையெல்லாம் பூட்டிண்டா போச்சு. ஏம்மா விஜி. நா சொல்றது சரிதானே?" என்று விஜியை சப்போர்ட்டுக்கு அழைத்தாள் மங்களம்.

விஜி என்ன சொல்லுவாள் பாவம்!

"நீங்க சொல்றது ரொம்ப சரி மாமி. இரண்டு பேரும் தனியாப் போறோம். நகை எல்லாம் எதுக்கு?" என்று ஆமோதித்து வைத்தாள்.

அதனால இப்போது எல்லாமாக கணிசமாக நகைகளும் பணமும் சேர்ந்து விட்டது. இதைக் கொண்டு போய்க் கொடுத்தால் உடனே வேலை ஆரம்பிக்க சௌகர்யமாக இருக்கும்.

"டிரஸ் எதுவும் வேணாங்க. அதிகச் சுமை வேண்டாம். ஏற்கெனவே ஹீரோயினுக்கு ஒரு செட் மாடர்ன் டிரஸ் பெட்டி நிறைய வாங்கி அடுக்கி இருக்கார். நமக்குத் தேவையானதை மட்டும் எடுத்துகிட்டு கிளம்புங்க."

கதிர் எச்சரித்தது ஞாபகம் வந்ததால் எதுவும் எடுத்துக் கொள்ளவில்லை. ஓசைப்படாமல் அம்மாவின் அருகில் படுத்துக் கொண்டாள். சாவியை பாயில் போட்டு விட்டாள். தூக்கத்தில் புரளும் போது கழன்று கீழே விழுந்து விட்டதாக நினைத்துக் கொள்ளட்டும்! கண்ணோடு கண் பொருந்தாமல் பதட்டத்துடன் விழித்திருந்தாள்.

கூடத்து கடிகாரம் டாண்டாண் என்று மூன்று மணி அடித்தது. அந்த நிசப்தமான இரவில் அது பயங்கரமாக ஒலித்ததும், அம்மா விழித்துக் கொண்டு விடப் போகிறாளோ என்ற பயம் வந்தது. அம்மா அவ்வளவு சுலபமாக விழித்துக் கொள்வதாக இல்லை.

'அம்மா என்னை மன்னிச்சிடு. உங்கிட்ட சொல்லாம போறேன். சொன்னா உன் அனுமதி கிடைக்காது. எனக்குப் பிடிச்ச வழியிலே நான் போறேன். மூலதனமா நீ கஷ்டப்பட்டு சேர்த்து வெச்ச நகை, மன்னியின் நகை, பணம் எடுத்துண்டு போறேன். கூடிய சீக்கிரம் இதைப் போல நூறு மடங்கா திருப்பி தராமாதிரி நான் உயரணும்னு ஆசீர்வாதம் பண்ணும்மா.'

வனஜாவும் நல்ல தூக்கத்தில் இருந்தாள். 'வனி, நீயும் என்னை மன்னிச்சிடு. என்னாலே உன் கல்யாணம் கொஞ்ச நாள் தள்ளிப் போனாலும், தடைப்படாது.

இன்னும் ஏராள நகைகளோடும், பெட்டி நிறையப் பணத்தோடும் உன் கல்யாணத்தை ஜாம் ஜாம்னு நடத்தி வைக்கிறேன், பார்! அண்ணா, விஷயம் தெரிஞ்சு, நீயும் என்னை வெறுக்கலாம். கண்டிப்பா மன்னி நகையை இரண்டு மடங்கா திருப்பித் தருவேன். அப்ப புரியும் இந்த கிரிஜா யாரென்று!'

அய்யோ மணி 3-05! இனி நிற்கக்கூடாது. கதிர் காத்துக் கொண்டு இருப்பான். வாசல் கதவைத் திறந்து வெளியே இருந்தபடி மெதுவாகச் சாத்தினாள். ஆட்டோமேடிக் லாக் ஆனதால் பூட்டிக் கொண்டு விட்டது. ஒருமுறை வீட்டைத் திரும்பிப் பார்த்துவிட்டு நடந்தாள். தெருமுனையில் கதிர் காத்திருந்தான்.

"சீக்கிரம் வாங்க மேடம். காருக்குப் பக்கத்துலே சும்மா நின்னா எவனாவது பாத்தா கேள்வி கேப்பான். அதான் எதிர்ப்பக்கம் போய் நின்னுட்டேன். ஏன் லேட்? வீட்டிலே ஏதாவது பிராப்ளமோனு பயந்துட்டேன். வாங்க. விடியறதுக்குள்ளே பாதி வழி தாண்டிடணும்!"

அவனைத் தள்ளாத குறையாக முன் சீட்டில் உட்கார வைத்துவிட்டு டிரைவர் சீட்டில் உட்காரப் போனான்.

"நா அங்கே!" என்று பின் சீட்டில் ஏறிக் கொள்ளப் போனாள் கிரிஜா.

"அதுவும் சரிதான். ராத்திரி பூரா தூங்கியிருக்க மாட்டீங்க! படுத்துத் தூங்கிட்டு கூட வரலாம். பெட்டியை இப்படியே வைக்கலாமே. நீங்க சௌகர்யமா படுத்துக்கலாம்!" என்று இளித்தான் கதிர்.

"இருக்கட்டும் மிஸ்டர் கதிர். தூக்கம் வந்தா தலைக்கு வெச்சிக்கலாம்!" என்று பின் சீட்டில் பெட்டியோடு ஏறிக் கொண்டாள்.

'அடி என் பத்தினித் தங்கமே! கண்ணகி வேஷமா போடறே? இருக்கட்டும். எல்லாம் ரெண்டு நாளைக்குத்தானே? அந்தப் பெட்டி எங்க கைக்கு வரட்டும் அப்புறம் நடக்கறதே வேறே!' என்று கறுவிக் கொண்டான் கதிர்.

இருந்தாலும் முகத்தில் எந்தவித பாவமும் காட்டாமல் "ஓகே நீங்க படுத்துக்குங்க!" என்று காரைக் கிளப்பினான்.

கார் நெடுஞ்சாலையில் வேகமாக விரைந்தது.

(தொடரும்)

*இட்லியை கத்தியால் நாலாக துண்டு செய்து கட்டியும் மிளகாய்ப் பொடியை எண்ணெய் விட்டுக் குழைத்து, அந்த இட்லி துண்டுகளை பிரட்டி டிபன் டப்பாவில் போட்டுக் கொடுத்தால் குழந்தைகள் சாப்பிடுவதற்குச் சௌகர்யமாக இருக்கும்.*

*— கே. சவுந்தர்யா*



# இவைகளால் எய்ட்ஸ் பரவாது



# இவைகளால் எய்ட்ஸ் பரவும்

எய்ட்ஸ் கிருமி உள்ளவருடன்...

- வீட்டில் ஒன்றாகப் பழகுவதன் மூலம்.
- வேலை செய்யுமிடத்தில் ஒன்றாகப் பழகுவதால்.
- தட்டு, தம்ளர், கப், ஸ்பூன் ஆகியவற்றை சேர்ந்து உபயோகிப்பதால்.
- உணவு, தண்ணீர் ஆகியவற்றை பகிர்ந்து கொள்வதால்.
- அவர் உபயோகிக்கும் கழிவறை அல்லது குளியல் தொட்டியை பயன்படுத்துவதன் மூலம்.
- முத்தமிட்டுக் கொண்டால்.
- இருமல் மற்றும் தும்மல் தெறித்துவிட்டால்.
- நோயினால் பாதிக்கப்பட்டவருடன் சேர்ந்து விளையாடுவதன் மூலம்.
- கை குலுக்குவதன் மூலம்.
- நோயாளிகளைக் கடித்த கொசு, மூட்டைப்பூச்சி உங்களைக் கடித்துவிட்டால்.
- கண்ணீர், உமிழ்நீர் அல்லது வியர்வை உங்கள்மேல் படுவதால்.
- எய்ட்ஸ் கிருமி உள்ளவரின் சிறுநீர், மலத்தை மிதித்துவிட்டால்.

- எய்ட்ஸ் கிருமி கொண்டவருடன் ஆணுறை இல்லாமல் உடலுறவு கொள்வதன் மூலம்.
- எய்ட்ஸ் பரிசோதனை செய்யாத இரத்தத்தை செலுத்துவதன் மூலம்.
- கொதிக்கிற நீரில் சுத்தரிக்கப்படாத ஊசி, கத்தி, பிளேடு மற்றும் பிறவற்றைக் கொண்டு சவரம் செய்வதால், மொட்டை அடித்தல், காது குத்தல், மூக்கு குத்துதல் மற்றும் பச்சை குத்திக் கொள்வதன் மூலம்.
- எய்ட்ஸ் கிருமி கொண்ட கர்ப்பிணிப் பெண்ணிடமிருந்து குழந்தைக்கு, கர்ப்பிணிப் பெண்ணுக்கு எய்ட்ஸ் நோய் வந்திருந்தால், அவளால், அவளுக்குப் பிறக்கும் குழந்தைக்கும் வரலாம்.



தமிழ்நாடு எய்ட்ஸ் கட்டுப்பாட்டு அமைப்பு

417, பாந்தியன் சாலை, எழும்பூர், சென்னை 600 008. போன் : 8255261 / 8255467 / 8254917

24 மணிநேரமும் இயங்கும் ஹாட் லைன் : 8256882 / 8256864

**எய்ட்ஸ்த் தடுக்க ஆணுறை உபயோகியுங்கள்**

R K SWAMY/BBDO TNSACS 16022 TAM

# திருமண மலர்

## மணமகள் தேவை

■ சேனைத் தலைவர், செட்டியார், சதயம், M.E., Executive in Central Public Sector, 37/171/15,000/- நல்ல பண்புகளுள்ள வரனுக்கு பட்டப் படிப்பு 30 வயதுக்குட்பட்ட வேலையில் உள்ள அல்லது இல்லாத குடும்பப்பாங்கான பெண் தேவை. ஜாதகம், குடும்ப விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 13407

■ Alliance invited from Iyengar non-Srivatsa good looking graduate employed girl preferably transferable job for only son (two sisters married & well settled) parents both alive. Pushyam/B.Sc/29/170/ Rs.8000/- Management cadre in MRF Ltd.,Arakonam. Iyengar subsects no bar. Details to Box No. 13533

■ வடமாள், பாரத்வாஜம், மூலம், வயது 46, பி.காம்., சென்னையில் தனியார் நிறுவனம் ரூ. 2500/- பையனுக்கு படித்த வேலைக்கு போகும் இதே பிரிவில் உள்ள மணமகள் தேவை. பெட்டி எண் : 13545

■ இந்து விஸ்வகர்மா 9-வது படித்தவர் நல்ல குடும்பம், பிறந்த தேதி 19.11.62, 5 அடி உயரம் புது நிறம், மகம் நட்சத்திரம், சுயதொழில், மிக்ஸி, கிரைண்டர், மின்விசிறி, மோட்டார் வைண்டிங் பழுதுபார்க்கும் கடை வைத்து மாதம் ரூ. 3000/- சம்பாதிக்கும் பையனுக்கு குடும்பப்பாங்கான மணமகள் தேவை. ஜாதகம் விவரங்கள் உடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 13546

■ Alliance for fair, handsome, Brahacharanam boy 28/168 cms/B.Sc/4000/- working in reputed company. Seeks fair, good looking graduate girl. Send full details with horoscope to Box No. 13547

■ Tamil Iyer, Bharadwaj, Brahacharanam, Swathi religious minded graduate boy 31/5.11" accountant in Bombay invites horoscopes from homely religious graduate girls. Box No. 13548

■ Alliance invited for veg/good looking, good natured, Bank/completing 39, Saiva Pillai boy from educated, fair, homely, good looking girl. Respond with horoscope to Box No. 13549

■ மாத்வா, கன்னட, ஸ்ரீவத்ஸ, ஆயில்யம், பி.எஸ்ஸி Chemistry படித்த 30 வயது 5.4" பம்பாயில் தனியார் துறையில் நல்ல வேலையில் இருக்கும் தாய் தந்தை இல்லாத (2 அண்ணன்கள் 3 தமக்கைகள் உள்ள) பையனுக்கு நல்ல ஆசாரமான கன்னட மாத்வா குடும்பத்தை சேர்ந்த பட்டதாரி, வேலைக்கு செல்லாத மணமகள் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 13550

■ ஐயர், பிரஹசரணம், கௌண்டின்ய, உத்திராடம், 29/ 5.6"/பி.காம்., DIRPM, 7500/- Multinational Company, Bangalore-ல் வேலை பார்க்கும் வரனுக்கு பட்டதாரி, பெங்களூர் அல்லது மாற்றலாகக் கூடிய நல்ல வேலையிலிருக்கும் குடும்பப்பாங்கான பெண் தேவை. ஜாதகம் மற்றும் விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 13551

■ Well educated non-Bharadwaja girl for boy Vadama, Bharadwaja, Uthiram, B.E., Mech., 29/175. Box No. 13552

■ ஐயர், வாத்திமாள், நாராயண, 38, கிருத்திகை, 5.7" பி.காம் தனியார் ஏர்லைன்ஸில் வேலை, 6000/- ஒரே பையனுக்கு தகுந்த மணமகள் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 13553

■ Brahacharanam, Koundinyam, Uthirattathi, 34, 5.8", B.Com. Gulf employed. Legal divorcee unencumbered on account of girl being sick. Seeks graduate girl from decent family. Subsect acceptable. Reply Box No. 13554

■ திருநெல்வேலி சைவ வேளாளர், 27/5.6" புனர்பூசம், M.Com., PGDCA மத்திய அரசு நிறுவனத்தில் டெல்லியில் உதவி பேராசிரியராக (கம்ப்யூட்டர்) பணிபுரியும் பையனுக்கு இதே இனத்தை சேர்ந்த பட்டதாரி, சிவப்பான, அழகான குடும்பப்பாங்கான மணமகள் தேவை. விவரங்களுடன் தொடர்பு கொள்க. பெட்டி எண் : 13555

■ Wanted heathy Brahmin.vegetarian spinster/ widow/divorcee with/without child for retired Brahmin widower crossed 57 without committments and demands. Reply Box No. 13556

■ For Thondaimandala Saiva Mudaliar boy, 26, B.E., M.S., tall, fair, smart, working in America (Rupees 1,35,000 p.m.) H1 Visa (intending to settle in India after a few years) alliance is invited from well qualified good natured fair pretty girls of respectable family of same community. Send details and horoscope to Box No. 13557

■ Alliance invited for boy Vadamal, Koundinya, very fair, young looking handsome clean habits, Chitirai, 39/168/7000, M.A., M.Ed., M.Phil. State Govt. from girls age upto 33 years fair graduate employed (around Kumbakonam) transferable or unemployed. Subsect no bar. Reply with horoscope to Box No. 13558

■ Switzerland ல் நல்ல வேலையில் இருக்கும் இலங்கை மணமகனுக்கு நல்ல குடும்பத்தைச் சேர்ந்த இந்திய,

**திருமண மலர் பகுதியில் விளம்பரம் செய்ய, கட்டணம் ரூ. 100/-. இதை சென்னையில் மாற்றலாகக் கூடிய டிமாண்ட் டிராப்ஃடாக, "மங்கையர் மலர்" என்ற பெயருக்கு எடுத்து விளம்பர வாசகத்துடன் அனுப்ப வேண்டும். மணியார்டர், போஸ்டல் ஆர்டர் காசோலை கண்டிப்பாக ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது. விளம்பரக் கட்டணத்தை எங்கள் அலுவலகத்திற்கு நேரில் வந்து பணமாகவும் செலுத்தலாம்.**

இலங்கை பெண் தேவை. விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 13559

■ ஐயர், பிரஹசரணம், சங்க்ருதி, புனர்பூசம், 32/5.3", B.Sc., Post graduate Dip. Paint Tech., பரோடாவில் தனியார் கம்பெனியில் உத்யோகம். ரூ. 5000/- சம்பளம். வேலைக்கு போக விருப்பமுள்ள பெண் வீட்டார் விவரத்துடன் தொடர்பு கொள்க. உட்பிரிவு சம்மதம். பெட்டி எண் : 13560

■ தருமபுரியில் வசிக்கும் இந்து வன்னியர் வயது 30, சொந்த தொழில் மாத வருமானம் ரூ. 10,000/- மனைவி தவறி விட்டதினால் மறுமணம். தொடர்பு கொள்க. பெட்டி எண் : 13561

■ Alliance invited from tall fair, good looking girl comatible 27 to 29 years old only from Sanfrancisco/ California Bay area for Vadagalai, Kousika, Barani, BE/ MS/32/175. Computer professional. Box No. 13562

■ Alliance invited for Vadamal, Kousika, Bharani only son PUC 28/165/3000/- employed in Private Company in Bangalore. employed girl 22/23 preferred. Apply to Box No. 13563

■ Alliance for 38 yrs. B.Com boy working in Gulf for the last 12 yrs. Very healthy, but with diabetis (under full control) well settled with own house. From Iyer girls below 35. Box No. 13564

■ Brahacharanam, Bharadwajam, Poorvabhadra, bachelor 42/168/10,000/- (ME), Senior Engineer, Central Govt. at Trichy, seeks graduate bride unemployed is the must. Box No. 13565

■ Alliance invited from respectable family unemployed for Vadamal, Srivatsa, Kirthika boy, B.Com, 34 yrs, 165 cms. employed as Sales Executive monthly Rs. 4000/- based at Hyderabad. Subsect no bar. Reply with horoscope and Bio-data to Box No. 13566

■ Alliance invited for Ashtasahasram, Athreya, Bharani, B.Com., D.C.A., 27, 182 cms, well built, employed in Private Firm, Chennai. Rs. 5,000/- plus. Reply horoscope to Box No. 13567

■ Alliance invited for 24 Manai Telugu Chettiar boy Tamil speaking, Mumudiar Gothram, 33/10,000/- p.m. 16 house working in reputed pvt. firm in Bangalore. The girl should be educated and from 8 house. Box No. 13568

■ அஷ்டஸகஸ்ரம், வாதூலம், பூராடம், 28/180/6000 நல்ல சிவப்பு பட்டதாரி Medical Representative (Reputed Public Limited Co.,) சுத்தஜாதகம் வைதீகச்ரத்தையுள்ள மணமகனுக்கு, குடும்பப்பாங்கான அழகிய பட்டதாரி மணமகள் தேவை. அதே உட்பிரிவைச் சேர்ந்த பெண்ணுக்கு முன்னுரிமை. பெட்டி எண் : 13569

■ 28 வயது அஸ்வினி ஷடமர்ஷண கோத்ரம், 5.4" பி.காம்., டெல்லியில் 15 ஆயிரம் சம்பளத்தில் அக்கௌண்ட்ஸ் ஆபீசராய் வேலை பார்ப்பவருக்கு, பட்டதாரியான பாங்க், மத்திய அரசில் பணிபுரியும் (அ) ஸ்டெனோகிராபி தெரிந்த வரன்கள் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 13570

■ Wanted Brahacharanam, non-Bharadwaja, grduate employed bride for boy, 30, fair, business earning Rs. 10,000/- p.m. Write with horoscope to Box No. 13571

■ ஐயங்கார், வயது 30, உயரம் 5.8" படிப்பு பி.காம், கௌசிகம் கோத்திரம், அனுஷம் நட்சத்திரம், நல்ல சிகப்பு நிறம், நிரந்தர உத்யோகம் மாதம் 2500/- வருமானம் உள்ள வேலைக்கு செல்லும்/செல்லாத குடும்பப் பாங்கான மணமகள் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண் : 13572

■ பிரஹசரணம், காச்யப கோத்திரம், பூசம், வயது 32, 5.7" பி.காம். தனியார் கம்பெனி ரூ. 7000/- மாதச் சம்பளம். வரனுக்கு உத்தியோகம் பார்க்கும் கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்த பெண் தேவை. ஐயர் உட்பிரிவுகள் சம்மதம். தொடர்பு கொள்க. பெட்டி எண் : 13573

■ Alliance inviteda from educated, good looking, Agamudaiyar girl for Hindu Agamudaiyar boy, 32/ B.Sc/168 cms, medium complexion, Interior Decorator. Monthly income Rs. 30,000/- apply with horoscope. Box No. 13574

■ தஞ்சை சைவ வெள்ளாளர், வயது 30, பி.காம்., (சி.ஏ.) அனுஷ நட்சத்திரம், சொந்தத் தொழில் செய்யும் மணமகனுக்கு சைவ குடும்பத்தைச் சேர்ந்த, படித்த குடும்பப்பாங்கான மணமகள் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 13575

■ ஐயர் வடமாள், காசியப, மகம், 1959/பி.எஸ்ஸி/5,500/-/165 செ.மீ. பட்டதாரி நல்ல நடத்தை, தெய்வ பக்தி, சென்னையில் சொந்த வீடு, பப்ளிக் லிமிடெட் கம்பெனி வேலை பார்க்கும் மணமகனுக்கு பட்டதாரி, வேலையிலிருக்கும் குடும்பப்பாங்கான மணமகள் தேவை. பெட்டி எண் : 13576

■ Vadagalai, Srivatsam, Pooradam, fair Technically qualified 30/5.10"/3000/- Maintenance Supervisor renowned shoe manufacturing company seeks fair girl 22-25/5,5'' good family essential graduation/ employment not keen. Box No. 13577

■ வயது 32/ஐயர், ஆத்ரேய பிரஹசரணம், 160 செ.மீ. உத்திராடம், இன்சூரன்ஸ் துறையில் வேலை பார்க்கும் வரனுக்கு, வேலைக்குச் செல்லும் அல்லது செல்லாத, சமையல் மற்றும் வீட்டு வேலைகள் தெரிந்த, அழகான, குடும்பப்பாங்கான மத்தியதர குடும்பத்தைச் சார்ந்த மணமகள் தேவை. பெட்டி எண் : 13578

■ நல்ல வசதியான தனியார் நிறுவனம் ஒன்றில் வேலை பார்க்கும் சோழிய வெள்ளாள பிள்ளை மணமகனுக்கு B.Sc., HDISM, 27/4000/-/163, நன்கு சிவந்த அழகிய நிறமுள்ள பட்டதாரி பிராமண இளம்பெண் தேவை. பெட்டி எண் : 13579

■ Delhi based Telugu Balija Naidu boy MA, fair 33/ 185/10,000/- Central Govt. Class I Gazetted Officer seeks good looking homely graduate girl height 163 cms and above. Box No. 13580

■ தெலுங்கு யாதவர் கடலூரில் அரசுப் பணி, 3000/-, வயது 41. ரிஷப ராசி, சிவப்பு நிறம், தந்தை இல்லை. வள்ளலார் மாவட்டம் மற்றும் அருகில் உள்ள மாவட்டங்களில் வேலைக்குச் செல்லும்/செல்லாத படித்த 35 வயதிற்குட்பட்ட மணமகள் தேவை. ஜாதகம் இல்லை. ராசிப் பொருத்

**விளம்பர வாசகங்கள் கண்டிப்பாக 30 வார்த்தைகளுக்கு மேல் இருக்கக் கூடாது. விளம்பர வாசகங்களை அனுப்பும் போது பெட்டி எண்ணுடன் விளம்பரம் செய்ய வேண்டுமா அல்லது விலாசத்துடன் பிரசுரம் செய்ய வேண்டுமா என்பதைத் தெளிவாக எழுத வேண்டும். ஒன்றும் குறிப்பிடவில்லை என்றால் விலாசம் பிரசுரிக்கப்படும்.**



## வைர விழா - ஸ்ரீமான் நாகராஜ சாஸ்திரி

மகாராஷ்டிரா மாநிலம், நாக்பூர் மாவட்டம், ஷிவாஜி நகரில் 22.12.1996 அன்று அதிவிமரிசையாக நடைபெற்ற எங்கள் தந்தையார் ஸ்ரீ என். நாகராஜ சாஸ்திரி அவர்களின் சதாபிஷேக விழாவுக்கு வருகை தந்து எங்களை கௌரவித்த அனைவருக்கும் எங்கள் உளமார்ந்த நன்றியை உரித் தாக்குகிறோம்.

| | |
|---|---|
| என். சுந்தரேசன் | ருக்மிணி கிருஷ்ணன் |
| மீனாட்சி சுந்தரேசன் | பி.எஸ். கிருஷ்ணன் |
| என்.பி. ஹரன் | ராதா மணி |
| ப்ரியா ஹரன் | பி.எஸ். மணி |
| என்.எஸ். மணி | உஷா கிரிராஜன் |
| ராஜி மணி | என். கிரிராஜன் |

தம் பார்த்து மண முடிக்கலாம். பெட்டி எண் : 13581

■ வடமாள், ஐயர், ஹரித கோத்திரம், பூசம், 31, 6.2", 4000/- பி.ஏ. இந்திய விமானப் படையில் (டெக்னிகல் பிரிவு) வேலை பார்க்கும் பையனுக்கு நல்ல குடும்பத்தைச் சார்ந்த பட்டபடிப்பு வரை படித்து வேலை பார்க்க தகுதியுள்ள பெண் தேவை. ஜாதகம், குடும்ப விவரத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 13582

■ சைவ வேளாளர், 25 வயது, ஒரே மகன் படிப்பு பி.ஏ., பி.எட். வேலைக்கு முயன்று கொண்டிருக்கிறோம். +2 வரை படித்த, சிகப்பான பெண் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். நிலம் மற்றும் தோப்பு மாத வருமானள் ரூ. 3000/-. பெட்டி எண் : 13583

■ **Wanted suitable graduate well to do Iyengar girl for boy aged 37, Sr. Auditor, A.G's Office, Chennai, Ayilyam, Thengalai, Athreya with good family background. Reply with horoscope and family details. Box No. 13584**

■ **Vadagalai Iyengar, Sadamarshna Gothram, Makam, 39/5.7" Central Govt. employee, unencumbered mutual divorcee, seeks suitable alliance, kalai no bar. Box No. 13585**

■ டெல்லியிலிருக்கும் தமிழக அய்யர் வரனுக்குக் குடும்பப்பாங்கான பெண் தேவை. பாரத்வாஜ கோத்திரம். ஹஸ்த நட்சத்திரம். வயது 21. தந்தை தனயன் ஆக இரண்டே பேர் கொண்ட குடும்பம். பெட்டி எண் : 13586

■ தெலுங்கு தேவாங்கர் பி.இ., எம்.பி.ஏ. 30/157, சென்னையில் பிரபல தனியார் கம்பெனியில் மானேஜர், பட்டம் படித்த ஆங்கிலம் பேசக்கூடிய அழகான பெண் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 13587

■ **Telugu Brahmin Velnadu, Thiruvadirai, 175 cms, 25/ B.E/16,000/- working in a reputed private firm seeks graduate employed girls from respectable family. Apply with horoscope to Box No. 13588**

■ வடமாள், ஸ்ரீவத்ஸ கோத்திரம், சதயம் 3 ஆம் பாதம், 5.4" பி.காம் + கம்ப்யூட்டர் ஹைதராபாத்தில் தனியார் கம்பெனியில் அக்கௌண்ட்ஸ் ஆபீசர் ரூ. 2500/- சம்பளம் பெறும் வரனுக்கு நல்ல குடும்பத்தை சேர்ந்த பட்டதாரி பெண் தேவை. ஜாதகம் மற்ற விவரங்களுடன் எழுதவும். பெட்டி எண் : 13589

■ **Wanted bride around 25 years for boy 13.12.1967, Vadamal, Bharadwajam doing business exports of Spcies in Cochin. Dowry not required. Contact with horoscope of girl to Box No. 13590**

■ அய்யர் 36 வயது சதயம், மௌத்கல்ய கோத்திரம் சென்னையில் ஆட்டோ டிரைவர், எஸ்.எஸ்.எல்.சி. மாதம் ரூ. 2000/- வருமானம். பெட்டி எண் : 13591

■ **Brahacharanam, Kousika Iyer B.Sc. Sadayam, 30/ 170/4500/- AIR and TV seeks graduate good looking pious home loving girl from decent family preferably employed. Send horoscope, Bio-data. Box No. 13592**

■ சைவ வெள்ளாளர், வயது 30, உயரம் 167 செ.மீ. படிப்பு B.Sc., PGDCA. மஸ்கட்டில் அக்கௌண்டன்டாக பணிபுரியும் நல்ல நிறமுள்ள அழகான மணமகனுக்கு அதே இனத்தைச் சேர்ந்த டிகிரி படித்த அழகான 23 வயதுக்குட்பட்ட பெண் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 13593

■ காரைக்காட்டார் பிள்ளை (சுத்த சைவம்) வகுப்பை சேர்ந்த 29 வயது நிரம்பிய ஒரு தனியார் கம்பெனியில் ரூ. 2000/- வரை வருமானமுள்ள இளைஞனுக்கு அதே வகுப்பை சேர்ந்த மணமகள் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 13594

■ தெலுங்கு விஸ்வகர்மா திருவாதிரை சௌமிக்குரிஷி கோத்திரம், சிவப்பு பி.இ./5.11"/7000/- சென்னையில் தனியார் நிறுவனத்தில் பணிபுரியும் வரனுக்கு அதே இனத்தில் பட்டப்படிப்புள்ள நல்ல உயரமும், நிறமும் உள்ள மணமகள் தேவை. விரைவில் கல்யாணம். ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 13595

■ **Pillai/Naidu intercaste parentage B.Com., HDSM (NIIT) 32/170/5000 Junior Officer Public Ltd. Company in Coimbatore wants good looking middle class family graduate working girl. Reply to Box No. 13596**

■ கௌரவமான குடும்பம். வடமாள், கர்கே, சித்திரை 38/180/3500/- M.A., B.Ed., B.LIS. ஆந்திராவில் ஜூனியர் காலேஜில் வேலை பார்க்கும் பையனுக்கு 28 - 32/160 பட்டதாரி வேலை பார்க்கும் fair குடும்பப்பாங்கான வடமாள்/பிரகசரணம் பெண் தேவை. பெட்டி எண் : 13597

■ **Wanted vegetarian fair girl for Senguntha Mudaliar boy 29/169/BBA (Final Year), Rs. 6000/- income, working in Neyveli Lignite Corporation. Subsects acceptable. Box No. 13598**

■ **Iyer, Kasiappa, Maham, 33 yrs./5.8"/SSLC/Rs. 2,800/ - private firm based Chennai seeks home loving bride. Horoscope and family details to be send. Also having side business. Box No. 13599**

■ **Vanniyakula Kshatriya, B.Com., PGHDSM, Software, Puradam, 29/186, own company decent income. Bangalore based seeks fair slim good looking graduate girl preferably computers. Caste no bar. Reply with horoscope to Box No. 13600**

■ **Madhwa Athreya, Sadayam, fair diploma and post diploma, Bangalore based computer engineer MNC 171 cms/29/15,000/- monthly seeks well employed girl. Bangalore phone No. 6620205. Box No. 13601**

■ ஆண் 60 (அறுபது) வயது இந்து தாரம் இழந்த வசதி உள்ளவருக்கு வாழ்க்கை துணைவி தேவை. விதவை உள்ளிட்ட சேவை மனப்பான்மை உள்ளவர்கள் முழு விவரத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 13602

■ வடமாள், பாரத்வாஜ கோத்திரம், ரேவதி 32 வயது படித்த தனியார் நிறுவனத்தில் நிரந்தர பணி ரூ. 3000/- மாத வருமானம் உள்ள ஐயர் பையனுக்கு நிரந்தர வேலையிலுள்ள மணமகள் தேவை. பெட்டி எண் : 13603

■ **Sozhiya Vellala Pillai, 33/5.10"/M.Sc. handsome, clean habits. Software Engineer in USA H1 Visa, getting greencard, invites well educated BE/MBBS/ MCA similar qualification, domestically trained, good looking girls, respectful family. Thiruvonam. Subsects no bar. Vegetarian preferred. Send horoscope to Box No. 13604**

■ இந்து. தாரமிழந்தவர் குழந்தையில்லை. வயது 41, சைவம், சென்னையில் பிரபல கம்பெனியில் வேலை. சம்பளம் ரூ. 5000/- சென்னையில் சொத்துக்கள் உண்டு. சிவப்பு நிறம். கெட்ட பழக்கம் எதுவும் இல்லை. இவருக்கு நடுத்தர குடும்பத்திலிருந்து நல்ல மணமகள் தேவை. பெட்டி எண் : 13605

■ **Vadama, Bharadwajam, Visakam, Bank Officer 33/ 175 seeks preferably employed transferable bride. Send horoscope to Box No. 13606**

**விளம்பர வாசகங்கள் அனுப்பி வைத்தபிறகு, அதில் திருத்தங்களோ, மாற்றங்களோ செய்வதற்குக் கண்டிப்பாக இயலாது.**

